# கல்கி

KALKI
1.6.2003
ரூ. 6.00

"அப்பாகிட்டேதான் முதலில் சொல்லுவா..."

-துர்கா ஸ்டாலின்

சப்புக் கொட்டு சமையல்!
-இலவச இணைப்பு

# கல்கி

1.6.2003

உள்ளே...



சச்சின் ஆல்பம்!

2,3

கீர்த்தி விலாசம்



84,85



அலட்டாத அம்மணி!

52,53

# பில்கேட்ஸா... யாரது?



• சச்சின்

ஆஸ்கார் விருது பெற்ற நடிகை ஹாலி பெரி 'பீப்பிள்' என்ற பிரபல பத்திரிகையின் அட்டைப் படத்தை பலமுறை அலங் கரித்தவர். (மக்கள் வாக் கெடுப்பில் முன்னணியில் இருக்கும் பிரபலத்தின் புகைப்படத்தை அட்டை யில் வெளியிடுவதுதான் இந்தப் பத்திரிகையின் வழக் கம்.) இவருக்கு யாராவது திருஷ்டி பூசணிக்காய் வாங்கிச் சுற்றியிருக்கலாம். அப்படி செய்யாததாலோ என்னவோ, வலது கையில் அடிபட்டுக் கொண்டு துடித் துக் கொண்டிருக்கிறார். கோதிகா என்ற திரைப்



• மாயாவதி



• பில்கேட்ஸ்

படத்தில் நடிப்பதற்காக கனடா சென்றிருந்தார் இவர். அதில் ஒரு குற்ற வாளியாக மாறும் மனநல நிபுணரின் வேடம் இவ ருக்கு! அதற்கான ஆக்ஷன் சீன் ஒன்றில்தான் இந்த விபத்து. 2002 வெளி யான ஜேம்ஸ்பாண்ட் (டை அனதர் டே) படப்பிடிப்பின்போதும் கண்ணில் இவர் அடிபட்டுக் கொண் டது குறிப்பிடத்தக்கது.

பிரபல இந்தி திரைப்பட இயக் குனரான மகேஷ் பட் (கவர்ச்சிக் கதாநாயகி பூஜா பட்டின் அப்பா என்றால்தான் இள வட்டங்களுக்குப் புரியும்) தமது அடுத்த திரைப்படத்தை பாகிஸ்தானில் எடுக்கப் போகிறாராம். 1947ம் ஆண்டில் நடைபெறும் கதை. இந்து முஸ்லிம் காதல் கதைதான் ('பம்பாய்' இரண்டாம் பாகம்?). இந்திய நடிகர்களோடு பாகிஸ்தான் நடிகர்களையும் நடிக்க வைக்கப் போகிறாராம். இரு நாடுகளும் கைகுலுக்கத் தயாராகும் செய்தி இவரை மகிழ்ச்சியில் ஆழ்த்தியிருக்கும்.

'நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள்?' - இப்படி ஒரு கேள்வியை ஒரு விமானப் பயணத்தின்போது தொழிலதிபர் டாட்டா, தமக்கருகில் அமர்ந்திருந்த சூப்பர் ஸ்டாரைப் பார்த்துக் கேட்டாராம். தாம் யார் என்பதை அவர் அறிய வில்லை என்பதை ரஜினியே ஒரு வார இதழில் குறிப் பிட்டிருந்தார். ரஜினிக்கானது பில்கேட்ஸுக்கும் ஆகியிருக் கிறது. ஒரு விருந்தில் பிரபல பாப் பாடகி ப்ரிட்னி ஸ்பியர் ஸிடம் "நான்தான் பில் கேட்ஸ், கம்ப்யூட்டர் ஆசாமி" என்று உலகின் அந்த மாபெரும் மைக்ரோஸாப்ட் கோடீஸ்வரர் அறிமுகம் செய்து கொள்ள, அந்தப் பாடகி இலேசான புன்னகையுடன் "சந்தோஷம். என் வலைத்தளத்தில் ஏதாவது உதவி தேவையென்றால் உங்கள் சேவையைப் பயன்படுத்திக் கொள்கிறேன்" என்றாராம்!

பிரிட்டனைச் சேர்ந்த சூப்பர் மாடல் நவோமி காம்பெல். தன் ஏக்கங்களை யாரிடமாவது மனம் விட்டுப் பேச வேண்டும், என்ற இவரது ஆசை சமீபத்தில் நிறை

வேறியிருக்கிறது. ஆஸ்கார் விருது பெற்ற பிரபல நடிகர் ராபர்ட் டி நீரோவின் அறிமுகம் கிடைத்ததில் புல்லரித்துப் போயிருக்கிறார் இவர். அவரும்தான். இருவருமாக ஒரு குடும்பமாகச் சேர்ந்து வாழ்வது என்று முடிவெடுத்திருக்கிறார்களாம். கல்யாணம் என்று நீங்களாக யூகித்துக் கொண்டால் அதற்கு வேறு யாரும் பொறுப்பல்ல!

**ச**ச்சின் டெண்டுல்கர் குறித்த ஒரு முழு வீடியோ ஆல்பம் இதுவரை வந்ததில்லை. இப்போது அப்படி ஒரு முயற்சி நடைபெறுகிறது. மும்பையைச் சேர்ந்த முப்பது பேர் அடங்கிய குழு ஒன்று இதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறது. கேஷவ்ராய் என்பவர் இதன் இயக்குனர். முதல் கட்டப் படப்பிடிப்புகளுக்காக இந்தோருக்கு வருகை தந்திருக்கிறார் சச்சின். பாடல்களெல்லாம் தயார்!

**வா**ஜ்பாய், குலுமணாலிக்குப் போக, புரட்சித் தலைவி ஐதராபாத் தொட்டுவிட்டுத் திரும்ப, மாயாவதியோ மிகப் பெரிய வெளிநாட்டு டூர் கிளம்பி விட்டார்!

அமெரிக்க - இந்திய பிசினெஸ் கவுன்ஸில் சார்பாக நியூயார்க்கில் நடைபெறும் கூட்டத்துக்காகச் செல்லும் மாயா மேடம், அப்படியே லண்டன், பாரீஸ், ஸ்விட்சர்லாந்து என ரவுண்டு வரப் போகிறாராம். அவருடைய கனவு ப்ராஜெக்டான அம்பேத்கார் பார்க் அமைப்பதற்கு ஐடியா தேற்றுவதற்காகவே, ஓர்லாண்டோவிலிருக்கும் டிஸ்னி வேர்ல்டையும் சுற்றிப் பார்க்கப் போகிறாராம்!



• அமீஷா

**‘பு**திய கீதை’ படத்தில் அமீஷாவின் வரவு அப்படியொன்றும் அலை கிளப்பவில்லை என்பதால், அம்மணி ஹைதராபாத்துக்கு மூட்டை முடிச்சுடன் கிளம்பிவிட்டதாகத் தகவல்... தமிழ்நாட்டுக்கு வரும் புயல் மழை எப்பவும், ஆந்திரா, ஒரிஸா என கரை கடப்பதுதானே வழக்கம். அமீஷா மட்டும் விதிவிலக்கா?

- குல்லூ. அனு



**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



6

4) சுமேரிய மன்னன் மெஸ்குலம்தகுவின் தங்கக் கிரீடம் (கி.மு.2500)

5) உருக் நகரில் கண்டெடுக்கப்பட்ட கி.மு. 3200 ஆண்டுக்குரிய ஒரு மீட்டர் உயரமுள்ள அலபாஸ்டர் ஜாடி.

1

6) அரச சமாதியில் கண்டெடுக்கப்பட்ட நரம்பிசைக் கருவியின் தலையாக அமைந்த தங்கக் காளை (கி.மு. 2500)

7) சுமேரிய மொழி எழுதப்பட்ட சுடுமண் வில்லை.



1) 'தெல் ஹமால்' ஆலயத்தின் வாயிலின் இரு புறமும் கம்பீரமாக நின்றிருந்த காவல் சிங்கங்களின் சுடுமண் சிலைகளில் ஒன்று.

2) உருக் நகர அகழ்வுகளில் கண்டெடுக்கப்பட்ட சுமேரியப் பெண்ணின் பளிங்குச் சிலை. (கி.மு. 3200)

3) அக்காடியச் சக்கரவர்த்தி ஸாகனின் செப்பு உருவச் சிலை. (கி.மு.2334)

இதெல்லாம் என்ன? சமீபத்திய அமெரிக்கத் தாக்குதலில் சீரழிந்து போன ஈராக் நாட்டின் கலைப் பொக்கிஷங்களின் சிறு பட்டியல் மட்டுமே!

பத்தாயிரம் ஆண்டுக்காலப் பெருவெளியில், சிறுகச் சிறுகச் சேகரித்த மானிட வரலாற்றின் சாதனைகளைக்

7



# ஒரு பிடி சாம்பல்!



• டபிள்யூ புஷ்

கூறும் நூறாயிரக் கணக்கான தொல் பொருட்களையும், தொல்லியல் கருவூலங் களையும் ஒரே வாரத்தில் மனித குலம் இழந்து நிற்பதைப் போன்ற சோகம் உலகில் வேறெதுவுமே இருக்க முடியாது.

பாரஸீக சைரஸ்ஸின் படையெடுப்பு களுக்கும், அலெக்ஸாந்தரின் ஆக்கிரமிப் பிற்கும், மங்கோலியர்களின் முரட்டுத் தாக்குதல்களுக்கும் தப்பிப் பிழைத்த இத்தொல்லி யல் கருவூலங்களை இன்று இழந்து விட் டோம்.

பாக்தாத்தின் பொருட்காட்சி நிலையமும், தொல்பொருள் காப்பகமும் கொண்டிருந்த கருவூலங்கள் எவ்வளவு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவையோ அத்தகைய முக்கியத்துவம் பாக்தாத் தேசிய நூல கத்திலும், ஆக்வாஃப் நூலகத்திலும் சேகரிக் கப்பட்டிருந்த பண்டைய அரேபிய, இஸ்லாமிய, பாரஸீக நூல்களுக்கும் தரப் பட்டிருந்தன.




மனித கரங்களால் எழுதி வைக்கப் பட்டிருந்த ஆயிரம் ஆண்டுகளுக்கு முற் பட்ட இஸ்லாமிய நீதி நூல்களும், மத ஆவணங்களும், இஸ்லாமிய அரச பதி வேடுகளும், அரேபிய மொழி இலக்கி யங்களும், குர்ஆனின் ஆயிரத்திற்கும் மேற் பட்ட புராதன கையெழுத்துப் பிரதிகளும் தீக்கிரையாகி விட் டன.

அமெரிக்காவின் மாஸ்ஸசூஸெட்ஸ், பென்ஸில்வேனியா, சிக்காகோ பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் சென்ற ஜனவரி மாதத்திலேயே எடுத்துக் கூறியிருந் தார்கள். ஈராக்கின் மெசொப்பத் தேமிய நாகரி கங்களின் தொன்மையை யும், இத்தொல்லி யல் காப்பகங் களின் முக்கியத்து வத்தையும், அமெரிக்கப் பாது காப்புத் திணைக் களத்திற்கு விளக்கி யிருந்தார்கள். அவற் றைப் பாதுகாக்க வேண்டியதன் அவசியத்தையும் எடுத்துக் கூறியிருந்த போதிலும் – அமெரிக்க விமானப் படையும், இராணு வமும் இந்த விஷயத்தில் அசிரத்தையாக இருந்துவிட்டது.




ஈராக்கின் எண்ணெய்க் கிணறுகளையும், குடோன்களையும் பாதுகாத்த அமெரிக்கப் படைகள் அந் நாட்டின் கலைக் களஞ்சி யங்களையும், தொல்பொருட் காப்பகங் களையும் ஒரு பிடி சாம்பலாக்கி விட்டது.

– டாக்டர் எஸ். தியாகராஜா
லண்டன்.

# விவேகமாய் ஒரு மிரட்டல்!

ஒவ்வொரு குறிப்பும் உணர்த்தும் விடையை எதிரே உள்ள கோடுகளில் நிரப்புங்கள். வட்டத்துக்குள் உள்ள எழுத்துக்களை மட்டும் ஒழுங்குபடுத்தினால் விடைப் பகுதியில் உள்ள குறிப்பு உணர்த்துவது கிடைத்துவிடும்.

1. தமிழகத்தில் உள்ள பறவைகள் சரணாலயம் ◯ _ _ _ _ _ _
2. நீரிழிவு நோய் என்பதை இப்படிக் குறிப்பிட்டால்தான் பலருக்குப் புரியும் _ _ ◯ _ _ _ _ _
3. இந்திரா காந்தியாக இந்த நடிகை _ _ _ _ ◯ _ _
4. இலவசம் ◯ _
5. 'தூள்' முனியம்மா பாட்டியின் ஊர் ◯ _ _
6. ராமகிருஷ்ண பரமஹம்சரின் பிரபல சீடர் ◯ _ _ _ _ _ _
7. இலவசக் கல்வி என்றதும் நினைவுக்கு வரும் தமிழக முன்னாள் முதல்வர் _ _ ◯ _

விடை : 'மானா'ல் மிரட்டப்பட்டவர்.

_ _ _ _ _ _ _

- ஜி.எஸ்.எஸ்.



விடைகள் :

1. வேடந்தாங்கல் 2. சர்க்கரை வியாதி 3. மனிஷா கொய்ராலா 4. ஓசி 5. பரவை 6. விவேகானந்தர் 7. காமராஜ்

விவேக் ஓபராய் (ஐஸ்வர்யா ராய் விவகாரத்தில் சல்மான் கானால் மிரட்டப்பட்டவர்)





# ரயில் இவரது உயிர்!

"டாக்டர் குரியன் வெண்மைப் புரட்சி செய்து கொண்டிருந்த சமயம் அது. நாடு முழுவதும் பால் கொண்டு செல்ல, டாங்கர்களை வடிவமைத்துக் கொடுக்கும் பணி எங்களிடம் தரப்பட்டது. உள்ளே நான்கு டிகிரி செல்ஷியஸ் குளிர்ச்சிக்காக, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டாங்கரில் எட்டு அங்குல தெர்மகோல் அமைத்தோம். இப்போதும் குஜராத்திலுள்ள ஆனந்திலிருந்து கொல்கத்தா வரை பால் கொண்டு செல்லப்படுகிறது. நாலு நாள் வரை கெடாது" என்றார் இந்திய ரயில்வேயின் தென்னிந்திய பொது மேலாளர் ஆனந்த். இரயில்வேயின் நூற்று ஐம்பதாவது விழாக் கொண்டாட்டங்களை, வெற்றிகரமாக முடித்துவிட்ட ஆனந்தத்தில் இருந்தார் ஆனந்த்.

இது போன்ற டாங்கர்களை, முன்பு நியூஸிலாந்திலிருந்து வாங்கிக் கொண்டிருந்தார்களாம். இப்போது நியூஸிலாந்து நம்மிடமிருந்து வாங்குகிறது!

"நூற்றாண்டு தாண்டிய பழைமையான இரயில்வே ஒர்க்ஷாப், ஜமால்பூரில் இருக்கிறது. அங்கே டீஸல் மெக்கானிஸம் முதல் எல்லாவற்றையும் கற்றுக் கொண்டேன். ஒரு தொழிலாளி எத்தனை கஷ்டப்படுவான் என்பதை, அந்தத் தொழிலைச் செய்து பார்த்தால் தான் தெரியும். தியரி வகுப்புகள் உண்டு. இரவு வகுப்புகள் கூட நடக்கும். இந்த நாலு வருடப் படிப்பு மற்றும் பயிற்சிக்குப் பிறகு, லண்டன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் மெகானிகல் என்ஜினியரிங் தேர்வு எழுதிப் பாஸாக வேண்டும். இல்லை என்றால் உத்தியோகம் போய் விடும். பெரம்பூர் லோகோ ஒர்க்ஸிலும் ஐ.சி.எஃப்பிலும் லக்னோ ஆராய்ச்சிக் கூடத்திலும் பல வருடங்கள் பணி செய்தேன். அந்த அனுபவம் எப்போதும் கை கொடுக்கின்றது" என்றார்.

சென்ற ஆண்டு ஜனவரியில் சென்னைக்கு வந்த ஆனந்த், அகலப் பாதைத் திட்டங்களிலும், இரட்டைப் பாதைத் திட்டங்களிலும் அதிக கவனம் செலுத்தி வருகிறார்.

இந்த ஆண்டு பயணிகளைத் திருப்திப் படுத்தும் ஆண்டாக இருக்குமாம். அதிகக் கணினி மயமாக்கப்பட்ட முன்பதிவு அலுவலகங்கள், கூடுதல் தகவல்கள் பெற வசதிகள், பயணிகள் தங்க வசதிகள், யாத்ரி நிவாஸ் அமைப்புகள் என பல வசதிகள். இன்டர்நெட் மூலம் டிக்கெட்டுகளைக் கோரினால், கூரியர் வழியாக வீட்டில் வழங்கும் வசதி தொடங்கிவிட்டது.

ரயில்வே தவிர, ஆனந்த் ஆர்வம் காட்டும் இன்னொரு துறை, இலக்கியம். ஆங்கிலோ – இந்திய சமூகத்தைப் பற்றியும், போபால் விஷ வாயு சம்பவம் பற்றியும் இவர் எழுதிய கட்டுரைகள், இவரை ஓர் எழுத்தாளராகவும் அடையாளம் காட்டுகின்றன.

சந்திப்பு: **எஸ்.வி.என்.**



# 'அம்மா'ன்னா சும்மாவா?

அம்மா - மகள் உறவு, அது ஒரு தவி சுகம்! இன்றைய அம்மாவுக்குப் போன தலைமுறை அம்மாவைவிட டென்ஷன்கள் அதிகம். தவிர நேற்றைய மகளைவிட இன்றைய மகள்களுக்குப் பொறுமையும் பொறுப்புணர்வும் குறைவு என்கிற குற்றச்சாட்டும் கணிசமான வீடுகளில் உண்டு. அப்படியா? சில வீடுகளுக்குள் புகுந்து பார்க்க முடிவெடுத்தோம்.



* துர்கா ஸ்டாலின் - செந்தாமரை

திருமதி. துர்கா ஸ்டாலின் மற்றும் அவரது மகள் செந்தாமரையை நாம் சந்தித்தது தற்செயலாக அன்னையர் தினத்தன்று.

அன்னையர் தினம் என்பதால் அம்மாவுக்கு எதாவது ஸ்பெஷலாக வாங்கிக் கொடுத்தீர்களா என்று செந்தாமரையைக் கேட்டபோது, "இதுபோன்ற தினங்களில் தான் அம்மாவுக்கு வாழ்த்துச் சொல்ல வேண்டும், பரிசளிக்க வேண்டும் என்பதிலெல்லாம் எனக்கு நம்பிக்கையில்லை'' என்றார் சட்டென்று. கூடவே "மனத்தில் தோன்றும் எதையுமே பகிர்ந்து கொள்வது என்பது அம்மாவிடம்தான் சாத்தியம். அப்படியிருக்க குறிப்பிட்ட வார்த்தைகளிலே தான் அன்பையோ நெருக்கத்தையோ வெளிக்காட்டிக்கனுமா என்ன?" என்றார்.

மகளின் அருகில் உட்கார்ந்திருந்த துர்கா "இதுதாங்க எங்க தலைமுறைக்கும் இவங்களுக்கும் இருக்கிற முக்கிய வித்தியாசம். என் மகளாலே தான் நினைக்கும் எதையும் என்னிடம் பேச முடியும். ஆனால் என் அம்மாவிடம் நான் இப்படியெல்லாம் பேசியதில்லை. ஒரு வேளை கிராமப் பின்னணியில் நான் வளர்ந்ததுகூட இதற்குக் காரணமாக இருக்கலாம். எங்க தலைமுறையில் பெண்களைக் கட்டுப்பாட்டோடு வளர்த்தார்கள். இப்போது தேவைப்பட்ட சுதந்திரத்தைக் கொடுக்கிறோம்" என்றார் துர்கா.

அண்ணா பல்கலைக் கழகத்தில் பொறியியல் இறுதியாண்டு படிக்கிறார் செந்தாமரை. "ப்ளஸ் டூ முடிச்சதும் பி.எஸ்.ஸிதான் படிப்பேன்னு ஒத்தைக்கால்லே நின்னா. நானும் இவங்கப்பாவும்தான் "நல்ல மார்க் வாங்கியிருக்கியே. பி.ஈ. பண்ணேன்னு கட்டாயப்படுத்தி சேர்த்தோம். முதல் வரு




● லலிதா - சுசரிதா

ஷம் கொஞ்சம் முகத்தைத் தூக்கிக் கிட்டுதான் இருந்தா. அப்புறம் சரியாயிடுச்சு" என்கிறார் துர்கா. வருங்காலத்தில் பிஸினஸ் துறையில் ஈடுபட ஆர்வம் என்பதால் எம்.பி.ஏ. படிக்கப் போகிறாராம் செந்தாமரை. "அவள் விருப்பப்படி செய்யலாம். இந்த முடிவிலே நாங்க தலையிட மாட்டோம்" என்கிறார் துர்கா.

செந்தாமரையின் எளிமையும் இரக்க சுபாவமும் அவர் அம்மாவுக்குப் பிடித்தமானவை. "ஆனா சரியா சாப்பிடாம அவ பிடிவாதம் பிடிக்கும்போது கோபம் வரும்."



● வித்யா - பாவ்னா

"அம்மாவிடம் எல்லாமே பிடிக்கும். ஒன்றைத் தவிர, அவர் ஒரு டென்ஷன் பார்ட்டி." இது தாமரையின் தீர்ப்பு.

தகவல் தொடர்பு என்பது யாரிடம் அதிகம், அப்பாவிடமா அம்மாவிடமா? "இருவரிடமும்தான்" என்று தாமரை தொடங்கும்போதே "அப்பாகிட்டதான் எதையுமே முதலில் சொல்லுவா" என்றார் துர்கா புன்னகையுடன். "ஆனா அப்பா அதை உடனடியாக அம்மாவிடம் சொல்லிடுவாரு. இல்லேன்னா "அம்மாகிட்ட இதைக் கேட்டுக்கோ" என்று சொல்லிடுவாரு" என்கிறார் தாமரை.

வித்யா பாலகிருஷ்ணனும் மாறி வரும் அம்மா - மகள் உறவுமுறை பற்றிக் குறிப்பிட்டார். இவரது மகள் பாவ்னாவும் கல்லூரி மாணவிதான்.

"இதைச் செய்யலாம் இதைச் செய்யக் கூடாது என்று எங்களுக்குத் தெளிவான எல்லைக்கோடுகள் வரையறுக்கப்பட்டிருந்தன. அவற்றை அப்படியே (பிடித்தோ பிடிக்காமலோ) ஏற்றுக் கொண்டோம். ஆனால் இன்றைய இளம் பெண்கள் கேள்வி

கள் கேட்காமல் எதையும் ஏற்ப தில்லை. நிறைய விவாதம் செய் கிறார்கள்.

இதில் தவறில்லை. அவர்களது சூழலும் வித்தியாசமானதுதானே? எங்கள் அம்மாக்கள் வீட்டைக் கவனித்துக் கொள்வதில் மட்டுமே கவனம் செலுத்தினார்கள். ஆனால் இன்றைய அம்மாக்கள் பலரும் வேலைக்குப் போவதால், பள்ளி அல்லது கல்லூரியிலிருந்து மகள் வீடு திரும்பும்போது அம்மாவின் அண்மை இருப்பதில்லை. இப்படிப் பட்ட மாறுபாடான சூழலை மகளுக்கு ஏற்படுத்திவிட்டு, அவள் மட்டும் அடங்கி ஒடுங்கி இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது சரியா?

இன்றைய அம்மா மனத்தில் கொள்ள வேண்டிய முக்கிய விஷயம் ஒன்று உண்டு. எல்லாவற்றை யுமே மகளுக்கு எடுத்துச் சொல்லிப் புரிய வைக்க வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டாம். சிலவற்றை அவளே அனுபவப்பட்டு அறிந்து கொள்ளட்டும் என்று விட்டுவிட வேண்டியதுதான். கருத்து வேறு பாடு வலுத்தால் ஒரு விஷயத்தின் நன்மை தீமைகளை எடுத்துச் சொல்லிவிட்டு, முடிவை அவள் கையில் விட்டுவிடலாம்.

இந்தக் காலப் பெண்களுக்குத் தன் அம்மாவிடம் பாசம் உள்ளூர இருக்கிறது. ஆனால் அதை வெளியில் காட்ட வேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறார்கள். மரியாதைகூட வார்த்தைகளில் வெளிப்பட வேண்டுமென்பது கட்டாய மில்லை என்று எண்ணுகிறார்கள். அவ்வளவுதான். மற்றபடி உறவு களில் எந்தவித புதிய சிக்கலு மில்லை" என்றார் வித்யா பால கிருஷ்ணன்.

**ந**டைமுறையில் அம்மாவுக்கும் டீனேஜ் மகளுக்குமிடையே ஏற்படக்கூடிய சிக்கல்களை எப்படிச் சமாளிக்கலாம்? மனநல மருத்துவர் டாக்டர் என்.ரங்கராஜனிடம் கேட்டோம்.

"பழைய தலைமுறை அம்மா மகளைவிட இந்தத் தலைமுறை அம்மா மகளிடையே நெருக்கம் அதிக மாகத்தான் இருக்கிறது. மனம் விட்டுப் பேசிக் கொள்வது அதிகமாகியிருக்கிறது. ஒரு விதத்தில் பார்க்கப் போனால், மனம்விட்டுத் திட்டிக் கொள் வதுகூட அதிகமாகியிருக்கிறது என்று கூறலாம்.

டீனேஜ் பெண்களுக்கு தங்கள் அம்மாவிடம் உள்ள பெரும் குறை என்னவென்றால் "அம்மா என்னோட பேசமாட்டேன்றாங்க" என்பதாக இருக்கும். அம்மாவைக் கேட்டால் "காலையிலே இருந்து உன்கூடத்தானே இருக்கேன்" என்பாள் அழாக்குறையாக.

பிரச்னை இதுதான். அம்மாவைப் பொருத்த வரை "இன்னும் ஏன் குளிக்காம இருக்கே? டிரஸ் பண்ணிக்கோயேன். சாப்பிட வா" என்பதெல்லாம் பேச்சுதான். ஆனால் மகளைப் பொருத்தவரை இவையெல்லாம் கட்டளைகள் மற்றும் ஆலோ சனைகள். தவிர மகளைப் பொருத்தவரை அம்மா தன்னிடம் பேசவேண்டும் என்பது "அம்மா தான் கூறுவதைக் காது கொடுத்துக் கேட்க வேண்டும்" என்பதுதான். அவள் கூறுவது சீரியஸ் விஷயமாக இல்லாமல் இருக்கலாம். தன் தோழி வழக்கமாக என்ன உடை அணிகிறாள் என்பது போன்ற சாதாரணமான (அம்மாவுக்கு இதைத் தெரிந்து கொள்வதால் எந்தப் பலனும் இல்லை என்பது போன்ற) தகவலாக இருக்கலாம்.

குடும்பத்தின் கலாசாரம் மற்றும் நட்பு வட்டம் ஆகிய இரண்டுமாகச் சேர்ந்து டீனேஜ்



• உமா - சரண்யா

**தொ**லைக்காட்சிப் பிரபலமான உமா பத்மநாபனும் டீனேஜ் மகளுக்குத் தாய்தான். "சின்ன வயதிலிருந்தே அம்மா

பெண்களை இழுக்கின்றன - பெரும்பாலும் எதிரெதிர் திசைகளில்! என்றாலும் அவளது நட்பு வட்டத்திலிருந்து அவளைத் தனிமைப்படுத்தக் கூடிய செயல்களை அம்மா செய்யக் கூடாது. உதாரணமாக மகளின் தோழிகள் அவ்வப்போது கும்பலாக சினிமாவுக்குப் போகிறார்கள் என்றால், அரிதாகவாவது தன் மகளையும் அதில் பங்கேற்கவிட வேண்டும். இல்லாவிட்டால் "ஏய், அவளைக் கேட்கவே வேணாம். அம்மா அனுப்ப மாட்டாங்கன்னு சொல்லி தட்டிக் கழிச்சிடுவா" என்பது போன்ற விமர்சனங்கள் எழும். இப்படி, தன் நட்பு வட்டத்திலிருந்து தனிமைப் படுத்தப் பட்டால் இதற்குக் காரணமான அம்மாவை அந்த மகள் மன்னிக்க மாட்டாள். அம்மாவுக்கும் மகளுக்குமிடையே அப்புறம் கடும் உரசல்கள்தான்.



• டாக்டர் ரங்கராஜன்

அதேபோல் நடைமுறைக்கு ஒத்துவராத நிபந்தனைகளையும் போடக் கூடாது. நாகரிகமான அம்மா தன் மகளை டிஸ்கோவுக்கு அனுமதித்துவிட்டு அதே சமயம் "ராத்திரி ஒன்பது மணிக்குள்ளே வீட்டுக்கு வந்துடணும்" என்றால் எப்படி?

மகளின் நட்பு வட்டத்தின்மீது பல அம்மாக்களுக்கு ஒரு சந்தேகப் பார்வை உண்டு. சரியான தோழிகள் வட்டத்தில்தான் என் மகள் இருக்கிறாளா என்பது வெகு நியாயமான கேள்வி. உங்கள் மகளிடமே கேட்கலாம். "என்ன அந்த சினேகிதன் அல்லது சினேகிதி இப்படி இருக்கா?" என்று. இதன்மூலம் ஒன்று மகளிடமிருந்து உங்களுக்குத் திருப்திகரமான ஒரு பதில் கிடைக்கும். அல்லது மகளை அந்தக் கோணத்தில் யோசிக்க வைக்கிறீர்கள். அதுவும் நல்லதுதான். ஆனால் விமர்சனத்தை மிகவும் கொச்சைப் படுத்திவிடாதீர்கள். "அந்தப் பையனைப் பார்த்தாலே அருவருப்பா இருக்கு. அறையணும் போல இருக்கு" என்று கூறினால் மகளுக்கு உங்கள்மீதுதான் தாங்க முடியாத கோபம் வரும். அந்த நண்பனுடனான சந்திப்புகளை வருங்காலத்தில் வீட்டுக்கு வெளியே வைத்துக் கொள்வாள். இதில்தான் பிரச்னைகள் முளைவிடும்.

பொதுவாகவே நீங்கள் பேசுவதை உங்கள் மகள் மனப்பூர்வமாகக் கேட்க வேண்டும் என்றால் இதோ சில ஆலோசனைகள். மகள் டீனேஜை எட்டட்டும் என்று காத்திருக்காமல், அதற்கும் முன்பிருந்தே அவளிடம் பல விஷயங்களைப் பகிர்ந்து கொள்ளுங்கள். அப்போது அவள் மனம்விட்டு உங்களிடம் பேசத் தொடங்குவது டீனேஜ் பருவத்திலும் தொடரும். டீனேஜ் பருவத்தில் அம்மாவின் அனுபவபூர்வமான வார்த்தைகளைவிட, தன்னைவிட ஒரே வயது அதிகமான ஒரு தோழியின் ஆலோசனைக்கு எக்கச்சக்க முக்கியத்துவம் கொடுப்பாள் உங்கள் மகள். இதை சகித்துக் கொண்டுதான் ஆக வேண்டும்.

என்றால் எனக்கு பயம்தான். இப்போதுகூட அந்த பயம் உண்டு. ஆனால் என் மகளுக்கு என்னிடம் பயம் கிடையாது. இதுதான் இன்றைய அம்மாக்களின் பொதுவான நிலை. ஒரு விதத்தில் இது நல்லது என்றுதான் தோன்றுகிறது. பயம் இருக்க இருக்க, எதையும் மறைக்கத் தோன்றும். ஏதாவது பாடத்தில் கொஞ்சம் மதிப்பெண் குறைந்தால் அதை முடிந்தவரை தள்ளிப்போட்டுதான் அம்மாவிடம் சொல்வேன். ஆனால் இந்தக் கால இளம் பெண்கள் நேரடியாக அம்மாவிடம் செய்தியை உடைத்துவிட்டு "நான் எவ்வளவோ படிச்சேன். இருந்தாலும் இப்படி ஆச்சு" என்று கண்கலங்க, அம்மா அவளை சமாதானப்படுத்தத் தொடங்கி விடுகிறாள். அதாவது திட்டுவாங்க வேண்டிய நிலைமையை அப்படியே மாற்றி அமைக்க முடிகிறது இந்தக் காலப் பெண்களுக்கு.

குடும்பம் என்பதன் மதிப்பீடுகளும் மாறிவருகின்றன. கல்லூரி மாணவியான என் மகள் சரண்யாவுக்கு மனமுதிர்ச்சி உண்டு. என்றாலும் இந்தக் கால அம்மாக்களுக்குச் சில சங்கடங்கள் இருக்கத்தான் செய்கின்றன. கலாசாரம் மாறிவருகிறது. அந்தக் காலத்தில் மாலை ஆறு மணிக்குமேல்

எக்காரணம் கொண்டும் நாங்கள் வெளியே தங்கிவிட முடியாது. ஆனால் இப்போதோ "தோழிக்குப் பிறந்தநாள் விழா. சாப்பிடக் கூப்பிட்டிருக்கா" என்று இரவு எட்டு மணிக்குக் கிளம்புகிறார்கள். இதுபோன்ற சுதந்திரங்களைப் பறிக்கவும் முடியாது. அளவுக்கு அதிகமாக அனுமதிக்கவும் முடியாது. இரண்டுக்கும் நடுவே சரியாக பேலன்ஸ் செய்யும்போதுதான் அம்மா - மகள் உறவு சிக்கலின்றி அமைகிறது.

இதுபோன்ற விஷயங்களில் அம்மா தன் மகளிடம் மனம் விட்டுப் பேசுவதுநல்லது. "டீனேஜில் சில ஈர்ப்புகள் இருக்கத்தான் செய்யும். ஆனால் அதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் ஆரோக்கியமான பாதையில் முழு கவனத்தையும் செலுத்தினால், நாளைக்கே சமூகத்தில் ஒரு மரியாதைக்குரிய இடத்தை அடைந்ததும் உனக்குப் பிடித்த வற்றில் ஈடுபடலாம். அப்போது மனதும் பக்குவப்பட்டுவிடும்" என்கிறார் உமா.

பத்திரிகை ஓவியர் லலிதா தியாகராஜனின் கருத்து இது :

"மகள் செய்யும் சிறு தவறுகளைக் கூட குழந்தையின் குறும்பு போல ரசிக்கக் கற்றுக் கொண்டால் பிரச்னைகள் குறைந்துவிடும்.

"என் மகள் சுசரிதா இறுதி ஆண்டு பட்டப்படிப்பு படிக்கிறாள். தன் தோழிகளோடு திரிபுரா போன்ற இடங்களுக்குச் சுற்றுலா சென்றுவரப் போவதாக அவள் கூறியதும், சம்மதித்து விட்டேன். சந்தோஷப்பட்டாள். பிறகு "இது பற்றி உனக்குக் கவலையில்லையா?" என்று கேட்டாள். என் மகளைப் பற்றியும் நம்பிக்கை உண்டு. அவளது தோழிகள் வட்டமும் எனக்குத் தெரிந்தது தான் என்னும்போது இதில் கவலைப்பட என்ன இருக்கிறது? அதே போல எல்.கே.ஜி. யிலிருந்தே அவள் வகுப்பில் படித்துவரும் மாணவர்களோடு அவள் குரூப் ஸ்டடீஸ் செய்தால் என்ன தவறு? ஆனால் அதே சமயம் எப்போதாவது படிப்பதற்காக யார் வீட்டிலாவது தங்க நேரிட்டால் அது சக மாணவியின் வீடாக மட்டுமே இருக்க வேண்டும் என்பதிலும் டிஸ்கோ போன்ற சமாசாரங்கள் கூடவே கூடாது என்பதிலும், கட்டுப்பாடுகள் உண்டு. பிற சுதந்திரங்கள் கொடுப்பதால் இந்தக் கட்டுப்பாடுகளை அவளும் முழுவதுமாக மதிக்கிறாள்.

"அதே சமயம் அளவுக்கதிகமான சுதந்திரமும் ஆபத்தானது. தவறுகளுக்கு வழிவகுக்கும் என்பது மட்டுமல்ல, தன் அம்மாவுக்கு தன்னைப் பற்றிய அக்கறையில்லை என்ற எண்ணம்கூட மகளுக்கு வந்துவிடும்."

**- ஜி.எஸ்.எஸ்.**

அட்டை, படங்கள் : **யோகா**

# வாழ்த்துங்க வாத்தியாரே!



**சொ**ந்த ஊர் பெங்களூர். ஆனால் வளர்த்து நட்சத்திர அந்தஸ்து கொடுத்தது தமிழ் சினிமா ஆச்சே! சொந்த மண்ணா, வந்த மண்ணா என்று மனசுக்குள்ளேயே விவாதம் நடத்திய அந்த 'ராஜ்' நடிகர், காவேரி நீருக்காக நடந்த நெய்வேலி போராட்டத்தில் கலந்து கொள்ளாமல் டேக்கா கொடுத்துவிட்டார். தமிழில் படங்கள் இல்லாத நிலையில், தெலுங்குக் கரையோரமாக ஒதுங்கினார். 'கட்கம்' என்ற தெலுங்குப் படம் வெள்ளி விழா நோக்கி ஓடவே... டப்பிங் தேவதையைத் துணைக்கு அழைத்துக் கொண்டு மீண்டும் கோலிவுட் பக்கம் சாய்ந்திருக்கிறார்.

'திரு மாணிக் பாட்ஷா' என்று மொழி மாற்றம் செய்திருப்பதோடு, அந்த வி.ஐ.பி.க்கு போன் செய்து, "உங்க பேரை என் படத்தோட டைட்டிலுக்கு வைச்சுக்கப் போறேன். உங்க அனுமதியும் ஆசியும் தேவை." என்று உருகினாராம்.

பிரகாஷ் ராஜ்தான் அந்த ராஜ் நடிகர் என்பதை ஊகித்திருப்பீர்கள். அந்த வி.ஐ.பி.? பிஞ்சுக் குழந்தைக்கே தெரியுமேங்க.

பி.கு. : சம்பந்தமேயில்லாமல் சோனாலியின் படம் எதற்காக என்று வியக்க வேண்டாம். 'திரு. மாணிக் பாட்ஷா' படத்தின் கதாநாயகி இவர்தான்.

**- அனு**

டேய்! வாடா ஒண்டிக்கு ஒண்டி....

விட்டேனா பாரு...

# கழ(ல)க அரசியல்!

"எனக்கு ஆறுதல் சொல்லிக் கொள்ளும் ஆற்றல் எனக்கே இல்லையே!" என்று கருணாநிதி புலம்புகிறார்.

பிரதமர் இரங்கல் செய்தி அனுப்புகிறார்.

ஸ்டாலின் அமெரிக்காவிலிருந்து விரைந்து திரும்புகிறார்.

த.கிருட்டிணன் கொலை அனைவரையும் உலுக்கியிருக்கிறது.

ஆனால், மதுரை அரசியலின் முக்கியப் புள்ளியும் மு.கவின் மகனுமான மு.க.அழகிரி மட்டும் கிருட்டிணனுக்கு இறுதி மரியாதை செலுத்த வரவில்லை! இவர் சந்தேகத்தின் அடிப்படையில் கைதாகியிருப்பதை கருணாநிதி, அநீதி என்கிறார்!

மதுரைப் பகுதியில் ஸ்டாலின் ஆதரவாளர்களுக்கும் அழகிரி ஆதரவாளர்களுக்கும் இடையேயான பிணக்கு ஊரறிந்த விஷயம். அழகிரி, அந்தப் பகுதி தி.மு.க. ஆதரவாளர்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வருவதும் ஊரறிந்த விஷயம்.

இந்நிலையில், சந்தேகத்தின் நிழல் அழகிரியின் ஆட்கள் பேரில் விழுவதும், ஸ்டாலின், கிருட்டிணன் ஆதரவாளர்கள் ஆத்திரமடைந்து அவர்கள் பேரில் குற்றம் சாட்டுவதும் எதிர்பார்க்கக் கூடியதுதான்.

கிருட்டிணன் கொலையுறுவதற்கு இரு தினங்களுக்கு முன்பு, சென்னை தாம்பரம் பகுதியைச் சேர்ந்த அ.தி.மு.க. பிரமுகர்



கல்கி



2003 ஜூன் 1
சுபானு வைகாசி 18
மலர் : 61
இதழ் : 44

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




முத்து கொலை செய்யப்பட்டிருக்கிறார். இந்தக் கொலைக்கும் உட்கட்சிப் பூசலே காரணம் என்று பேச்சு அடிபடுகிறது.

வழக்கு பதிவாகி, விசாரணை நடந்து, தீர்ப்பு வெளியாகும் வரை தனியொருவர் மீது நாம் குற்றம் கூற முடியாது. ஆனால், கலக அரசியலைத் தூண்டிவிட்டு வளர்த்து, இப்போது வளர்த்த கடா மார்பில் பாயக் கண்டு கலங்கியிருக்கும் கழக அரசியல்வாதிகளிடம் நமக்கு எவ்வாறு அனுதாபம் பிறக்கும்?!

தற்போதைய அரசியல் சூழ்நிலையில் சகிப்புத்தன்மை, மாற்றுக் கருத்துக்கு மதிப்பு போன்ற அடிப்படை ஜனநாயகப் பண்புகளே வெகுவாகக் குறைந்து போய்விட்டன. போதும் போதாததற்கு, அரசியல்வாதிகள் பகிரங்கமாக ரௌடிப் படைகளை ஆதரிக்கிறார்கள்; தங்களை எதிர்ப்போரை அடக்கவும் ஒழிக்கவும் அப்படைகளை அச்சமின்றிப் பயன்படுத்துகிறார்கள். காவல்துறை, ஆளுங்கட்சியின் கைப்பாவையாகி நீதி நேர்மைக்கு வழியின்றிச் செய்துவிடுகிறது.

அரசியல் என்றாலே தியாகம், பொது நலன், சேவை என்ற பொற்காலம் ஒன்று இருந்தது.

சுதந்திரம் அடைந்து கால் நூற்றாண்டு ஆன பிறகு, அந்த நிலை மாறி, அரசியல் என்றால் சுய நலம், லஞ்சம் - ஊழல் என்ற நிலை உருவாயிற்று.

சுதந்திரப் பொன்விழா தருணத்தில், அரசியலின் விலாசம், 'C/o சூது - வாது, சூழ்ச்சி' என்று மாறி, வன்முறையாளர்களுக்கு அடைக்கலமும் தரலாயிற்று.

இப்போது, ஒண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியை விரட்டிய கதையாக, வன்முறையாளர்களின் கைதான் ஓங்கியிருக்கிறது. கழகங்களுக்குள்ளே ஊடுருவி வேரூன்ற அனுமதிக்கப்பட்டுள்ள வன்முறைக் கும்பல்கள், கட்சித் தலைமைக்கே சவாலாக வளர்ந்துவிட்டன.




முத்துவின் மரணத்துக்கு ஜெயலலிதா அனுதாபம்தான் தெரிவிக்க முடிகிறது.

கிருட்டிணன் கொலையுண்டது அறிந்து கருணாநிதியால் புலம்பி அரற்றத்தான் முடிகிறது.

வன்முறையாளர்களைக் கண்டனம் செய்து, கடுமையாக எச்சரிக்க ஏன் கட்சித் தலைவர்கள் முன்வருவதில்லை?....

முத்துவின் கொலையும் சரி, கிருட்டிணன் கொலையும் சரி, கட்சி வேறுபாடுகளைக் கடந்து கண்டிக்கப்பட வேண்டியவை. ஆனால் சம்பந்தப்பட்ட கட்சித் தலைமைகள் கூட இவற்றைக் கண்டனம் செய்யவில்லை. வளரும் வன்முறை குறித்து கவலை தெரிவிக்கவில்லை.

வன்முறையை ஏவிவிடும் எந்தத் தலைவருக்கும் பிற்காலத்தில் அதைக் கட்டுப் படுத்தும் பலம் இராது; அதனைக் கண்டனம் செய்யும் தார்மிக உரிமையும் இராது.

நம்மை எதிர்ப்போரையும் நமது வெற்றிக்குக் குறுக்கே நிற்போரையும் கண்ணை மூடிக்கொண்டு வெட்டித் தள்ளலாம்; அச்சமூட்டி மக்களைக் கட்டுக்குள் கொண்டு வரலாம்; இந்தக் குறுக்கு வழிகளில் அரசியல் பதவி, அதிகார பலம், கட்சித் தலைமை யாவற்றையும் அனுபவிக்கலாம் என்ற பயங்கரமான சூழலை வளர்த்து விட்டிருக்கும் அரசியல்வாதிகள், தங்கள் துறையை மட்டுமின்றி ஒட்டுமொத்த சமுதாயத்தையும் சீரழித்திருக்கிறார்கள். பிற துறைகளில் தோன்றும் குற்றங்குறைகளைக் காட்டிலும் அரசியலில் உள்ள குற்றங்குறைகள்தான் சமுதாயத்தை உடனடியாக பாதிக்கும். காரணம், அரசியல் தலைவர்களைத்தான் பெரும்பான்மை மக்கள் வழிகாட்டிகளாகக் கொண்டு பின்பற்றுகிறார்கள்; வழிபடும் அளவுக்குக் கூடச் செல்கிறார்கள். அந்த வழிபாடு அப்படியே வன்முறை வழிபாடாக மாறிவிடும் அபாயத்தில் இன்று இருக்கிறோம். அரசியல்வாதிகள் என்ன செய்யப் போகிறார்கள்? ○



• லஞ்சம் கொடுத்த அதிகாரி அனுராக் வர்தன்

• ஆர். பெருமாள் ஸ்வாமி



• செஞ்சியார்

# கெஞ்சினார் செஞ்சியார்!

"அரசியலில் நேர்மை, பொது வாழ்வில் தூய்மை, லட்சியத்தில் உறுதி" – இது தான் ம.தி.மு.கவின் கோஷம். அக்கட்சியைச் சேர்ந்த முன்னாள் அமைச்சரது உதவியாளர் பாபு என்கிற பெருமாள்சாமி, லஞ்சப் பணம் நான்கு லட்சத்துடன் கையும் களவுமாகப் பிடிபட்டிருக்கிறார்! செஞ்சியாரின் நாற்பது வருட அரசியல் வாழ்க்கை முடிவுக்கு வந்து விடும் என்கிறார்கள்.

மாட்டிக் கொண்ட பாபு, ம.தி.மு.க. வட்டாரத்தில் எல்லோருக்கும் நன்றாக அறிமுகமானவர். இவருக்கும் சொந்த ஊர் கலிங்கப்பட்டிதான். வைகோ வீட்டுக்குப் பக்கத்து வீடு. இவர் ஒரு முன்னாள் ராணுவ இலாகா ஊழியர். 1990லிருந்து தில்லியில் வசிக்கிறார். தில்லியில் வைகோவுக்கு, உதவியாளர் போலச் செயல்பட்டு வந்தார். பாபு சர்ச்சையில் மாட்டியிருப்பது இது முதல் முறையல்ல; பல அ.இ.அ.தி.மு.க. எம்.பிக்களுடன் நெருக்கமாக இருந்தவர்.

எம்.பிக்களின் டெலிபோன், கேஸ் கோட்டா, சர்ச்சைக்குள்ளாகி ஊழல், விசாரணை என்று நடைபெற்றபோது பாபுவின் பெயரும் அடிபட்டது.

கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த அ.தி.மு.க. எம்.பி. ஒருவரின் கடிதத்தை கொண்டு, முறை கேடாக அமெரிக்க விசா வாங்க முயன்றதாகவும் இவர் பேரில் குற்றச்சாட்டு உண்டு. இப்போது லஞ்ச வழக்கில் சிக்கிக் கொண்டிருக்கிறார்.

இதற்கு முன்பு இவரைக் காப்பாற்றிய அரசியல் பிரமுகரே சிக்கலில் இருப்பதால், பாபு மீண்டு வருவது சற்றுக் கடினம் தான் என்கிறார்கள்.

இந்த நான்கு வருட காலத்தில் ஐந்து உதவியாளர்கள் செஞ்சியாரிடம் பணிபுரிந்து மாற்றலாகிச் சென்று விட்டார்கள். நிலைத்தவர்கள் செஞ்சியைச் சேர்ந்த அண்ணாதுரை என்பவரும் பாபுவும்தான்.

பாபு தில்லியில் கைதானபோது திருச்சியில் இருந்தார் செஞ்சியார். தா.கிருட்டிணன் வீட்டுக்குச் சென்று துக்கம் விசாரித்து வருவதாக இருந்தது. ஆனால் அதை ரத்து செய்து விட்டு சென்னைக்கு வந்தார். அவருக்கு மிகவும் வேண்டிய, தி.மு.கவைச் சேராத, ஆனால் உதய சூரியன் சின்னத்தில் வெற்றி பெற்ற எம்.பி. ஒருவரின் வீட்டில் ஆலோசனை நடத்தினார்.

"ராஜினாமா செய்வதைத் தவிர வேறு வழியில்லை" என்ற நிலையில் பிரதமரிடம் கெஞ்சினாராம் செஞ்சி. "உங்களைக் காப்பாற்றிக் கொள்ள ராஜினாமா செய்வதே நல்லது" என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டாராம் பிரதமர்.

தி.மு.க., மத்திய அரசியலிலிருந்து வெளி வந்தால் ம.தி.மு.க.வும் வெளியேறிவிடும் என்று பேச்சு அடிபட்டபோது, 'அது போன்ற நிலையில் செஞ்சியார் வரமாட்டார். பதவியைத் தக்க வைத்துக் கொள்ள வேறு கட்சிக்குத் தாவுவார்' என்றெல்லாம் கூறப்பட்டது!

– சஞ்சயன்

படம்: சௌரா

# சாமி

முறுக்கான உடலமைப்போடு திருநெல்வேலி மார்க்கெட்டுக்குள் ரவுடியாய் நுழையும் விக்ரம், பீரில் முகம் கழுவி, பல் துலக்கி, இட்லிக்கும் அதையே ஊற்றிப் பிசைந்து சாப்பிடும்போது வயிற்றைக் குமட்டுகிறது. ஆனால் தியேட்டரில் ரசிகர்களின் விசிலும் கரகோஷமும் தூள் பரக்க, அடுத்த வினாடி வந்திருப்பது ரவுடியல்ல, 'அருச்சாமி அசிஸ்டெண்ட் கமிஷனர் ஆஃப் போலீஸ் என்று விக்ரம் பிரகடனம் செய்ய, நாம் எதிர்பார்த்தது நடக்கிறது. அடுத்தடுத்த காட்சிகளும் அப்படித்தான் இருக்கும் என்று எதிர்பார்த்தால் அதில் இடி. மற்ற போலீஸ் ஹீரோக்களைப் போல இல்லாமல், முள்ளை முள்ளால் எடுக்க... (இதுதான் படத்தின் ஒருவரிக் கதை)

வில்லன் கோட்டைக்குள் புகுந்து லஞ்சம் வாங்கிக் கொண்டு அட்ஜஸ்ட் செய்து போகிற மாதிரி போக்குக் காட்டி இறுதியில் களையெடுக்கிறார். வில்லனிடம் வாங்கும் லட்சக் கணக்கான லஞ்சப் பணத்தை ஹீரோ என்ன செய்கிறார் என்று பார்த்தால் பூகம்ப நிவாரண நிதிக்கு அனுப்பிவிட்டு அதிகாரிகளிடம் கணக்கு காட்டுகிறார். இது சினிமா கதைக்குப் புதிது போலத் தெரிந்தாலும் விக்ரம் தவறான வழிகாட்டுதலுக்குப் பாதை போட்டுத் தரும் ஆபத்தான முன் உதாரண அதிகாரி.

கள்ளிச் செடியில் பூத்திருக்கும் மென்மையான வெள்ளைப் பூ மாதிரி, முரட்டு ஹீரோவுக்கு அக்ரஹாரத்துக் காதலியாக த்ரிஷா.

விக்ரமை வெட்டி வீழ்த்த வீச்சரிவாளோடு அடியாள் நெருங்க, அந்த வழியே பேருந்தில் வரும் த்ரிஷா, தனது டிபன்பாக்ஸை விக்ரமின் முதுகுக்குக் குறி வைத்து வீசிக் காப்பாற்றுகிறார். கல்லூரியில் மதியம் பசியோடு இருக்கும் த்ரிஷாவுக்கு அதே டிபன் பாக்ஸில் தயிர் சாதமும் மாவடு ஊறுகாயும் விக்ரம் கொடுத்துனுப்ப, த்ரிஷாவுக்குப் பசி தீர்ந்து காதல் பிறக்கிறது.

சாமியைக் கல்யாணம் பண்ணி வைக்கலேன்ன நான் ஆத்துலே விழுந்து சாவேன்னு த்ரிஷா சொல்ல... "எந்த ஆத்துலே தண்ணி ஓடுது? மண் லாரிதான் ஓடுது"ன்னு விவேக் அற்புதமாய் நையாண்டி செய்கிறார். ஆனால் தனிப்பட்ட முறையில் மத உணர்வுகளைப் புண்படுத்தும் நகைச்சுவைக் காட்சிகள் விஷம் நிறைந்த விஷமம்!

தெலுங்கு டப்பிங் படங்கள் வழியே ஏற்கெனவே தமிழுக்கு அறிமுகமான கோட்டா சீனிவாசன், நேரடியாக அண்ணாச்சி பாத்திரத்தில் அசர வைக்கிறார். படமும்கூட இறுதி வரை நிமிர வைக்கிறது.

- விஷுவல்தாசன்

● அபவ் ஆவரெஜ்



# புக் பேங்க்

**வாழ்க்கை வசந்தமாக - அருண் சரண்யா**

சற்றே வித்தியாசமான சுய முன்னேற்ற நூல். வாழ்வில் எவற்றை ஒதுக்கி, எவற்றை ஏற்க வேண்டும், அதற்கான உளவியல் காரணங்கள் என்ன, என்று உவமைகளோடு விளக்குகிறது. ஊடே உளவியல் உண்மைகளை உதிர்க்கும் சிறுகதைகள் சிந்திக்கவும், மனிதம் உயரவும் வழிகாட்டுகின்றன.

மதி நிலையம், 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை. ரூ. 35/-

**பகவத் கீதை தமிழில் - பாடல்களும் சொல் விளக்கங்களும் - டாக்டர் க. ராசரெத்தினம்**




ஐந்தாவது வேதம் எனப்படும் பகவத் கீதையின் தமிழாக்கம். பதினெட்டு அத்தியாயங்களும் தமிழ்ப் பாடல்களாக, உரிய பொருளுடன் எளிய நடையில் வழங்கப்பட்டுள்ளன.

மணிமேகலை பிரசுரம், 7 தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17, விலை ரூ.80/-

**உடைந்த கண்ணாடி - சி. சந்திரபாபு**

மனிதன் மனிதனாக வாழ வேண்டும் என்ற உண்மையை வலியுறுத்தி பல்வேறு குணசித்திரங்கள் மூலம் சிறுகதைகளாக வடித்து தொகுத்திருக்கும் சிறுகதைத் தொகுப்பு.




ரோஜா பதிப்பகம், 48, கும்பேஸ்வரர் திருமஞ்சன வீதி, கும்பகோணம் 612 001, விலை ரூ. 25/-

**திசையெங்கும் ஹைக்கூ - தொகுப்பு: மு. முருகேஷ் பா. உதயகண்ணன்**




மூன்றே வரிகளில் முதிர்ந்தவை சில, மூச்சடைக்க வைப்பவை சில, முனகல்கள் சில, முத்தாய்ப்பாய் சில. அறுபத்தொன்பது கவிஞர்கள் வடித்த ஹைக்கூக்களின் தொகுப்பு. படைப்பாளிகளை விட தொகுப்பாளியே அதிகம் முயற்சியெடுத்திருக்க வேண்டும் என்று தெளிவாக்கும் படைப்பு.

அன்னை ராஜேஸ்வரி பதிப்பகம், 41, கல்யாண சுந்தரம் தெரு, பெரம்பூர், சென்னை - 11, விலை. ரூ. 50/-

**நீலகேசி - பரதவன்**

சங்க காலத் தமிழகத்தையும், நெடுஞ்சேரலாதன் காலத்தில கடற் கொள்ளையர் அடக்கப்பட்டதையும் களமாகக் கொண்டு வடிக்கப் பெற்ற சரித்திர நவீனம். ஆதாரங்களையும் சம்பவங்களையும் சற்று ஆழமாகப் படைத்திருக்கலாம். பாராட்டத்தக்க அரிய முயற்சி.




இராமசுவாமி பிரசுராலயம், 29. சி.க. புதூர், இடைப்பாடி, சேலம் மாவட்டம், விலை. ரூ. 70/-

**ஜெயகாந்தன் ஒரு பார்வை - டாக்டர் கே.எஸ். சுப்பிரமணியன்**

மனித ஆழங்களைப் படம் பிடிக்கும் எக்ஸ்ரே பார்வை, பாரம்பரியத்தின் புது அர்த்தங்கள், ஆன்மிகத்தை வலியுறுத்தும் அறிவியல் கண்ணோட்டம் என்று ஜெயகாந்தனின் எழுத்து வன்மையை ஆராய்ந்து தொகுத்த நூல்.

கலைஞன் பதிப்பகம், 10, கண்ணதாசன் சாலை, தி. நகர், சென்னை - 17 விலை. ரூ.100/-




\- விஷ்வக்



# சிறுநீரக கோளாறுக்கு சிறந்தது தெய்வீக மூலிகை மருத்துவம்



சிறுநீரகம் என்பது நமது உடலின் மிக முக்கியமான ஒரு கழிவு நீக்க உறுப்பாகும். இது நம் உடலின் இடுப்புக்கு சற்று மேலே முதுகெலும்பின் இருபுறமும் பக்கத்திற்கு ஒன்றாக (இடது-வலது) அமைந்துள்ளது. இவைகள் ஒவ்வொன்றிலும் சுமார் 10 லட்சம் நெப்ரான்கள் என்னும் நுண்ணிய வடிகுழல்கள் உள்ளது. இந்த நெப்ரான்கள்தான் சிறுநீரகத்தில் பணிபுரியும் முக்கிய திசு ஆகும். உடலிலுள்ள இரத்தம், சிறுநீரகத்தில் உள்ள நெப்ரான்களின் வழியே செல்லும்போது, உடலுக்கு தேவையான நீர், திட, திரவ பொருட்களை உறிஞ்சிக் கொண்டு, தேவையற்ற கழிவுப் பொருட்களை சிறுநீர் குழாய் மூலம் சிறுநீராக வெளியேற்றப்படுகின்றன. சிறுநீரகங்கள் பழுதடையும்போது, யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம், நீர் போன்ற கழிவுப் பொருட்கள் இரத்தத்தில் அதிகமாகின்றன. இதனை செயற்கை முறையில் இரத்த சுத்திகரிப்பு செய்தல் (Dialysis) மற்றும் சிறுநீரகமாற்று அறுவை சிகிச்சை (Kidney Transplantation) போன்றவை செய்யும் நிலை ஏற்பட்டு இறுதியில் உயிரிழக்கும் நிலை ஏற்படுகிறது.

**சிறுநீரக கோளாறின் அறிகுறிகள் :** இரத்த சோகையினால் வெளிறிப்போன முகம். 2 கைகால், முகம், வயிறு போன்றன வீங்கி முற்றிய நிலையில், நுரையீரல், இதயம் போன்ற முக்கிய உறுப்புகளை பாதிக்கின்றது. இதனால், மூச்சுத் திணறல், நெஞ்சுவலி, சளி, இருமல், பலஹீனம் போன்றவை தோன்றும். 3. சிறுநீர் போகும் போது எரிச்சல், மேலும் சிறுநீர் காப்பி கலரில் இருக்கும். அடிக்கடி இரவில் சிறுநீர் கழிக்க தோன்றும். 4. கண்ணின் கீழ் ஒரு சிறு பை போல் வீங்கி இருக்கும். 5. கீழ் முதுகில் வலியெடுக்கும். 6. யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம் போன்றன இரத்தத்தில் அதிகமாக காணப்படும்.

**சிறுநீரகம் செயல் இழப்பின் காரணங்கள் :** சர்க்கரை வியாதிதான் முதல் முக்கிய காரணம் ஆகும். கட்டுப்படுத்தப்படாத உயர் இரத்த அழுத்தம், எய்ட்ஸ் நோய் கிருமியான எச்ஐவி வைரஸ் மற்றும் மஞ்சள் காமாலையின் வைரஸ் 'பி'யும் தொற்றாலும், இரத்த சோகை, சிறுநீரக கற்கள், மூட்டுக்கள், இணைப்புத் திசுக்களை பாதிக்கும் நோய்களாலும் அதிக வயிற்றுப் போக்கு, வாந்தி, சிறுநீர் குழாயில் ஏற்படும் தசை சுருக்கம், கற்கள், கட்டிகள், புற்று நோய் போன்றவற்றாலும் அடைப்புகள் ஏற்பட்டு சிறுநீரகம் பழுதாகலாம். மேலும் மற்ற நோய்களுக்காக எடுக்கப்படும் இரசாயன மாத்திரைகள், அதிகமான மாமிச உணவுகள், பாம்பின் விஷம், தீக்காயம், மின்சார தாக்குதல் போன்றவற்றால் சிறுநீரகம் பாதிக்கலாம்.

**சிறுநீரகம் நன்றாக செயல்பட தேவையான தெய்வீக மூலிகைகள் :** சக்திக்குரிய வேப்பிலை, வில்வம், அத்தி, அருகம்புல், துளசி, ஆடாதொடா, தூதுவளை, வாழைத்தண்டு, தும்பை, நெல்லி, கீழாநெல்லி, முருங்கை, வல்லாரை, ஆவாரம்பூ, வெந்தியம், கரிசலங்கண்ணி, மாவிலை, நாவல் - ஆகியவைகளை எடுத்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து பின், சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டலில் வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை, மாலை உட்கொள்ளவும். இவைகள் சிறுநீரகங்களுக்கு சக்தியை தருகின்றன. தேய்ந்த பாகங்களை புதுப்பிக்கின்றது. நோய் தொற்றுகளில் இருந்தும் பாதுகாக்கின்றது. இதனால் கிட்னி வழக்கம் போல் செயல்பட இம் மூலிகைகள் பெரிதும் துணை புரிகின்றன.

**இயற்கை உணவுகள் :** தினம் ஏதேனும் ஒரு வேளை இயற்கை உணவாகிய பச்சையாக சாப்பிடும் காய்கள், பழங்கள், பழ ஜூஸ்கள், சாலட்ஸ் (Salads) போன்றவற்றை உணவாக உட்கொள்ள வேண்டும். காரணம் இதில் உள்ள சக்திகளை உடல் எளிதில் பெறுகின்றன. மேலும் கழிவுகள் குறைவு. ஆகவே கிட்னிக்கு வேலை பளு குறைகின்றது. கிட்னி நன்கு செயல்பட இயற்கை உணவு உதவுகிறது. குறிப்பாக அன்னாசி, பேரிட்சை, பப்பாளி, கொய்யா, அத்திபழம், நாவல், ஆரஞ்சு, மாதுளை, கேரட், வெள்ளரி, வெள்ளரிக்காய், பேரிக்காய், இளநீர், கரும்புசாறு, வாழைத்தண்டு, முள்ளங்கி போன்றன உட்கொள்ளலாம். மற்ற இரண்டு நேரம் சாதாரண சைவ உணவு உப்பில்லாமல் அரை வயிறு ஆகாரம் உட்கொள்ளலாம். மேலும் வாரம் ஒரு நாள் உண்ணா நோன்பும், தினம் காலை, மாலை எளிய உடற்பயிற்சிகளும் மேற்கொண்டால், சிறுநீரக பாதிப்பில் இருந்து படிப்படியாக முற்றிலும் குணம் பெறலாம்.




தெய்வீக மூலிகை வைத்தியர்கள் **Chennai Cell : 98410 45138 Vellore Cell : 98423 69696**

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி,** S/o Dr.C.K.மாணிக்கவாசகம்

P.B.No:30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A) -635 601 ✆ 04179-220469, 222769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7 ✆ 26424285, 26427638


**குறிப்பு :** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைப்பேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல் :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.100/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8ந் தேதி** - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 24011589, 24083879

**9ந் தேதி** - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை, ஹோட்டல் பிரட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பேகௌடா ரோடு : ✆ 080-2266374, 2872012

**18 & 19ந் தேதி** - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, : 25717126, 25723551

# பிச்சேரிச் சட்டை

நாகரத்தினம் கிருஷ்ணா

சீனுவாசனுக்குத் தூக்கம் வரவில்லை. வரவும் செய்யாது. கறுப்புப் பூனையொன்று, நேர் மேலே - உத்திரத்தின் மீது நடைபழகிக் கொண்டிருக்கிறது. இருட்டில் மின்னும் இரண்டு கண்கள் தெரிந்தன. சீனுவாசன் கடந்த இரண்டு மணி நேரமாய் இப்படித்தான் புரண்டு புரண்டு படுக்கிறான். வெள்ளி கூட முளைத்து விட்டது. இப்படி ஒரு முறை புரண்டு படுக்கும் போது, இவனது காலருகில் படுத்திருந்த அவனது அம்மா கமலத்தின்மீது பட்டுவிட, "எழுவெடுத்தப் பய இப்படி உதைக்கிறானே" எனக் கத்திவிட்டு, அவள் தள்ளிப் படுத்ததுதான் மிச்சம். புரண்டு படுப்பதில், பொத்தான் இல்லாத அவனது கால்சராய் அடிக்கடி அவிழ்ந்து கொள்ள, அவனது கைகளும் சிரமம் பாராமல் அவிழும் போதெல்லாம் முடிச்சுப் போட்டன. மேலே அரை நிர்வாணம். சட்டை எதுவும் போட்டிருக்கவில்லை. எந்தப் புழுக்கத்திலும் சட்டை போடாமல் இருந்ததில்லை. இன்றைக்கு வேண்டாம்னு பழங்கலத்துலே போட்டுட்டான். கழுத்துப் பட்டையிலும் அக்குளிலும் அந்தச் சட்டை கிழிந்திருந்தது மட்டும் காரணமல்ல. வேறு காரணமும் இருந்தது.

மயிலத்தில் ஒரு கல்யாணத்திற்குப் போயிருந்தபோது வாங்கியிருந்த அந்த சட்டையை மூன்று வருடமாகப் போட்டுப் போட்டு அலுத்துவிட்டது. "பசங்கள் பிச்சேரியிலோ, திண்டிவனத்திலோ சட்டை எடுக்கும் போது அப்பா மட்டும் மயிலத்தில் எடுத்திட்டாரே?" என்று நிறையவே வருத்தம்.



"எனக்கு ஒண்ணும் இந்தச் சட்டை வேணாம்" அப்படின்னு அவன் தகப்பன் சாம்பசிவம் கிட்ட சொல்றதுக்குப் பயம்.

கழுப்பெரும்பாக்கத்தில் நடக்கும் திரௌபதை அம்மன் திருவிழாவில், படுகளத்திற்கு மறுநாள் நடக்கும் கூத்தில் சாம்பசிவம் துரியோதனனாக, ஆடுகளத்தில் பெரிய மீசையோடு கிரீடத்தை ஒரு கையால் பிடித்துக் கொண்டு குதிக்கும் போது, ஓடும் பயனுக்கு மட்டுமல்ல, முன்னால் பெருசுகளுக்கு இடையே கூத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் பையன்களுக்குக் கூட அவனிடம் பயம் வந்து விடும்.

இந்தப் பயம் கூத்துக்கு மறுநாளும் தொடர்ந்து, பிறகு எல்லா நாளுமே 'பயம்' என்றாகி விட்டது.

எனவே 'பிச்சேரிச் சட்டையைப்' பற்றிப் பேசணும்னா, பயம் பயம், அப்படி ஒரு பயம். அது சரி, மூன்று வருடத்துக்கு முன்ன வாங்கிய அந்த மயிலத்துச் சட்டையும் எத்தனை நாளுக்கு வரும்? பக்கத்து ஊரு பள்ளிக்கூடம் போவணும்னாலும் சரி, நொண்டி வாத்தியார் திண்ணைப் பள்ளிக்கு 'மல்லாட்டையோட' போகும் போதும் சரி, களத்து மேட்டிலிருக்கும் நெல்லுக்கட்டுக்குக் காவலிருப்பதானாலும் சரி, கிராமத்துல வயசுக்கு வந்த அக்

கான்களோட 'உஸ்கோபாரி' விளையாட்டுன்னாலும் சரி, எல்லாத்துக்கும் இந்த மயிலத்துச் சட்டைதான். அதிலும் அந்த சப்பாணி, 'சந்தச் சட்டை சீனு'ன்னே இவனுக்குப் பேர் வைச்சிருந்தான்.

கடந்த ஒரு மாசமாவே சீனுவாசன் தகப்பனைத் துளைக்கிறான். சாம்பசிவமும் என்ன பண்ணுவான்? பையனுக்கு நல்லதா ஒரு சட்டை எடுக்கணும்னுதான் அவனுக்கு ஆசை. என்ன செய்யறது? இருக்குற கால் காணியும், வார குத்தகைன்னு வம்புல இருக்குது. இவனுக்கும் கூத்தாடிப் பொழப்பு. ஆடி மாசத்துலயும், அறுவடை நாள்லயும் நாலு காசு பார்க்கணும்னு, பிரம்மன் சாம்பசிவம் தலையில் எழுதி வச்சிருக்கான்.



கமலத்துக்கோ அய்யாவு முதலியார் வீட்ல வேலை. விடியலுக்கு காபோனான்னா, திரும்பறதுக்கு சூரியன் மேக்காலே விழணும். இல்ல, குமரன் பஸ் பின்னேரம் திண்டிவனம் திசைக்குப் போகணும். "முதலியார் வீட்டுல, ஏதோ நாளு கிழமைக்கு வாய்க்கு ருசியா சோறு போடறாங்க. 'மீந்ததைக் கொண்டு போன்னு'' சொல்றாங்க. கிழிஞ்ச புடைவை கொடுக்கிறாங்க. இதுக்கு மேல் என்ன?" என்பாள்.

வெளிறிப் போன மயிலத்துச் சட்டையைப் போடவே பிடிக்காமல், சுழற்றி, சுற்றி, பானைக்குள் போட்டு வைச்ச பிறகு தான் உறக்கமே பிடிச்சது.

எத்தனை மணிக்கு, சீனுவாசன் தூங்கினானோ? திடீரென்று கனவில் ரஜனி பின்னே, அதே பச்சைச் சட்டையுடன் ஆட்டம். பிறகு ஆழ்ந்த தூக்கம்.

"சீனுவாசா! ஏய்... சீனுவாசா! எழுந்திரு" கமலம்தான் எழுப்பினாள்.

"மணி என்ன ஆவுது? அப்பா வந்துட்டாரா?"

''ஒங்கப்பன் பதினொன்னரை குமரனுக்குத்தான் வருவாரு. சட்டைக்குக் காத்திருக்கியா? மொதல்ல வாங்கன

காசோட கள்ளுக்கடைக்குப் போகாம வரட்டும்."

"இல்லம்மா! இந்த முறை அப்படி எதுவும் நடக்காது பாரேன்."

"ஆமாம்... நீதான் ஒங்கப்பனை மெச்சிக்கணும்! நான் முதலியார் வீட்டுக்குப் போறன். நீ பல்லத் துலக்கிக்கிட்டுக் கொஞ் சம் பழயதைப் போட்டுச் சாப்பிடு. எங் கேயும் போயிடாதே. செவலைப் பகலைப் பாத்துக்கோ. நான் மேய்ச்சலுக்கு அனுப்பல" கட்டளையைக் கோவையாக ஒப்பித்து விட்டு, கமலம் புறப்பட்டு விட்டாள்.

சீனுவாசனுக்கு அழுகை அழுகையாக வந்தது.

"ஒரு வேளை அம்மா சொன்னது போல அப்பா இந்த முறையும் ஏமாற்றி விடுவாரா? "சீச்சீ, அப்படி எதுவும் நடக் காது. அம்மாவுக்கு அப்பாவைப் பிடிக்காது, அதுதான் இப்படி." சமாதானப்படுத்திக் கொண்டான்.

அரைமணிக்கொருமுறை கணக் கப்பிள்ளை வீட்டில் போய் மணி பார்த்து வந்தான். மணி நகராமலேயே இருந்தது.




கடைசியாகக் கேட்ட போது பதினொன் னரை என்றார்கள். பஸ் நிற்கும் ஆலமரத் தடிக்கே போய்விட்டான்.

குமரனும் வந்தது. எல்லோரும் இறங்கி னார்கள். சாம்பசிவம் வரவில்லை. மனசுக்கு ஏமாற்றம். கிழக்குத் தெருக் கவுண்டர் வீட்டுப் பொன்னுசாமியைக் கேட்டான்.

"அண்ணே! பொன்னுசாமி அண்ணே! எங்க அப்பாவைப் பார்த்தீங்களா?"

"யாரு? நம்ம சாம்பசிவம் பையனா? பார்க்கலியே! இந்த பஸ்ல வரலியே. ஒரு வேளை நாலரை பெரியார்ல வரலாம்" சொல்லிவிட்டு அவர் கிளம்பி விட்டார். சீனுவாசனுக்கு வீட்டுக்குத் திரும்ப மனசு வரல்ல. செவலைப் பகலைப் பற்றிய ஞாபக மும் போய்விட்டது. காத்திருந்தான். சிறிது நேரத்தில் கூத்துக்குப் புறப்படும் முன் அப்பா சொன்னதும், அம்மாவின் கோபமும் ஞாபகத்திற்கு வர, வீட்டிற்குத் திரும்பினான். சீனுவாசனுக்கு மறுபடியும் தன் தகப்பன் ஞாபகம். அம்மா சொன்னது போல கள்ளுக்கடையில் விழுந்து கிடப்பாரோ?

அடுத்த முறை சப்பாணியைப் பார்க்கும் போது புதுச் சட்டையில்தான் பார்ப்பது என்று மனசுக்குள் எடுத்திருந்த சபதம் நினைவுக்கு வரவே, இன்னும் நெருஞ்சி யாய்க் குத்தியது.

சப்பாணி குரல் போல இருந்தது.

"ஒரு வேளை சட்டையைப் பற்றிக் கேட்க வந்திருப்பானோ?" சீனுவாசன் வெளியில் வந்தான்.

சப்பாணி வடிவேலு, ஊளமூக்கு ராமாமி, வைத்தி, கனகம் என நின்று கொண்டிருந்தார்கள். மோட்டார் சைக்கிளில் கோவிந்து.

"உங்கப்பன் லாரியில் அடிபட்டுச் செத் துக் கிடக்கான்டா. உங்க அம்மாவுக்கு சேதி போயிட்டுது. நீ என்ன செய்யற?" என்றான் கோவிந்து பதற்றத்துடன்.

அடுத்த நிமிடம் தெருவெல்லாம் வேடிக்கை பார்க்க, "எனக்கு வாச்ச ராசா! போயிட்டியா! என்று அலறி அடித்துக் கொண்டு வருகின்ற கமலத்தை சீனிவாசன் பார்க்கிறான்.

வந்த பையன்கள் பிரமித்துப் பரிதாப மாகப் பார்க்க, சீனுவாசன் வீட்டுக்குள்ளே ஓடினான். அழுது கொண்டே பழங்கலத்தில் போட்ட அந்த பழைய சட்டையைத் தேட ஆரம்பித்தான்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.



# ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த **14** ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் **180** மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (180 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்

சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் — A. ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.





# சிங் தயவிலே... சிரிங்க!

சுமா ஒரு ரிசப்ஷனிஸ்ட். எப்போதும் ரெடிமேட் புன்னகை அணிந்து காணப்பட வேண்டிய வேலை. ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவரது பல்வரிசை அமைப்பு, அவர் தைரியமாக ஒரு புன்னகை செய்யக் கூட அவரைத் தடுத்தது. அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்றால், முகத்தின் அழகு புன்னகையில்தானே வெளிப்படும்? சுமாவுக்குப் பல தடவை தர்ம சங்கடமான நிலமைகளைத் தவிர்க்கவும், சமாளிக்கவும் வேண்டியிருந்தது. 'ஆகா, நம் புன்னகை மட்டும் கவர்ச்சிகரமாக இருந்து விட்டால் இந்த வேலை எத்தனை அற்புதமானதாக இருக்கும்!' என்று நினைத்துக் கொண்டே இருந்தார். அவருடைய பிரச்னையை ஒரு வழியாகத் தீர்த்து வைத்தார் டாக்டர் அருண் சிங்.

வனிதா கதை வேறு விதம். திருமணம் ஆகி அமெரிக்கா போனார். வனிதாவின் ஒழுங்கற்ற பல் வரிசை அவருக்கே உறுத்தியது. ஓர் அழகான புன்னகையை உதிர்த்து, சகஜமாக எல்லோருடனும் பேச இயலாத நிலையில் இந்தியா வந்து சேர்ந்தார் வனிதா. அவர் சந்தித்ததும் டாக்டர் அருண் சிங்கைத்தான். இப்போது வனிதா புன்னகை அரசியுடன் போட்டியே போடலாம்!

ஜைனுல் அபுதீன் என்ற இளைஞர், தொழிற்கல்வி படித்தார். இருபத்திநான்கு வயதுதான். வேலைக்காகப் போட்டிக்குப் போனா[illegible] பல் வரிசை குறுக்கே [illegible]. தாழ்வு மனப்பான்மை மனத்தைக் குடைந்தது. தன்னம்பிக்கை கொஞ்சம் கொஞ்சமாக அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் நண்பர் சொன்னார் டாக்டர் அருண் சிங்கைப் பார்க்கச் சொல்லி. இப்போது ஜைனுல் அபுதீன்


• ஆபரேஷனுக்கு முன்...


• ஆபரேஷனுக்குப் பின்...



• ஆபரேஷனுக்கு முன்...



• ஆபரேஷனுக்குப் பின்...

பவர் க்ளினிக்' திறந்த பிறகு, பலருக்கு மறு வாழ்வு கொடுத்து வருகிறார்.

"சிலருக்குப் பற்கள் இடைவெளி இருக்கும். சிலருக்குச் சின்னப் பல். சிலருக்குப் பெரிதாக, அகலமாக இருக்கும். சிலருக்குத் தூக்கி இருக்கும், அல்லது சாய்ந்து இருக்கும். எந்த விதக் குறையாக இருந்தாலும் இரண்டிலிருந்து மூன்றே மணி நேரத்துக்குள் மாற்றி விட முடியும். அதே பற்களை வைத்துக் கொண்டே! எப்படி ஒரு சிற்பி சிற்பம் வடிக்கிறானோ, எப்படி ஓர் ஓவியர் ஓவியம் வரைகிறாரோ, அப்படிப்பட்ட ஆர்ட், அல்லது க்ராஃப்ட்ஸ்மன்ஷிப் இது!" என்கிறார் பற் சிற்பி டாக்டர் அருண் சிங்.

மகிழ்ச்சியான மனிதர். சும்மா பேச்சுக்குப் பேச்சு புன்னகைதான்!

இந்த அதிசய பல் மருத்துவத்தை முதன் முதலாகத் தென்னிந்தியாவில் அறிமுகப்படுத்தியிருக்கும் டாக்டர் அருண் சிங், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல் மருத்துவம் படித்த இளைஞர். (அவரது வசீகரமான புன்னகையே அவரது டிரேட் மார்க்!) படிப்பு 96ல் முடிந்ததும், எல்லாரையும் போல உடனே ஒரு பல் – க்ளினிக்கைத் திறந்து போர்டு மாட்டிவிட்டுக் காத்திருக்க விரும்பவில்லை.

டென்மார்க் போனார். அங்கே கோபன்ஹேகன் யூனிவர்சிடியில் இரண்டு வருஷம் 'ஸ்மைல் கரெக்‌ஷன்' வித்தையைச் சிறப்பாகப் படித்தார். ஏன் டென்மார்க்?

'ஸ்வீடன், நார்வே போன்ற ஸ்காண்டிநேவியன் நாடுகளில் ஆண்கள் – பெண்கள் இரு பாலாருமே பிரசன்டபிள் பெர்சனாலிடியாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர்கள். குடும்ப நிகழ்ச்சிகள், சமூக – பொது விழாக்களில் அடிக்கடி கலந்து கொள்ளுபவர்கள். உடை, நகை அலங்காரம் போலவே முகப் பொலிவிலும் அதிக அக்கறை காட்டுபவர்கள். அதனால்தான் டென்மார்க் பல்கலைக் கழகத்தில் இந்த 'பிரிசிஷன் ரெஸ்டொரேடிவ் டென்டிஸ்ட்ரி'யில் மாஸ்டர்ஸ் படிப்பு சொல்லிக் கொடுக்கிறார்கள்!" என்கிறார் அருண் சிங்.

இந்தியா திரும்பி, எழும்பூரில் ஸ்மைல்

இந்த முறையை 'காஸ்மெடிக் பாண்டிங்', 'காஸ்மெடிக் கான்ட்டூரிங்', 'போர்சிலென் வெனீர்ஸ்' என்று வர்ணிக்கிறார் டாக்டர். (இப்போது கம்பி கட்டிக் கொண்டு இரண்டு வருடம் வரை அவஸ்தைப் படுகிறார்களே, அதெல்லாம் கூடத் தேவையே இல்லை!)

எல்லாப் பற்களையும் எடுத்துவிட்டு, செட் வைத்துக் கொள்ளும்போதும் இப்படி கரெக்‌ஷன் பண்ணிக் கொள்ளலாமாம். இயற்கையானது போலச் செய்ய முடியுமாம்.

கத்தியின்றி இரத்தமின்றிச் செய்யப்படும் இன்னொரு புரட்சி இது. ரத்தச் சேதம் கிடையாது. கத்தி உபயோகிப்பதில்லை. எனவே வலியும் இல்லை!

பதின்மூன்று வயது பாப்பா முதல் எழுபது வயது தாத்தா வரை ஸ்மைல் கரெக்‌ஷன் செய்து கொள்ளலாம்.

"இந்தப் புன்னகை என்ன விலை?"

'குறைந்தபட்சம் ரூ.650/- அதிக பட்சம் ரூ. 3000/- ஒரு பல்லுக்கு' பாண்டிங் மெட்டீரியலைப் பொறுத்து மாறுபடுகிறதாம். முப்பத்திரண்டு பற்களையும் மாற்றப் போவதில்லை. அதிக பட்சம் போனால் பத்துப் பற்கள். ஓர் அழகான புன்னகைக்கு இது அதிகமா?...

— சாருகேசி

இதுவரை எந்த நாடும் செய்யாத ஒரு முயற்சி. சமீபத்தில் ஜப்பானின் மியூசஸ் – ஸி என்னும் ஆளில்லா கலம் விண்ணை நோக்கி உயர்ந்தது. மியூசஸின் இலக்கு Asteroid எனப்படும் விண்வெளிக்கல். கோடிக் கணக்கில் இருக்கும் இத்தகைய கற்களுக்குப் பெயர் சூட்டி மாளாது என்பதால் அதன் எண் 1998SF36. (நம் கட்டுரைக்கு SF)

செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையே இருந்த SF, வியாழனின் புவியீர்ப்பு சக்தியினால் கொஞ்சம் பூமியின் பக்கம் இழுத்துவரப்பட்டிருக்கிறது. SFஇருப்பது 30 கோடி கிலோ மீட்டர்களுக்கு அப்பால். அதன் அகலம் 500 மீட்டர். மியூசஸ் கலம் பயணிக்கும் வேகத்தில் அதைச் சென்று அடைய இரண்டு வருடங்கள் ஆகும். SFக்கு அருகில் தங்கி ஒரு நாலு மாதம் ஆராய்ச்சி செய்த பிறகு 2007ல் பூமிக்குத் திரும்ப வரும்.

என்ன ஆராய்ச்சி? அப்போலோ பதினொன்றில் நிலாவில் இருந்த கற்களைக் கொண்டு வந்தது போல மியூசஸின் குறிக்கோள் இந்த SFஎனும் கல்லின் துகள்களைச் சேகரித்து கொண்டு வருவது. இந்தக் கல்லை வைத்துக் கொண்டு, விஞ்ஞானிகள் உலகத்தின் பிறப்பு பற்றிய மர்மங்களை ஆராயப் போகிறார்கள்.

ஆளில்லாத இந்தக் கலத்திலிருந்து விண்கல்லின் துகள்களை எப்படிச் சேகரிக்கிறார்கள் என்பது சுவாரசியம்.

SFக்குப் பக்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் மியூசஸ், ஒரு விநாடி நேரத்துக்கு அதற்கு மிக அருகில் சென்று தன் வயிற்றிலிருக்கும் குட்டி அம்புகளை எறிந்து ஒரு கல்லைக் கொஞ்சம் உடைக்கும். விண்வெளியில் புவியீர்ப்பு சக்தி இல்லாததால் உடைக்கப்பட்டுச் சிதறும் துகள்கள் விண்வெளியில் மெல்ல மிதக்கும். அப்போது மியூசஸ் தன் மூக்கில் இருக்கும் ஒரு குழாய் கொண்டு அதை உறிஞ்சிவிடும். இது போல மூன்று முறை செய்து அதன் கற்களைச் சேகரிக்கப் போகிறார்கள்.

# பறக்கும் பெயர்கள்!



உடைத்த கல்லை அடையாளப்படுத்த ஒரு சின்ன முத்திரை பதிக்கப்போகிறது மியூசஸ். SFமேல் ஒளிவீசும் பந்து போன்ற ஒன்றை போட்டு விட்டு வரப் போகிறது. இந்தப் பந்தில் ஒரு விசேஷம். இதில் எட்டு லட்சத்து எண்பதாயிரம் பெயர்கள் எழுதப் பட்டு உள்ளன. மியூசஸ் பயணம் தொடங்கும் முன், தங்கள் பெயர்களை விண்வெளியில் பதிக்க விரும்புகிறவர்கள் விண்ணப்பிக்கலாம் என்று ஒரு விளம்பரம் கொடுத்து உலகம் முழுவதும் இருந்து விண்ணப்பித்தவர்களின் பெயர்கள் இவை.

– ஆனந்த் ராகவ்

# 8

படத்தொடர்

# ஜீவநதி

காட்சி : 26

**முன்னிரவு - வீட்டுக்கும் தெருவுக்கும் இடையில்.**

பாத்திரங்கள்: - **சேது, சரோஜா, வெல்டர் வேணு.**

சப்தம் எழுப்பியபடி வந்து, ஆட்டோவை சரோஜா வீட்டுக்கு எதிரில் நிறுத்துகிறான் சேது. வாசலில் கயிற்றுக் கட்டிலில், காசித் துண்டு போர்த்தியபடி ம குடிக்கும் வே . சப்தம் கேட்டு வெளியே வந்து பார்க்கும் சரோஜா. ஆட்டோவை நிறுத்திவிட்டு, இறங்கி நடக்கிறான் சேது.

**வேணு** : (முகம் மலர்ச்சி இல்லாமல் அல்லது வேண்டா வெறுப்பாக) வாப்பா.

**சேது** : பாத்திங்களா - புது ஆட்டோவை.

வேணு ஆட்டோவைப் பார்க்கிறார். பூஜை போட்டு, குங்குமம் வைத்த புது ஆட்டோ.

**வேணு** : (திரும்பி உள்ளே பார்த்து) ம்... சரோஜா, நாற்காலியை எடுத்தாந்து போடும்மா.

(சரோஜா நாற்காலியை எடுத்துவந்து போடுகிறாள். சேதுவும் சரோஜாவும் கண்களால் பேசிக் கொள்கிறார்கள்)

**சேது** : (ரகசியமாக சரோஜாவிடம்) பார்த்தியா. நம்ம காதல் வாகனம். (சரோஜா சிரித்தபடி ஒதுங்கி நிற்கிறாள்) நீங்க சொன்னபடி சொந்த ஆட்டோ வாங்கியாச்சி அப்புறம்...?

**வேணு** : நல்லது.

**சேது** : மேற்கொண்டு...

**வேணு** : என்ன சொல்றே... புரியலையே...

**சேது** : புது ஆட்டோ வாங்கினதும், கல்யாணம் பத்திப் பேசலாம்னு சொன்னீங்க...

**வேணு** : யோசிச்சுதாம்பா சொல்லணும்.

**சேது** : இனியும் யோசிக்க என்ன இருக்கு? ஏற்கெனவே பேசினதுதானே...

**வேணு** : நான் சாதாரண வெல்டர். பொண்ணை ரொம்ப சீராட்டி வளர்த்திட்டேன். அது கண்கலங்காமே வாழணும். பெத்தவன், அப்படி நினைக்கிறது தப்பில்லையே.

**சேது** : தப்பில்லை. என்மேல உங்களுக்கு நம்பிக்கை இருக்கில்லையா?

**வேணு** : இருந்துச்சு.

**சேது** : விபரமா, வெளிப்படையா சொன்னீங்கன்னா தேவலை.

**வேணு** : சொல்றதுதான் நல்லது. உங்களுக்கும் யாரோ ஒரு மாதிரி பொம்பளைக்கும் தொடர்பு இருக்குன்னு பேசிக்கிறாங்களே...

**சேது** : (சிரிக்கிறான்) அது சரோஜாவுக்கும் தெரியுமே. தொடர்பு இருக்கு. அது, மத்தவங்க நினைக்கிற மாதிரியான தொடர்பு இல்லை. நான் அக்கான்னுதான் அவங்களைக் கூப்பிடுவேன்.

**வேணு** : அக்காவா... அந்த மாதிரி தொழில் செய்யறவளா?

**சேது** : இருக்கட்டுமே... ரேணுகா வாழற முறை சரின்னு நான் சொல்லலை. அதை தப்புன்னு சொல்ற யோக்யதை எனக்கு இல்லை. உங்க பார்வையில, ஊர் பார்வையில, பெரிய மனுஷங்களா இருக்கிற பலருக்கு அந்த அம்மா உதவி இருக்கு. அவங்க உதவியால, புரமோஷன் வாங்கறவன், வேலை வாங்கிறவன் பல பேரை எனக்குத் தெரியும். பெரிய மனுசங்க பலரோட உண்மையான முகம் ரேணுகாவுக்குத் தெரியும்.

**வேணு** : என்னமோப்பா... எனக்குப் பிடிக்கலை.

**சேது** : உங்க முடிவு...?

**வேணு** : மன்னிக்கணும். வேற இடம் பார்த்துக்குப்பா.

சேது எழுந்து நிற்கிறான். சரோஜா கண் கலங்கியபடி

அவளைப் பார்க்கிறான்.

சேது : சரி. நான் வர்றேன்.

ஆட்டோவைக் கிளப்பிக் கொண்டு புறப்படுகிறான்.

காட்சி : 27

மாலை நேரம்: இருட்டு வரும் முன்பு / வீடு.

பாத்திரங்கள்: சுசீலா, பாகீரதி அம்மா, கண்ணன்.

(சுசீலா, அவள் ஆடைகளுக்கு 'இஸ்திரி' போட்டுக் கொண்டிருக்கிறாள். துணிகள் நாற்காலியின் மேல் நிறைந்து கிடக்கின்றன. வாசலில் அமர்ந்திருக்கிறாள் பாகீரதி அம்மா. வானத்தைப் பார்த்துக் கொண்டு அமர்ந்துள்ளாள். இஸ்திரி போட்டுக் கொண்டிருக்கும் சுசீலாவிடம் பேசுகிறாள்...)

பாகீரதி: ஏண்டி... பௌர்ணமி என்னைக்கு?

சுசீலா: வெள்ளிக் கிழமைன்னு போட்டிருந்தது காலண்டர்லே. என்னத்துக்குக் கேக்கறே. பௌர்ணமிக்கு வக்கிர காளிக்கு மாலை சாத்தப் போறயா?



**பாகீரதி:** போலாம்தான். துணைக்குக் கண்ணம்மாவோட போகணும். அவ கேக்கிற கேள்விக்குப் பதில் சொல்லி முடியலை... கௌரவமா, நாலு இடத்துக்குப் போக வர்ற மாதிரியா, என்னை வச்சிருக்கீங்க?

**சுசீலா:** (மெஷினை வளையத்தில் வைத்துத் திரும்பி) என்ன குறை உனக்கு? பட்டுக்குக் குறைச்சலா? பணத்துக்குக் குறைச்சலா? என்ன குறை வச்சிருக்கார் உன் புருஷன்? அதாவது என் தகப்பனார்?

**பாகீரதி:** புடைவையும் பணமும்தான் மரியாதையா? நாலு பேர் பேசறது மரியாதையா?

**சுசீலா:** (புடைவையை இழுத்துச் செருகியபடி) எவள் உன்னை என்ன சொன்னா?

**பாகீரதி:** என்னை எவ என்ன சொல்ல முடியும். எல்லாம் உன்னைப் பத்திதான்.

**சுசீலா:** என்னைப் பத்தி என்ன? (மீண்டும் துணியை உதறி அடுக்குகிறாள்)

**பாகீரதி:** சின்னஞ் சிறுசுகள் சண்டை போட்டுக்கிறதுதான். பெரியவங்க, சமாதானம் பண்ணிச் சேர்த்து வைக்கிறதில்லையா? இப்ப வாழாமே, அப்புறம் எப்போ உன் பொண் வாழப் போறான்னு கேக்கிறாங்க.

**சுசீலா:** இப்போ நான் வாழாமலா இருக்கேன். வாழறதுன்னா என்ன? கல்யாணம் பண்ணிக்கிட்டு புருஷனோட அடி உதை தின்னுகிட்டு நாளைக் கடத்தினா, நீங்க, வாழறாம்பீங்க. எந்தப் பிடுங்கலும் இல்லாமே, நிம்மதியா இருந்தா, உங்களுக்குப் பொறுக்கலை. உங்க பார்வையில, ஒருத்தி சந்தோஷமா இருந்தா பொறுக்காதே. ஒருத்தி படிக்கிறான்னா, எப்போ கல்யாணம்பீங்க. கல்யாணம் ஆனா, எப்போ குழந்தைம்பீங்க. குழந்தைகளானா, கம்ப்யூட்டர் எஞ்ஜினீயர் ஆக்கும்பீங்க. அமெரிக்காவுக்கு அனுப்பும்பீங்க. திரும்பவும் எப்போ கல்யாணம்பீங்க. அடடடா... பல சரக்குப் பட்டியலை விடவும் பெரிசா இருக்கும்மா, உங்கப் பட்டியல். ஆறு கோடித் தமிழர்களே, மூணு கோடி தமிழச்சிகள் இருக்கீங்க. ஆளுக்கொரு சட்டையைத் தைச்சு வச்சுக்கிட்டு, எல்லாரும் இதையே போட்டுக்கணும்கிறீங்க... மனுஷங்களை அவங்க அவங்க இஷ்டப்படி இருக்க விடுங்கம்மா.

**பாகீரதி:** அப்போ, என்னத்துக்குக் கல்யாணம் பண்ணிட்டே. (கண்ணன், மாடிச் சாவியை எடுக்க வருகிறான். பாகீரதி பேசியதைக் கேட்டு, சுசீலாவின் பதிலுக்காக நிற்கிறான்.)

**சுசீலா:** நானா? கல்யாணம் பண்ணி வைன்னு உண்ணாவிரதம் இருந்தேனா? தர்ணா பண்ணேனா? சாலை மறியல் பண்ணேனா? நீங்க ஆசைப்பட்டீங்க. நீங்க மாப்பிள்ளை பார்த்தீங்க... குரங்கைப் பிடிச்சாந்து, தாலி கட்டப் பண்ணீங்க.

**கண்ணன்:** அப்படியாக்கா. உறுதியா சொல்றியா? குரங்குதானா அது?

**சுசீலா:** நூறு பெர்சன்ட் அதாண்டா.

**கண்ணன்:** வால் இருந்துச்சா?

**சுசீலா:** வெளிப்படையா தெரியாது. மனசுக்குள்ள இருந்துச்சு. இருக்கு.

**கண்ணன்:** மரத்துக்கு மரம் தாவிச்சா?

**சுசீலா:** முதல்லே எவனோ லலிதா.




அப்புறம் நான். எனக்கப்புறம் சங்கவியாம். தாவிக்கிட்டே இருக்கு.

**பாகீரதி:** என்ன இருந்தாலும் புருஷன். இப்படியெல்லாம் தூஷிக்காதடி.... அவன் ஏற்கெனவே 'டைவர்ஸ்னு' பயமுறுத்தறான்...

**சுசீலா:** நானும் அதைத்தான் எதிர்பார்க்கிறேன். கோர்ட்டுக்கு வரட்டும். அவன் முகமூடியைக் கழற்றி, கிழிச்சு எறியறேன் பாரு...

**பாகீரதி:** செய். எல்லாரும் ரொம்ப மெச்சிக்குவா.

**சுசீலா:** யாருடைய மெடலும் விருதும் எனக்குத் தேவையில்லை. என் மனசாட்சிக்குத் தெரியும். நான் குற்றமற்றவள்னு. சரியாத்தான் நடக்கிறேன்னு.

**கண்ணன்:** ஏம்மா... பெண்ணுக்கு மாப்பிள்ளை பார்க்கும் போது, அவன் பேண்ட் சட்டை போட்டுக்கிட்டா போதும்னு நினைப்பீங்களா? எங்காவது வேலை பார்த்துச் சம்

பாதிக்கிற எவனுக்கும் பெண்ணைக் கொடுத்துடு வீங்களா? பையனோட ஒழுக்கம், எப்படிப் பட்டவன்லாம் பார்க்க மாட்டீங்களா?

**பாரதி:** எப்படிப்பா? மாப்பிள்ளை பார்க்கப் போகும்போது, பூனை மாதிரி வந்து உக்காந்தான். பதவிசா பேசினான். நல்ல குலம். குடும்பம்னு தோணுச்சு. அப்புறம் என்னத்தப் பார்க்கிறது? சாயங்காலமா, சாராயம் குடிப்பானா, வைப்பாட்டி வீட்டுக்குப் போவானான்னு கேக்க முடியறதா? நம்ம கல்யாணமே, பெண்ணோட அதிர்ஷ்டத்தைத் தானே நம்பி இருக்கு? அவ தலைவிதி சரியா இருந்தா நல்ல வரன் தகையும். அப்படித் தானே, எல்லாக் கல்யாணமும் நடக்குது?

**கண்ணன்:** ஆக, நம்ம கல்யாணமுறை, பெண்ணோட அதிர்ஷ்டத்தைத் தான் நம்பி இருக்குங்கிறீங்க.




**சுசீலா:** இதான் உனக்கும் பாடம், கண்ணா. நீயா, பழகி, பேசி, பொண்ணைத் தேடிக்கோ... அதான் இப்ப பண்ணிக்கிட்டு இருக்கேன்னு நினைக்கிறேன்.

**கண்ணன்:** அக்கா...

**காட்சி : 28**

**பகல் / மத்திய தர தேநீர் / காபி ஹோட்டல்.**

பாத்திரங்கள்: **சேது, கண்ணன்,** *(மேசைக்கு எதிர் எதிரே அமர்ந்து கொண்டு டீ குடித்துக் கொண்டிருக்கிறார்கள். காலிக் கோப்பைகள், அவர்கள் சாப்பிட்டு முடித்ததைச் சொல்கின்றன.)*

**கண்ணன்:** இது பிரச்னையே இல்லடா. வேணுக்கு உன்னைப் பிடிக்கலைன்னா என்ன அதனாலே? சரோஜா என்ன சொல்லுது, அதுதான் முக்கியம்.

**சேது:** *(குழம்பியவனாகக் காணப்படுகிறான்)* ஒண்ணும் தீர்மானமாச் சொல்ல முடியலை....

**கண்ணன்:** பேசினியா...?

**சேது:** உம்.

**கண்ணன்:** என்ன சொல்லுது?

**சேது:** அப்பாவைத் தனியா விட்டுட்டு எப்படி வர்றது? அம்மா இருந்தாலும் பரவாயில்லை. சாப்பாட்டுக்குக் கஷ்டப்படும்னு சொல்லுது.

**கண்ணன்:** நம்ம சீதாவோட ஃப்ரெண்ட் தேவயானி. எவ்வளவு தெளிவு பார் அந்தப் பொண்ணுக்கு. காதலிக்கிற போது இருக்கிற தைரியம், துணிச்சல், அதைக் கொண்டு செலுத்தறதுல நம்ம பெண்களுக்கு ஏன் இல்லை?

**சேது:** அப்படி மொத்தமா சொல்லிட முடியுமாடா? *(சிகரெட் புகைத்துக் கொள்கிறார்கள்)*

தேவயானி படிச்சவ. கொஞ்சம் உயர்ந்த குடும்பத்துப் பொண்ணு. படிப்பு, வேலை, தைரியம், குடும்பத் தகுதியில கிடைச்சிருக்கிற உலக அனுபவம் எல்லாம் இருக்கு, தேவயானிக்கு. அது எப்படியும் முடிவெடுக்கலாம். நம்ம ஆளு, எட்டாங்கிளாஸ். சமைக்கிறது மட்டும்தான் தெரிஞ்ச தொழிலே. டீவி. பார்க்கும். அழும். சினிமாக் கதையை மெய்யாலும்னு நம்பும். வாரா வாரம், தொடர் கதை படிக்கும். சிந்துபாத் கதையைத் தலைகீழா சொல்லும்... அதான் தெரியும்.

**கண்ணன்:** காதலிக்கத் தெரியுதே.

**சேது:** அதை யாரும் சொல்லித் தர வேண்டாமே.

**கண்ணன்:** அதுசரி, படிக்கிற, பார்க்கிற 'மீடியம்' எல்லாமும் அதைத்தானே பேசிக்கிட்டு இருக்கு. யாராவது வெளிநாட்டுக்காரன், நம்ம டீ.வி. பத்திரிகைகளைப் பார்த்தா, தமிழனுடைய ஒரே தொழில் காதலிக்கிறதுதான்னு 'தீசிஸ்' எழுதுவான்.

**சேது:** எனக்கு ஒரு வழி சொல்லு.

**கண்ணன்:** ஒரே வழி தாண்டா. அப்பா இல்லை, சேது முக்கியம்னு சரோஜா வரணும்.

**சேது:** அதுக்கு யாராவது சரோஜாவோட பேசணும்.

**கண்ணன்:** யார் பேசினா சரி?

**சேது:** நீயும், சீதாவும் பேசலாம். தைரியம் கொடுத்துக் கொண்டு வந்துடுங்க.

**கண்ணன்:** சரோஜா வயசென்ன? சரியா சொல்லு.

**சேது:** கரெக்டா தெரியலை. என்ன, இருபது இருக்கும். *(கண்ணன் யோசனையில் இருக்கிறான்.)*

**காட்சி : 29**

**இரவு நேரம் / பள்ளிக் கூடம்.**

பாத்திரங்கள்: **செல்வம், குலோத்துங்கன்.**

எதையோ, மேசைக்கு முன் அமர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறான் செல்வம். சந்தடி ஓய்ந்த அமைதியும், ஆள் அரவம் அற்ற சூழ்நிலையும், நேரம் நள்ளிரவு என்பதைக் காட்டுகிறது. ஓலை வேய்ந்த பள்ளிக்கு



### மாணவ 'மணி'கள்!

குஜராத் மாநிலத்தில் 10ம் வகுப்பு, 12ம் வகுப்பு பரீட்சை எழுதிய மாணவர்கள் சிலர் இந்த ஆண்டு ரூ.20லிருந்து 500 வரையிலான ரூபாய் நோட்டுகளை விடைத்தாளில், திருத்துபவரின் கவனத்திற்காக 'பின்' செய்திருந்தார்கள். சில மாணவர்கள் ஒரு படி மேலே போய் தங்களின் 'செல்'போன் நம்பர்களை விடைத்தாளில் எழுதி, இதில் தொடர்பு கொண்டால் தகுந்த சன்மானம் வழங்கபடும் என குறிப்புகளும் எழுதியிருந்தனர்!

நன்றி : டைம்ஸ் ஆப் இந்தியா
தகவல் : அகமதாபாத் பாண்டு

வெளியே, மோட்டார் சைக்கிள் வந்து நிற்கும் சப்தம், கேட்கிறது. செல்வத்தின் அமைதி குலைகிறது. கதவு இலேசாகத் தட்டப்படும் ஓசை கேட்டு, செல்வம் எழுந்து சென்று கதவைத் திறக்கிறான். வெளியே வெள்ளைச் சட்டையும் வேட்டியும் அணிந்த, தற்காலப் 'பிரமுகரின்' தோற்றத்தில் காணப்படுகிறார் ஒருவர்.

**குலோத்துங்கன்:** வணக்கம் சார். நான் குலோத்துங்கன். உங்ககிட்ட தனியா பேசணும்.

**செல்வம்:** எதைப் பற்றி?

**குலோத்துங்கன்:** பள்ளிக்கூடம் விஷயமாகத்தான்.

**செல்வம்:** அதுதான் பேசியாச்சே... நான் இந்த இடத்தை விட்டுத் தர முடியாதுன்னு சொல்லிட்டேனே...

**குலோத்துங்கன்:** மேலயும் சில தகவல்கள் கொண்டு வந்திருக்கேன்.

**செல்வம்:** சரி. உள்ளே வாங்க. *(செல்வம் சட்டையை அணிந்து கொள்கிறான். போட்டிருந்த இரண்டு இரும்பு நாற்காலிகளில் ஒன்றில் வந்தவன் அமர்ந்து கொள்கிறான்.)* சொல்லுங்க...

**குலோத்துங்கன்:** சார். இந்த இடத்தை எங்க 'பாஸ்' கேட்கிறது, வேற எதுக்காகவும் இல்லை. பெரிய அளவில ஒரு ஹை – டெக் ஆஸ்பிட்டல் கட்டறதுக்குத்தான். பொது சேவைக்குத்தான். அதனால, நீங்க காலி பண்ணித் தரணும். எவ்வளவு பணம் வேணும்னாலும் - அதாவது நீங்க வேற இடம் வாங்கத்தான் - தரத் தயார்.

**செல்வம்:** இதைத்தான் முன்னமேயே சொல்லியாச்சே. நானும், எவ்வளவு பணம் கொடுத்தாலும், வேணாம்னு சொன்னேனே... எதுவும் புதுசில்லையே.

**குலோத்துங்கன்:** நீங்க ரொம்ப நல்லவரா இருக்கீங்க சார். ஆனா, எங்க 'பாஸ்' அப்படி இல்ல சார். *(அவன் செல்வத்தின் முகத்தைக் கூர்ந்து கவனிக்கிறான். அது சலனமற்றுக் காணப்படுகிறது.)* ரொம்பக் கோபக்காரர். தான் பிடிச்சதுக்கு மூணு கால்னு, அவர் சொன்னா, அதை உலகமும் சொல்லணும்னு எதிர்பார்க்கிறவர். *(மீண்டும் அதே பார்வை. சலனமற்ற முகம்)*

தான் நினைச்சதை நிறைவேற்ற, அவர் எந்த எல்லைக்கும் போகக் கூடியவர். *(மீண்டும் அதே பார்வை. சலனமற்ற முகம்)* பாருங்க, செல்வம். ஒரு முள் கத்தாழை. அவர் காலைப் பொத்துட்டுது.

**செல்வம்:** உங்க 'பாஸ்' பொத்துக்கிட்டார்னு சொல்லுங்க.

**குலோத்துங்கன்:** இருக்கலாம். ஆனா, பாதிக்கப்பட்டவர், எங்க 'பாஸ்'தான். அதனால, அந்த தோட்டத்தையே வெட்டி எரிச்சுட்டாரு...

**செல்வம்:** *(சிரிக்கிறான்)* கல்லுல இடிச்சுக் கிட்டார்னா, மலையையே பேர்ப்பாரா, உங்க பாஸ்?

**குலோத்துங்கன்:** செய்வார். வெடி வச்சு மலையைத் தகர்ப்பார்.

**செல்வம்:** அப்புறம், என்ன என்ன செய்வார்?

**குலோத்துங்கன்:** எதையும் செய்வார்.

**செல்வம்:** ஒரு காரியம் பண்ணச் சொல்லுங்க... ஒரு செடியை நடச் சொல்லுங்க. தண்ணி ஊத்தி, எரு போட்டு வளர்க்கச் சொல்லுங்க. அது தளர்ந்தா, ஊன்று கோல் நடச் சொல்லுங்க. இதுதான் மனுஷன் செய்யக் கூடிய காரியம். நான், அதைத்தான் பண்றேன். என் பிள்ளைகள் நான் வளர்க்கிற செடிகள். இந்தத் தோட்டம் அனுமதி பெற்ற தோட்டம். பஞ்சாயத்துல நான் வரி கட்டி வச்சிருக்கிற இடம். நீங்க போகலாம்.

**குலோத்துங்கன்:** அப்புறம், உங்க இஷ்டம். *(அவன் சலிப்போடு எழுந்து போகிறான். மோட்டார் சைக்கிள் சென்று மறையும் ஒலி கேட்கிறது... மீண்டும் எழுதத் தொடங்குகிறான் செல்வம்.)*

(தொடரும்)

# புதிய கீதை

'நல்லதையே நினைத்து, நல்வழியில் நடந்தால் லட்சியத்தை அடையலாம்' எனும் ஆதி தத்துவத்தை, சாரதி என்ற இளைஞனின் வாழ்க்கை வழியே உபதேசிக்கிறார்கள்.

படம் முழுக்க பாடம் நடத்தினால் தாங்காதென்பதைத் தெரிந்து கொண்டு, விஜய் படத்துக்கான மசாலா அடையாளங்களை விட்டு விடாமல், படைப்புத் திறனுக்கும் படத்தில் கொஞ்சம் இடமுண்டு என நம்பிக்கை யூட்டுகிறார் அறிமுக இயக்குனர் ஜெகன்.



ஆறாவது விரலோடு பிறக்கும் நாயகன் சாரதி, இருபத்து ஏழாவது வயதில் இறந்து விடுவான் என்கிறது ஜாதகம். இந்த ரகசியத்தை, பார்வையாளனோடு மட்டும் ஜோதிடர் பகிர்ந்து கொள்ள, சாரதியின் இரு பத்து ஏழாவது வயதிலிருந்து கதை தொடங்குகிறது.

நேர்மையான இளைஞன், சூப்பர் மாணவன், பார்ட் டைம் பிசினஸ்மேன், பாசமான மகன், எல்லா வயதினருக்கும் நண்பன் என்று சுறுசுறு தேனீயாய் வளைய வருகிற சாரதி, ரியல் எஸ்டேட் முதலை, கலாபவனின் கறுப்புப் பணத்தை அரசுக்குக் காட்டிக் கொடுக்கிறார்.

வில்லன் வெகுண்டு எழ, மாஸ்டர் பீட்டர் ஹெய்ன் தயவில் சூடான குருக்ஷேத்திரம் (?). அதில் இருவருக்கும் வெற்றியுமில்லை, தோல்வியுமில்லை என்று முடிவாகிவிட, சாலை விபத்தின் உருவத்தில் சாரதியின் உயிருக்கு ஆபத்து வந்து சேர்கிறது. இறுதியில் முன்னரே யூகித்து விடக் கூடிய முடிவைக் காட்டுகிறார்கள்.

வில்லனை அடித்துத் துவைத்துவிட்டு, "நாளை என் தங்கைக்குத் திருமணம், நீ திருந்திவிட்டால் வந்து வாழ்த்திவிட்டுப் போ" என்று சொல்கிற காட்சியிலும், விபத்தில் சிக்கி, நினைவை இழந்து கொண்டிருக்கும் தருணத்தில் "என்னோட பேர் சாரதி... நான் சாகக் கூடாது டாக்டர்" என்று தன்னம்பிக்கையை, பற்களில் கடித்து தக்க வைத்துக் கொள்ள முயலும் காட்சியிலும் நெஞ்சில் ஒட்டிக் கொள்கிறார் விஜய்.

சாரதியின் அப்பாவி கேர்ள் ஃப்ரெண்ட் கஜியாக சோடா புட்டிக் கண்ணாடியும், அதன் பின்னணியில் மொச்சைக் கொட்டை விழிகளுமாய் நடிப்பில் ஸ்கோர் பண்ணியிருக்கும் மீரா ஜாஸ்மீன், காதல் வயப்பட்டதும் பட்டென்று முதிர்ச்சியான பெண்ணாக மாறிவிடுவது இடிக்கிறது.

கதையில் கலாபவன் மணிக்கு ஸ்டீரியோ டைப் வில்லன் பாத்திரம். ஆனால் அப்படியொரு நிறம் வந்துவிடக் கூடாதே என்று நடிப்பில் அவர் காட்டுகிற அக்கறை அபாரம்.

யுவனின் பின்னணி இசை மட்டும் பரவாயில்லை ரகம்.

சூட்டிக் கொண்ட தலைப்புக்கு சகாயம் பண்ணுகிற படங்கள் கோடம்பாக்கத்தில் குறைவு. அந்த வகையில் புதிய கீதை - நிறைவு.

- விஷுவல்தாசன்

● ஆவரெஜ்




✉ 'பழைய ஸ்டோரி புது டயலாக்' படித்ததும் மெய் மறந்து சிரித்தேன். கலையான கற்பனை!
திருவாரூர், எஸ். பாலச்சந்தர்

✉ கந்துவட்டியின் பிடியில் சிக்கித்தவிக்கும் 'கோலிவுட்'டின் இன்றைய நிலையை 'நச்'சென உணர்த்தி நீர் வெளியிட்டிருந்த தலையங்கக் கார்ட்டூன் தூள்!
திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி

✉ 'நான் அவமானப்படுத்தப்பட்டேன்' என்று, வருத்தமும் வசைமாரியும் பொழிந்த முதல்வருக்கு, தலையங்கம் வாயிலாகத் தந்த விளக்கவுரை அபாரம்.
கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி

# ½ நிமிஷ கருத்தும் ½ மணி சிந்தனையும்...

✉ 'கதை கேளு கதை கேளு' பயனுள்ள இலவச இணைப்பு. நம்மை நாமே ரீசார்ஜ் செய்து கொள்ளுமளவுக்கு இக்கதைகளில் நீதி இருந்தது. விடுமுறைக் காலத்தில் உபயோகமான கதைகள் படித்த திருப்தி இருந்தது!
மொரட்டுப்பாளையம், இரா.வி.சௌந்தர்யா

✉'எந்த வலைக்குள் யார்?' என்று தலைப்பிட்டு 'சில்லுக்கருப்பட்டி' வெற்றிகரமான ஆறாவது வாரமாக சென்று கொண்டிருக்க, பல ஆண்டுகளாக கல்கியில் எழுதாமலிருந்த தாமரை மணாளன் அவர் கைப்பட எழுதிய வரிகளைப் பாருங்கள்.. "கதை முடிவில் யார் வலைக்குள் யார்... புரியாத குழப்பம்." என்கிறார். எமதர்மன் வலையில் இவர் ஏன் சிக்கினார்?
மேற்கு மாம்பலம், எஸ்.ராம்மோகன்

✉ 'பிட்ஸ் பஜார்' பக்கம் சூப்பர். இப்படி குசும்பாகப் படங்கள் போட்டால் ஏன் படிக்க மாட்டார்கள்! கோடை வெயிலுக்குக் குளிர்ச்சியாக இருந்தது.
கமுதி, எம்.கே.இளமதி

✉ நடிகர் சிலம்பரசனுக்கு நடிப்பு வருகிறதா என்ற கேள்விக்கு தராசு பதில் உண்மையில் மனத்தைத் தொட்டுவிட்டது. மற்றவர் நடிப்பு, ஸ்டைல் நிரந்தரம் கிடையாது என்பதை சிம்பு உணர வேண்டும்.
தருமபுரி, கே.எம்.ஸ்வீட் முருகன்

✉ இன்று அரசியலில் ஈடுபட்டுள்ள பெண்களில் முக்கால் பங்கினர் தந்தை, மாமனார், சகோதரர், கணவன் என யாரோ ஓர் ஆண் பின்னணியில் இயக்க, பினாமிகளாகத்தான் செயல்படுகிறார்கள். சுயமாகச் சிந்தித்து சொந்தக்காலில் நிற்காதவரை எத்தனை சதவிகித இட ஒதுக்கீடு கொடுத்தாலும் சாதிக்கப் போவது ஏதுமில்லை.
அறந்தாங்கி, பிரகதீஸ்வரி இராஜப்பன்

✉ பக்கம் பக்கமாகச் சொல்ல வேண்டிய கருத்தை அரை நிமிடத்து கருத்துப்படம் மூலம் விளக்கியது மிகவும் சிந்திக்க வைத்தது.
தூத்துக்குடி, ஏ.எஸ்.காந்தி

✉ அகட விகடம் நிகழ்ச்சிக்குத் தலைமை (ரிமோட்) தாங்கி, நீங்கள் குறிப்பிட்டபடி பேசியவர் பேராசிரியர் அப்துல் காதர்; பாஸ்கர ராவ் அல்ல. மேலும் அவர் பெயர் பாஸ்கர ராவ் அல்ல. பாஸ்கராஜ்.
சென்னை, எம்.தூசிமுத்து

அன்னமே பிரம்மா! அன்னமே விஷ்ணு! அன்னமே சிவன்!

சித்தர்கள் வாழும் பூமியாம் - திருவருள் பொழியும்

# திருவண்ணாமலையில்

# பௌர்ணமி நாளில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



பேரன்புடையீர்! நமஸ்காரம்.

பஞ்சபூதத் தலங்களில், அக்னித் தலமாக விளங்கும் திருவண்ணாமலை, நினைத்தாலே முக்தி தரும் புண்ணிய க்ஷேத்திரம். கிரியே சிவமாகவும், சிவமே கிரியாகவும் விளங்குவதால் இங்கு பௌர்ணமி தினத்தில் கிரிவலம் வருவது சிவபெருமான் உறையும் கைலாயத்தையே வலம் வருவதற்கு ஒப்பாகும். இங்கு பௌர்ணமி காலத்தில் கிரிவலம் வரும் பக்தர்களுக்கும், சாதுக்கள், ஊனமுற்றோர், சன்யாசிகள், ஏழை எளிய மக்கள், பக்தர்கள் ஆகியோருக்கு அன்னம் அளிப்பது மகத்தான புண்ணியத்தை நமக்குத் தருகிறது.

**தடுத்தாட் கொள்வது, கிரக நிலைகளை மாற்றுவது, ஊழ்வினைகளை நீக்குவது, முக்தி தருவது, ஆயுளை நீடிப்பது, நோய்களைக் குணப்படுத்துவது போன்ற சிவ லீலைகள் நிகழ்ந்த இவ்விடத்தில், அன்னதானத்தின் மூலம் புண்ணியம் பெறுவதும், மோக்ஷம் அடைய முயல்வதும் உயர்ந்த லட்சியமாகும்.**

★ மனச்சாந்தி பெற ★ திருமணம் கைகூட ★ நோய்நொடிகள் தீர ★ எண்ணங்கள் வெற்றி பெற ★ சந்தான பாக்யம் பெற ★ பிரச்சனைகள் எளிதில் தீர ★ கணவன் மனைவி ஒற்றுமை ஏற்பட ★ தொழிலில் மேன்மை பெற ★ பிரிந்தவர்கள் ஒன்று சேர ★ கடன் தொல்லைகளிலிருந்து விடுபட ★ நினைத்த காரியம் நிறைவேற ★ உங்களுக்காக நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கிறோம்.

அன்னதானம் செய்ய அரிசி போன்ற உணவு பொருட்களும் சிறிய தொகையும் ஏற்றுக் கொள்ளப்படும்.
ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 மற்றும் ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். அல்லது **கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால்** தயாரிக்கப்பட்ட அபூர்வ யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடைகளை அனுப்பும் அன்பர்கள் **SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

## ஸ்ரீ அன்னலஷ்மி அன்னதான ஸேவா டிரஸ்ட்

## SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

☎: (044) 24900303, 24900603 Mobile : 94441 16300 (A UNIT OF GOPURA DHARISANAM)

# அடிப்படை உரிமைக்கு ஆப்பு!

வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்களை நீதிபதி முன்பு நேரடியாக அறிமுகப்படுத்தாமல், வீடியோ வசதி மூலம் ஆஜர்படுத்தலாம் - இதை நடைமுறைப்படுத்துதற்கான சட்டத் திருத்த மசோதா, சமீபத்தில் நடந்து முடிந்த தமிழக பட்ஜெட் கூட்டத் தொடரில் அறிமுகம் செய்யப்பட்டது.

''அடிப்படை உரிமைக்கே ஆப்பு வைக்கும் மசோதா! இதைச் சட்டமாக்க அனுமதிக்கக் கூடாது'' என்று அனைத்துத் தரப்பிலிருந்தும் அலறல் கேட்கிறது. தமிழக சட்டமன்றத்தில் அ.தி.மு.கவுக்கு அறுதியோ அறுதிப் பெரும்பான்மை இருப்பதால், இந்த விபரீத வீடியோ கான்ஃபரன்சிங் மசோதாவை நிறைவேற்றுவதிலும் அ.தி.மு.க. அரசுக்கு சிரமம் இருக்கப் போவதில்லை. இந்த மசோதா சட்டமாகி அமல்படுத்தப் பட்டால்...!



• கே. சிவா

பாதகங்களைப் பட்டியலிடுகிறார் வழக்கறிஞர் கே. சிவா :

குற்றவியல் நடைமுறைச் சட்டம், பிரிவு நூற்று அறுபத்து ஏழு, உட்பிரிவு இரண்டின்படி குற்றம் சாட்டப்பட்ட நபரை நீதிபதி முன்பு நேரில் ஆஜர்படுத்தாமல் அவரைக் காவலில் வைக்க போலீசுக்கு அதிகாரம் இல்லை. இது, கைதிகள், குற்றம் சாட்டப்பட்டவரின் அடிப்படை மனித உரிமையைப் பாதுகாக்கும் பொருட்டு உருவாக்கப்பட்ட நடைமுறை. இதனால் குற்றம்சாட்டப்பட்ட நபர்களை அழைத்து வந்து நீதிபதி முன்பு நிறுத்த வேண்டிய கட்டாய நிலை போலீசாருக்கு உள்ளது.

சட்டத்தில் இந்த உட்பிரிவு திருத்தப் படுமானால், அது கைதிகளின் மீதான நேரடி மனித உரிமை மீறலாக மாறிவிடும்.

* நீதிபதி முன்பு நேரடியாக ஆஜர் படுத்தும் போது, கைதிகள் மற்றும் குற்றம் சாட்டப்பட்டவர்கள் தங்களது குறைகளை, கோரிக்கைகளை நேரடியாக நீதிபதியிடம் எடுத்துச் சொல்லி நிவாரணம் பெற முடியும். வீடியோ வசதியில் கைதிகளின் குரல் ஒடுக்கப்படலாம் அல்லது இருட்டடிப்புச் செய்யப்படலாம்.

* நேரில் ஆஜர்படுத்தப்படும் போது குறைகளைச் சொல்லும் கைதிகளின் உணர்ச்சிகளை, அருகில் இருக்கும் நீதிபதி நேரடியாகப் புரிந்து கொள்ள முடியும்.



• சென்னை உயர்நீதிமன்றம்



• கே. நவாஸ்

வீடியோ வசதியில் கைதியின் உருவம் சிறிதாகி விடும் பட்சத்தில் அவரது உண்மையான உணர்ச்சியை, எடை போடுவது நீதிபதிக்கு சவாலான விஷயம்.

• வீடியோ லிங்கேஜ் வசதியானது நீதிமன்றம் மற்றும் சிறைச்சாலைகளில் நிறுவப்படும். சிறையில் ஜெயிலரின் கட்டுப்பாட்டை நினைத்து, பயந்து, வீடியோ முன்பு பணிந்து போய் விடுவதும், இதுவே ஜெயிலில் தனக்குத் தற்காலிகப் பாதுகாப்பு என்று ஒடுக்குமுறைகளை கைதி பொறுத்துப் போய் விடுவதும் வழக்கமாகி விடும். இதனால் காவல் துறையின் கை ஓங்கும். வழக்கில் உண்மை வெளிப்படாது.

• ஒரு வழக்கு விரைவாக முடிக்கப்பட வேண்டுமானால், அவ் வழக்கு குறித்த விவரங்களும், ஷரத்துகளும் அடங்கிய ஆவணங்கள் (கேஸ் கட்டு) நீதிபதி முன்பு சமர்ப்பிக்கப்பட வேண்டும். வீடியோ முறையில் ஆவணங்களைச் சமர்ப்பிப்பதில் காலதாமதம் ஏற்பட்டாலோ அல்லது எலக்ட்ரானிக் முறையில் டவுன்லோட் செய்து கொள்வதில் தாமதம் ஏற்பட்டாலோ, வாய்தாக்கள் அதிகரிக்க இதுவே காரணமாகி விடும்.

• முக்கியமாக குற்றம் சாட்டப்பட்டவர்களும் அவர்களது வழக்கறிஞர்களும் கலந்து பேசும் வாய்ப்புகள் குறைந்து போய், கைதியின் தன்னம்பிக்கை சிதைந்து விடும். இது கைதிகளிடம் மனநல பாதிப்பையும் ஏற்படுத்தலாம்.

• கைதிகளை நேரடியாக ஆஜர்படுத்துவதன் மூலம், அரசுக்குச் செலவும், மனித ஆற்றலும் வீணாகிறது என்று சொல்வது மக்கள் நல அரசுக்கு அழகல்ல. கைதிகளின் நலனுக்குச் செலவிடுவது அரசின் கடமை.

• பொய் வழக்குகள் போடுவதை விடுத்து நியாயமான வழக்குகளை மட்டும் பதிவு செய்தாலே, மாஜிஸ்திரேட் நீதிமன்றங்களில் லட்சக் கணக்கில் தேங்கிக் கிடக்கும் வழக்குகள் படிப்படியாகக் குறைந்து விடும்.

• தவிர, குற்றம் சாட்டப்பட்டவருக்கு நீதிமன்றக் காவல் வாங்கித் தர போலீசார் தொடக்கத்தில் காட்டும் சுறுசுறுப்பை, வழக்கை விரைந்து முடிப்பதற்கும் காட்டினால் வழக்குகள் தேங்காது.

• ஆந்திர மாநிலத்தில் ஒரு சில நீதிமன்றங்களில் மட்டுமே தற்போது நடைமுறையில் இருக்கும் இம்முறை வெற்றி பெறாத ஒன்று. பிடிவாதமாக சட்டமாக்கப்பட்டு இது நடைமுறைப் படுத்தப்படுமானால், புயல், வெள்ளம் போன்ற இயற்கைச் சீற்றங்களில் சாலைகள் பாதிக்கப்பட்டு, கைதிகளை அழைத்து வர முடியாத நிலை இருக்கும் போதும், தேர்தல் போன்ற போலீசாரின் தேவையுள்ள காலங்களிலும் மட்டும் தற்காலிகமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

• எப்படியிருப்பினும் இது சட்டமா

னால் மனித உரிமை மீறலுக்கு நூறு சதவிகித சாத்தியங்களை உருவாக்கக்கூடிய சட்டமாகவே இருக்கும்.

அனைத்திற்கும் மேலாக வீடியோ, காமிரா போன்ற சாதனங்களை சிறைச்சாலைகளிலும் நீதிமன்றங்களிலும் நிறுவவும். அவற்றை உரிய நேரத்தில் இயக்கவும், தடங்கல்கள் ஏற்பட்டால் பழுது பார்க்கவும், பணச் செலவு, பொறியியல் வல்லுநர்களின் சேவை போன்றவை தேவை. இவை அரசுக்குச் செலவினத்தைத்தான் கூட்டும். தவிர, சாதனங்களில் ஏற்படும் பழுது, விசாரணைகளைத் தாமதப்படுத்திவிடும் அபாயமும் உண்டு.

**சா**தகமான அம்சங்களை அடுக்குகிறார் வழக்கறிஞர் கே. நவாஸ் :

* தகவல் தொழில் நுட்பப் புரட்சியால், அரசு நிர்வாகத்தில் வீடியோ கான்ஃபரன்சிங் பயன்படுத்துவது நேரம், பணம் இரண்டையும் மிச்சப்படுத்தும்.
* உயர் நீதிமன்றம், மாவட்ட நீதிமன்றம் போன்றவற்றுக்கு, ஒரு மாவட்டத்திலிருந்து இன்னொரு மாவட்டத்துக்குக் கைதிகளை அழைத்துப் போகும் நிலையில் இதற்குச் செலவிடப்படும் அரசின் கணிசமான பணமும், மனித வளமும், வேறு மக்கள் பணிகளுக்கு ஆக்கபூர்வமான வகையில் செலவழிக்கலாம்.
* குற்றம் சாட்டப்பட்டவர்களையும், கைதிகளையும் நீதிமன்றத்துக்கு அழைத்து வரும் வழியிலும், நீதிமன்ற வளாகத்திலும் கூட அவர்களுக்குப் பாதுகாப்பு இல்லாத நிலையைத் தவிர்க்க முடியும்.
* தொடர் குற்றவாளிகள், தீவிரவாதிகள் போன்றவர்களை விசாரணைக்கு அழைத்துச் செல்லும் வழியில் தப்பிச் செல்வதிலிருந்து தடுக்க உதவும்.
* வழக்கு முடியும் வரை அல்லது ஜாமீன் பெறும் வரை சிறைச்சாலையின் பாதுகாப்பு, குற்றம் சாட்டப்பட்டவருக்கு உறுதியாகி விடுகிறது.
* வீடியோ வசதி மூலம், விசாரணையைத் துரிதப்படுத்த முடியும் என்பதால், வாய்தாக்கள் குறைந்து, நீதிபதி வழக்கை விரைந்து முடிக்க முடியும்.
* கைதிகளைச் சந்திக்க வழக்கறிஞர்களுக்கென்று பிரத்யேக நேரம் சிறைச்சாலைகளில் ஒதுக்கித் தரப்பட்டுள்ளது. இதனால் கைதிகள், வழக்கறிஞர் இடையிலான தொடர்பு துண்டிக்கப்படுவதற்கான வாய்ப்புகள் குறைவு. புகார்கள், பிரச்னைகள் இருப்பின், வழக்கறிஞரைச் சந்திக்கும் போது எடுத்துச் சொல்லி, நேரில் ஆஜராக பிரத்யேக மனு தாக்கல் செய்ய உரிமை இருக்கிறது.
* அமைச்சர்கள், மாவட்ட ஆட்சியர்கள், காவல் துறை கண்காணிப்பாளர்கள் என்று எல்லா மட்டத்திலும் வீடியோ கான்ஃபிரன்சிங் முறை வெற்றிகரமாகப் பயன்படுத்தப்படும் போது, குற்ற விசாரணைக்குப் பயன்படுத்தத் தயங்க வேண்டியதில்லை.
* வருவாய் பாதிக்கப்படும் என்பதற்காக வழக்கறிஞர்கள் இதை எதிர்க்கக்கூடும்.

சாதக, பாதகங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது மனித உரிமை மீறலுக்கும் காவல் துறை அத்துமீறலுக்கும் சகாயம் பண்ணக்கூடிய சட்டத்திருத்தமாக இது அமையும் வாய்ப்புகளே அதிகம்.

— ஜே.ஜே.

படங்கள் : ராஜன்

# மொஃபஸிலில் பஸ்

தமிழினியன்

திருச்சி புறநகர் பஸ் நிறுத்தம்.

ஜங்ஷன் செல்லும் பஸ்ஸுக்காகக் காத்திருந்த கருணாகரனுக்கு ஜீரணிக்க முடியாத ஒரு சங்கடம். காரணம், அவரது காண்டிராக்ட்டில் வேலை செய்யும் சித்தாள் பெண்களும் அதே பஸ்ஸுக்காக அங்கே கூடி நின்றதுதான்.

முதலாளியும், கூலிக்காரர்களும் ஒரே பஸ்ஸில் பிரயாணம் செய்வதா? கௌரவத்தைச் சீண்டிய இக்கேள்வி அவரைப் பாடாய்ப்படுத்தியது. இப்படி எல்லாம் இக்கட்டு நேருமென்று தெரிந்தால் காரை அவர் சர்வீசுக்கே விட்டிருக்கமாட்டார்.

இப்போது என்ன செய்யலாம். புழுக்கம். மறுகணமே ஒரு திடீர் மலர்ச்சி. டவுன் பஸ் கட்டணம் நாலரை ரூபாய்தான். வெளியூர் பஸ்ஸில் ஆறு ரூபாய். சித்தாள்கள் நிச்சயமாய் டவுன் பஸ்ஸில்தான் ஏறுவார்கள்.

சற்றைக்கெல்லாம் நகர - வெளியூர் பஸ்கள் இரண்டும் ஒரே நேரத்தில் வந்தன. கருணாகரன் வெளியூர் பஸ்ஸில் ஏறினார். அவருக்குப் பின்னால் கொஞ்சம்கூட எதிர்பாராத அந்தச் சம்பவம் நடந்தது. சித்தாள் பெண்களும் அதே பேருந்தில் ஏறிக் கொண்டார்கள். தர்ம சங்கடமானது அவருக்கு. அதைவிட வேதனை அப் பெண்களுடன் சேர்ந்து அவரும் நின்று கொண்டே பயணம் செய்ததுதான். அடுத்த நிறுத்தத்தில் பெண்கள் இருக்கை காலியாயிற்று. அனேகமாய் அத்தனை சித்தாள்களும் உட்கார்ந்து விட்டார்கள். பாவம். கருணாகரன் மட்டும் நின்று கொண்டே வந்தார். இறங்கும்வரை அவருக்கு உட்கார இடம் கிடைக்கவே இல்லை. அவமானம், ஆத்திரம். கொலம்பியா விண்கலம் போல் நொறுங்கிப் போனார் அவர். சித்தாள் பெண்களைப் பார்க்கப் பார்க்க அவருக்குக் கோபம்தான் வந்தது.

ஐம்பது காசுக்கு ஆலாய்ப் பறக்கும் கூலிகள் என்னோடு பஸ் ஏறி, என்னைப் போல் அதிக பஸ் சார்ஜ் கொடுத்து, எனக்கு முன்னே உட்கார்ந்து ஓட்டி அடிக்கிறீர்களா... இருங்க... இருங்க... நாளைக்கு உங்களுக்கெல்லாம் சரியான பாடம் புகட்டுகிறேன்.

கருவினார், கருணாகரன்.

மறுநாள். காலை பதினொரு மணி இடைவேளை. சைக்கிள் மணி அடித்தது. டீயும் சமோசாவும் வந்துவிட்ட அறிவிப்பு.

"டீ வந்துருச்சுடி..."

ஆங்காங்கே வேலையில் ஈடுபட்டிருந்த பெண்கள் ஒருத்தியை ஒருத்தி அழைத்தவாறு ஓடி வந்து வரிசையில் நின்றார்கள். சைக்கிள் பையன் பிளாஸ்டிக் கப்பில் டீ பிடித்துக் கொடுத்தான்.

"சமோசா:" கோரசாக குரல் எழுந்தது.

"முதலாளி சமோசா கொடுக்க வேண்டாம்னுட்டாரு"

"ஏன்?"

"அவருகிட்டே போய்க் கேளு."

அவர்கள் கருணாகரனிடம் ஓடினார்கள்.

"ஏன் முதலாளி!"

"அப்படித்தான். இன்னிலேருந்து கம்பெனி கணக்கிலே சமோசா கிடையாது. டீ மட்டும்தான். சமோசா

வேணுமின்னா சொந்தக் கணக்கிலே வாங்கிக்குங்க."

"என்னங்க ஐயா, இப்படி குண்டைத் தூக்கிப் போடுறீங்க. நாங்க என்ன தப்பு பண்ணினோம்?"

"உங்களுக்கெல்லாம் காசுத் திமிர் அதிக மாயிடுச்சு..."

"எங்களுக்கா... திமிரா...? ஏன் முதலாளி அப்படிச் சொல்றீங்க!"

"நேத்துதான் பார்த்தேனே. நாலு ரூபாய் டவுன் பஸ்ஸை விட்டுட்டு, ஆறு ரூபா கொடுத்து மொஃபஸில் பஸ்ஸிலே போனீங்க இல்லே. காசோட அருமை தெரிஞ்சா அப்படிப் போவீங்களா.. அத னாலே இனி உங்களுக்கு சமோசா கிடை யாது."

"ஐயோ... சாமி... நாங்க காசு மிதப்பிலே அப்படிப் போகல்லைங்க ஐயா. காலம்பற ஏழு மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பு றோம். ஆக்கிப்போட ஆள் இல்லாமே புள் ளைங்க எல்லாம் பசி பட்டினியா காத் துட்டு இருப்பாங்க. டவுன் பஸ்ஸிலே போனா ஒவ்வொரு ஸ்டாப்பிலும் நின்னு நின்னு வீட்டுக்குப் போய்ச்சேர ரொம்ப நேரமாயிடுதுங்க. வெளியூர் பஸ்னா வெர சாப் போயிடும். புள்ளைங்க பசிக் களைப் பிலே தூங்கறதுக்கு முந்தி எதனாச்சும் வயித்துக்குப் பண்ணிக் கொடுக்கலாம்னு தான் ஐயா அந்தப் பஸ்ஸிலே ஓட்டமா ஓடுவோம். மத்தபடி எங்களுக்கு ஒத்தை ரூபாங்கறது நூறு காசில்ல முதலாளி. நூறு ரூபா மாதிரி. பொத்திப் பொத்திதான் செலவு பண்ணுவோம். இந்த சமுசாவை நம்பி காலையிலே இருந்து ஒண்ணுமே சாப்பிடாம இருக்கோம் ஐயா."

கெஞ்சிய குரல்களைக் கேட்டுக் கூசிப் போனார் கருணாகரன். ●



# சிவகாமியின் சபதம்

ஐந்தாம் அத்தியாயம்

## மாமல்லரின் பயம்

காஞ்சி அரண்மனையின் மேல் உப்பரிகையில் பளிங்குக் கல் மேடையில், விண்மீன் வைரங்கள் பதித்த வான விதானத்தின் கீழ், மாமல்லரும் மானவன்மனும் அமர்ந்திருந்தார்கள்.

இலட்சக்கணக்கான ஜனங்கள் வாழ்ந்த காஞ்சி மாநகரத்தில், அப்போது அசாதாரண நிசப்தம் குடி கொண்டிருந்தது.

மாமல்லர், அந்த நள்ளிரவில், காஞ்சி நகரின் காட்சியை ஒரு தடவை சுற்றி வளைத்துப் பார்த்துவிட்டு, ஒரு பெருமூச்சு விட்டார்.

''இந்தப் பெருநகரம் இன்றைக்கு அமைதியாகத் தூங்குகிறது. நாளைக்கு இந் நேரம் ஏக அமர்க்களமாயிருக்கும். நகர மாந்தர் நகரை அலங்கரிக்கத் தொடங்குவார்கள். படை வீரர்கள் புறப்பட ஆயத்தமாவார்கள், ஆகா! நாளை இரவு இந்த நகரில் யாரும் தூங்கவே மாட்டார்கள்!'' என்றார் மாமல்லர்.

''பல்லவேந்திரா! அப்படியானால் குறித்த வேளையில் புறப்படுவதென்று முடிவாகத் தீர்மானித்து விட்டீர்களா? பாண்டியன் வந்து சேராவிட்டால்கூட?'' என்று மானவன்மன் கேட்டான்.

''விஜயதசமியன்று காலையில் ஒருவேளை சூரியன் தன் பிரயாணத்தைத் தொடங்காமல் நின்றாலும் நான் நிற்க மாட்டேன். ருத்ராச்சாரியார் சொன்னதைக் கேட்கவில்லையா, இளவரசே!''

மானவன்மன் இலங்கை அரசனாக இன்னும் முடிசூட்டப்படவில்லையாதலால் 'இளவரசன்' என்றே அழைக்கப்பட்டு வந்தான்.

''ஆம்; ருத்ராச்சாரியார் கூறியதைக்

அமரர் கல்கி

கேட்டேன். பல்லவேந்திரா! அப்புறம் ஒருமுறை நான் தனியாகவும் ருத்ராச்சாரியாரிடம் சென்று ஜோசியம் கேட்டுவிட்டு வந்தேன்!"

"ஓஹோ! அப்படியா! ஆச்சாரியார் என்ன சொன்னார்?"

"எல்லாம் நல்ல சமாசாரமாகத்தான் சொன்னார்!"

"அப்படியென்றால்?"

"இலங்கைச் சிம்மாசனம் எனக்கு நிச்சயம் கிடைக்குமென்றார். அதற்கு முன்னால் பல இடையூறுகள் நேரும் என்றும் பல போர் முனைகளில் நான் சண்டை செய்வேன் என்றும் சொன்னார்!"

மாமல்லர் புன்னகை புரிந்து, "இவ்வளவுதானா? இன்னும் உண்டா?" என்று கேட்டார்.

"தாங்கள் வாதாபியைக் கைப்பற்றி, வெற்றி வீரராகத் திரும்பி வருவீர்களென்றும், இந்தக் காரியத்தில் இரண்டு இராஜ குமாரர்கள் தங்களுக்கு உதவி புரிவார்கள் என்றும் கூறினார்!"

மாமல்லர் சிரித்துக் கொண்டே, "அந்த இரண்டு இராஜகுமாரர்கள் யார்?" என்று கேட்டார்.

"இதே கேள்வியை நானும் ருத்ராச்சாரியாரைக் கேட்டேன். ஜோசியத்தில் அவ்வளவு விவரமாகச் சொல்ல முடியாது என்று கூறிவிட்டார்" என்றான் மானவன்மன்.

"என் அருமைத் தோழரே! அந்த விவரத்தை நான் சொல்கிறேன். எனக்கு வாதாபிப் போரில் உதவி செய்யப் போகிற அரச குலத்தினரில் நீர் ஒருவர். நீர் இந்தக் காஞ்சி நகரில் இருந்தபடியே எனக்கு உதவி செய்யப் போகிறீர்...!" என்று மாமல்லர் சொல்வதற்குள், இலங்கை இளவரசன் குறுக்கிட்டு, "பல்லவேந்திரா! என்னுடைய விண்ணப்பத்தைக் கேட்டருளுங்கள். குமார பாண்டியன் வந்து சேருவதுதான் சந்தேகமாயிருக்கிறதே, அவனுடைய ஸ்தானத்தில் என்னை அழைத்துப் போகலாகாதா? தாங்கள் போர்க்களம் சென்ற பிறகு, காஞ்சி அரண்மனையில் என்னைச் சுகமாக உண்டு, உடுத்தி, உறங்கச் சொல்கிறீர்களா? இது என்ன நியாயம்!" என்று கேட்டான்.

"என் அருமைத் தோழரே! நான் உம்மைப் போருக்கு அழைத்துப் போக மறுப்பதற்கு எல்லாவற்றிலும் முக்கியமான காரணம் ஒன்று இருக்கிறது. அதை இதுவரையில் சொல்லவில்லை. நீர் பிடிவாதம் பிடிப்பதால் சொல்கிறேன். ஒருவேளை போர்க்களத்தில் உமது உயிருக்கு அபாயம் நேர்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். பின்னர், இலங்கை இராஜ்ய வம்சத்தின் கதி என்ன ஆவது? உமது இராஜ்யத்தை அந்நியாகவும் அக்கிரமமாகவும் அபகரித்துக் கொண்டிருக்கிறவனுக்கே அல்லவா இராஜ்யம் நிலைத்துப் போய் விடும்! மானவன்மரே! இராஜ குலத்தில் பிறந்தவர்கள் தங்களுடைய வம்சம் தடைப்பட்டுப் போகாமல் பார்த்துக் கொள்வதில் முதன்மையான சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். பல்லவ வம்சத்தை விளங்க வைப்பதற்கு, எனக்கு ஒரு புதல்வன் இருக்கிறான்; உமக்கு இல்லை. ஆகையினால்தான் முக்கியமாக உம்மை வரக் கூடாதென்கிறேன்" என்றார் மாமல்லர்.

இதைக் கேட்ட மானவன்மன் பொருள் பொதிந்த புன்னகை புரிந்த வண்ணம், "பல்லவேந்திரா! இதைப் பற்றி என் மனைவி ஸுஜாதையிடம் இப்போதே சொல்லி, அவளோடு சண்டை பிடிக்கப் போகிறேன். இலங்கை இராஜ வம்சத்துக்கு அவள் இன்னும் ஒரு புதல்வனைத் தராத காரணத்தினால் தானே என் வாழ்நாளில் ஓர் அரிய சந்தர்ப்பம் கைநழுவிப் போகிறது? உலக சரித்திரத்தில் என்றென்றைக்கும் பிரசித்தி பெறப் போகிற வாதாபி யுத்தத்தில் நான் சேர்ந்து கொள்ள முடியாமலிருக்கிறது?" என்று சொல்லிக் கொண்டே எழுந்தான்.

"நண்பரே! உட்காரும். உமது துணைவியோடு சண்டை பிடிப்பதற்கு இப்போது அவசரம் ஒன்றும் இல்லை. நான்

வாதாபிக்குப் புறப்பட்டுப் போன பிறகு, சாவகாசமாகத் தினந்தோறும் சண்டை போட்டுக் கொண்டிருக்கலாம்" என்றார் சக்கரவர்த்தி.

மேடையிலிருந்து எழுந்த மானவன்மன் மீண்டும் உட்கார்ந்து, "பிரபு! நள்ளிரவு தாண்டி விட்டதே? நாளை இரவுதான் யாரும் தூங்குவதற்கில்லை. இன்றைக்காவது தாங்கள் சிறிது தூங்க வேண்டாமா?" என்று கேட்டான்.

"என்னைத் தூங்கவா சொல்கிறீர்! எனக்கு ஏது தூக்கம்? நான் தூங்கி வருஷம் பன்னிரண்டு ஆகிறது!" என்றார் மாமல்லர்.

"லக்ஷ்மணர் காட்டுக்குப் போனபோது, அவருடைய பத்தினி ஊர்மிளை, அவருடைய தூக்கத்தையும் வாங்கிக் கொண்டு, இரவும் பகலும் பதினாலு வருஷம் தூங்கினாளாம். அம் மாதிரி தங்களுடைய தூக்கத்தையும் யாராவது வாங்கிக் கொண்டு தூங்குகிறார்களா, என்ன?" என்று மானவன்மன் கேட்டான்.

"இளவரசே! என்னுடைய தூக்கத்தையும் ஒரு பெண்தான் கொண்டு போனாள். என்னைக் கேட்டு அவள் வாங்கிக் கொள்ளவில்லை. அவளே அபகரித்துக் கொண்டு போய்விட்டாள். ஆகா! அந்தச் சிற்பி மகள் இங்கே சமீபத்தில் அரண்ய வீட்டில் இருந்தபோதும் எனக்குத் தூக்கம் இல்லாதபடி செய்தாள். இப்போது நூறு காத தூரத்துக்கப்பால் பகைவர்களின் நகரத்தில் இருக்கும் போதும் எனக்குத் தூக்கம் பிடிக்காமல் செய்கிறாள்..." என்று மானவன்மனைப் பார்த்துச் சொல்லி வந்த மாமல்லர், திடீரென்று வானவெளியைப் பார்த்துப் பேசலானார்: "சிவகாமி! ஏன் என்னை இப்படி வருத்துகிறாய்? உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகப் பகலெல்லாம் பாடுபடுகிறேனே. இரவிலே சற்று நேரம் என்னை நிம்மதியாகத் தூங்க விடக் கூடாதா? வாதாபியில் தனி வீட்டிலே இரவெல்லாம் நுந்தா விளக்கே துணையாக உட்கார்ந்து என்னைச் சபித்துக் கொண்டிருக்கிறாயா? தாங்காத களைப்பினால், தப்பித் தவறி நான் சற்றுத் தூங்கினால், கனவிலும் வந்து என்னை வதைக்கிறாயே? உன்னை நான் மறக்கவில்லை, சிவகாமி! உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியையும் மறந்து விடவில்லை. இத்தனை நாள் பொறுத்துக் கொண்டிருந்தவள் இன்னும் கொஞ்ச நாள் பொறுத்திரு!"

மாமல்லர் வெறிகொண்டவர் போல் வானவெளியைப் பார்த்துப் பேசியது, இலங்கை இளவரசனுக்குப் பயத்தை உண்டாக்கிற்று.

"பல்லவேந்திரா! இது என்ன? சற்று அமைதியாயிருங்கள்" என்றான் மானவன்மன்.

"நண்பரே! என்னை அமைதியாயிருக்கவா சொல்கிறீர்! இந்த வாழ்நாளில் இனி எனக்கு எப்போதாவது மன அமைதி கிட்டுமா என்பதே சந்தேகந்தான். மானவன்மரே! பத்து வருஷத்துக்கு முன்பு நான் ஒரு தவறு செய்தேன். ஓர் அபலைப் பெண்ணின் ஆத்திரமான பேச்சைக் கேட்டு, அந்தக் கணத்தில் மதியிழந்து விட்டேன். நானும் சேனாதிபதியும் வாதாபியில் சிவகாமியைச் சந்தித்து அழைத்தபோது, அவள் சபதம் செய்திருப்பதாகவும், ஆகையால் எங்களுடன் வர மாட்டேனென்றும் சொன்னாள். அப்போது சேனாதிபதி அவளுடைய பேச்சைக் கேட்கக் கூடாதென்றும் பலவந்தமாகக் கட்டித் தூக்கி வந்துவிட வேண்டும் என்றும் கூறினார். அதைக் கேளாமல் போய்விட்டேன். அந்தத் தவறை நினைத்து நினைத்துப் பத்து வருஷமாக வருந்திக் கொண்டிருக்கிறேன்."

இவ்விதம் கூறி விட்டுச் சற்று மாமல்லர் மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு கூறினார்: "மானவன்மரே! வாதாபிக்குப் படையெடுத்துச் செல்லும் நாளை நான் எவ்வளவோ ஆவலுடன் எதிர்பார்த்திருந்தேன். அந்த நாளைத் துரிதப்படுத்துவதற்காக எவ்வளவோ தீவிரமான முயற்சிகள்

## அருள்வாக்கு

ஒருத்தன் தன் வேலை, வீட்டு வேலைகளை மற்றவர்களிடம் விட்டு விட்டுப் பொதுப் பணிக்குப் போகிறான் என்னும் பொழுது, அந்த மற்ற பேருக்கு இவனிடம் ஏற்படுகிற அதிருப்தியில் ஸமூஹத் தொண்டே பிடிக்காமல் போய் விடுகிறது. ''போதும். இவனொருத்தன் ஊர்க்காரியம் என்று உழப்பறித்துக் கொண்டு அகத்துக் காரியத்தை விட்டிருப்பது. நமக்கு இந்த ஸேவை கீவையும் வேண்டவே வேண்டாம்'' என்று அவர்களுக்கு ஒதுங்கிப் போகத் தோன்றிவிடும். அதுவே அவன், அளவறிந்து அகத்துக் காரியத்தையும் கவனித்துக் கொண்டு பொதுக் காரியமும் பண்ணினானென்றால் அப்போது வீட்டின் மற்ற மனுஷ்யர்களும் இவனோடு கூட வெளித் தொண்டுக்கு வந்து தங்களாலானதைச் செய்வார்கள். வீட்டுக் காரியத்தைக் கவனிப்பதால் இவனொருத்தன் செய்யும் சோஷல் ஸர்வீஸ் குறைந்து போகிறதென்றால், இப்போது அதைவிட ஜாஸ்தியாக மற்றவர்களின் ஸர்வீஸ் ஸொஸைட்டிக்குக் கிடைத்து விடும். இவன் அதியாகப் போய் விட்டு மனுஷ்யர்களின் அதிருப்தியை ஸம்பாதித்துக் கொள்ளும் போதோ, தன் நோக்கத்துக்கே பாதகமாக, அவர்களால் ஏற்படக்கூடிய ஸோஷல் சர்வீஸைத் தடுத்து விடுகிறான்!

தொண்டுக்குப் போகிறவர்களுக்கு ஒரு 'ட்ரிக்' சொல்லித் தருகிறேன். அன்போடு, பதவிசாக நடப்பதுதான் 'ட்ரிக்'. வெளி மனுஷ்யர்களிடம் மட்டுமில்லை. அகத்துப் பேரிடமும் இப்படிப் பரிவாக பணிவாக இருந்தானானால் அவர்களே, ''நாம் தான் வீட்டையே கட்டிக் கொண்டு அழுகிறோம். இவனாவது லோகத்துக்குப் பண்ணி, நமக்கும் சேர்த்துப் புண்யம் ஸம்பாதித்துத் தரட்டும்'' என்று நினைத்து அவனிடம் வீட்டு வேலைகளைக் கூடிய மட்டும் கட்டாமல் தாங்களே பண்ணுவார்கள்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

எல்லாம் செய்தேன். ஆனால் கடைசியாகப் புறப்படும் நாள் நெருங்கியிருக்கும்போது பயமாயிருக்கிறது...!"

"என்ன? தங்களுக்கா பயம்?" என்று மானவன்மன் அவநம்பிக்கையும் அதிசயமும் கலந்த குரலில் கூறினான்.

"ஆம்! எனக்குப் பயமாய்த்தானிருக்கிறது. ஆனால், போரையும் போர்க்களத்தையும் நினைத்து நான் பயப்படவில்லை. புலிகேசியைக் கொன்று, வாதாபியைப் பிடித்த பிறகு நடக்கப் போவதை எண்ணித்தான் பயப்படுகிறேன். பகைவரின் சிறையில் பத்து வருஷமாகச் சிவகாமி எனக்காகக் காத்திருக்கிறாள். அந்த நாளில் அவளுடைய குழந்தை உள்ளத்தில் தோன்றிய காதலை அன்று போல் இன்றும் தூய்மையாகப் பாதுகாத்து வந்திருக்கிறாள். ஆனால், என்னுடைய நிலைமை என்ன? கலியாணம் செய்துகொண்டு, இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பனாக இருக்கிறேன். சிவகாமியை எந்த முகத்தோடு நான் பார்ப்பது? அவளிடம் என்ன சொல்லுவது? இதை நினைக்கும்போதுதான் எனக்குப் பயமாயிருக்கிறது. அதைக் காட்டிலும் போர்க்களத்தில் செத்துப் போனாலும் பாதகமில்லை!"

"பல்லவேந்திரா! தாங்கள் போர்க்களத்தில் உயிரை விட்டால், தங்களை நம்பி இங்கு வந்து உட்கார்ந்திருக்கும் என்னுடைய கதி என்ன? இலங்கைச் சிம்மாசனத்தில் என்னை அமர்த்துவதாகத் தாங்கள் எனக்கு அளித்த வாக்குறுதி தான் என்ன ஆவது...?" என்று நாத்தழுதழுக்கக் கேட்டான் மானவன்மன்.

(தொடரும்)

# ஆபத்து மன்னா!



''அரசியல் சீரியல் ஒண்ணு எடுக்கறீங்களா, என்ன தலைப்பு?''

''நீதி எங்கே போகிறது!''

– சாயம் வெ. ராஜாராமன்

''மன்னா! ஆபத்து! நம் ஆராய்ச்சி மணியைக் காணவில்லை.''

''சத்தம் போடாதய்யா... நான் தான் பேரீச்சம் பழத்துக்குப் போட்டேன்.''

– சுதா



''இந்த ஷேர் ஆட்டோ ஸ்டிரைக் கால, 'பப்ளிக்'கை விட போலீஸ் காரங்கதான் ரொம்பவும் பாதிக்கப் பட்டிருக்காங்கன்னு எதை வைச்சு சொல்றீங்க...?''

''அவங்களோட 'மாமூல்' வாழ்க் கையை வைச்சுதான்!''

– நரேந்திரன்





''உங்க மானேஜர் எப்பப் பார்த் தாலும் அரைத் தூக்கத்திலேயே இருக்காரே, ஏன்?''

''வாங்குகிற சம்பளத்துக்குப் பாதியாவது உழைக்காவிட்டால், அவ ரோட மனசாட்சி உறுத்துதாம்!''

- பெ. கலாசாமி

நிறைய சமயங்களில் நட்சத்திரத் தாரகைகளுக்கு வில்லனாக சொந்த அப்பாக்களே, வாய்த்து விடுகிறார்கள் என்பது கவலைக்குரிய விஷயம். லேட்டஸ்ட் ஹாட் ஃபாதர் ஷில்பா ஷெட்டியின் அப்பா சுரேந்தர் ஷெட்டி. ஏதோ சேலை விளம்பரமாம். அதில் மாடலிங் செய்த வகையில் அம்மணிக்கு எண்பது லட்சம் பாக்கியாம். அதைத் தராமல் இழுத்தடித்துக் கொண்டே போன பங்கஜ் அகர்வால் என்பவரை, ஆள் வைத்து மிரட்டி, பணம் பிடுங்கிக் கொண்டதாக ஷெட்டிமீது கெட்டியாய் ஒரு சட்டிப் புகார்.

"சே... சே... அப்படி ஒரு சம்பவம் நடக்கவே இல்லை!" என்று தகப்பனார் சார்பில் மறுப்பு. ஷில்பா?... இதைப் பற்றியெல்லாம் எள்ளளவும் அலட்டிக் கொள்வதாயில்லை. கூலாக ஷூட்டிங்கில் பிஸி. மும்பை மீடியா மட்டும் பரபரத்துக் கொண்டிருக்கிறது, கிசு கிசு கிடைத்த சந்தோஷத்தில். அக்கப்போர் செய்திக்கு அவ்வளவு கஞ்சமா? பஞ்சமா?


• அபிஷேக் பச்சன்


• ஜரிவாலா

# அலட்டாத அம்மணி!

கஞ்சத்தனமான உடை, கொஞ்சிப் பேசும் உதடுகள், ரீமிக்ஸ் ஆல்பம் என்ற பெயரில் பல குப்பைகள், பலவிதமான டீவி. சானல்கள் இன்று அருமையான பழைய பாடல்களைக் குதறிக் கொண்டிருக்கின்றன. முன்பெல்லாம் இப்படித் தப்புத்தாளங்களுடன் ஆடுபவர்கள், "ஐயோ... நான் ஒண்ணுமே தெரியாத பப்பா... இயக்குனர் சொல்படி செய்தேன். அவ்வளவுதான்" என்று பாவப் பாட்டு பாடுவார்கள். ஆனால் இன்று? கலாசாரக் காவலர்களால் சென்ஸார் செய்யப்பட்டிருக்கும் 'காண்டா லகா', 'யஹ் வாதா ரஹா' போன்ற ரீமிக்ஸ் ஆல்பங்களில் ஆடியிருக்கும் ஷீஃபாலி ஜரிவாலா "ஆமாம். தெரியும். வேண்டுமென்றேதான் செய்கிறேன். என் கையிலிருப்பதும் போர்னோ மாகஸீன் என்று தெரியும். தேடி அலையவில்லையே தவிர, என் கையில் கிடைத்தால் படிப்பதுண்டுதான்! ஏன் நீங்கள் படிக்கமாட்டீர்களா? என் நண்பர்கள் இதை எல்லாம் கூலாக எடுத்துக் கொண்டுள்ளார்கள்" என்கிறார்.

"என்னைப் போல் 'கூல்' ஆக இருங்கள். கவலைப்படுவதால் என்ன பயன்?" என்று மார்தட்டும் மற்றொரு மனிதர் தேவ் ஆனந்த். இவர் நோரா ஜோன்ஸை மையமாக வைத்து 'ஸாங்க்ஸ் ஆஃப் லைஃப்' என்ற ஆங்கிலப் படத்தைத் தயாரிக்கப் போவதாகச் செய்தி வந்ததுமே நோரா கொதித்

தெழுந்தார். இவரை வாங்கு வாங்கென்று வாங்கினார். எல்லாவற்றையும் வாங்கிக் கட்டிக் கொண்டு, "நோராவின் ரியாக்ஷன் இயற்கைதானே?" என்கிறார் அமைதியாக. "நானும், அவருடைய அப்பா பண்டிட் ரவி சங்கரும் நெருங்கிய நண்பர்கள். நோராவை நேரில் பார்க்கும்போது விளக்குவேன். இப்போது அவர் கிராமி அவார்டு வாங்கிய ஹிஸ்டீரியாவில் இருக்கிறார்" என்றவர், "படத்தில் தாமே ஸிதார் மேஸ்ட்ரோவாக நடிக்கப் போகிறாராம். நோரா பாத்திரத்துக்கு நிக்கோல் கிட் மேனையோ, ஸல்மா ஹேயக்கையோ பிடிக்கலாம்" என்று தைரியமாகச் சொல்கிறார். மனிதர் படே கில்லாடி. நோநோ... 'கூல்'வாடி!

# கூல் மும்பை மசாலா

இருந்ததனால், கொதிக்கும் கொப்பரையில் விழ வேண்டிய நிர்ப்பந்தமும் சிலருக்கு ஏற்பட்டிருக்கிறது. பாருங்களேன். முலுண்டு குண்டு வெடிப்பு சம்பவத்தில் கைதான முக்கிய நபரான டாக்டர் அன்வர் அலி, கடக்வாசலாவிலுள்ள நேஷனல் டிஃபென்ஸ் அகதமியில் உருது பயிற்றுவிப்பாளராகப் பணிபுரிகிறாராமே? கோட்டை விட்ட போலீசாரும், என்டிஏக்காரர்களும் இவ்வளவு 'கூலா'க இருந்திருக்கலாமோ?

**- ஜெய்ஸ்ரீ ராஜ்**

"கூல் ஆக இருப்பது வேறு. அப்படி இருப்பது போல் நடிப்பது வேறு" என்கிறார் அபிஷேக் பச்சன். அவரை அப்படிப் பேச வைத்திருப்பது ஸிமி கரிவால் - தம் 'ராந்தவூ' ஷோவில். முதன் முதலாக, அமிதாப்பின் பிள்ளையாய் இருப்பதிலிருக்கும் சுமைகள், கரீனாவுடன் உறவு முறிந்ததில் ஏற்பட்ட மன வேதனைகள் எல்லாவற்றையும் மனம் திறந்து சொல்லியிருக்கிறாராம்.

"ரொம்பப் பர்சனலாகப் போகும்போது, தோண்டித் துருவாமல் விட்டுவிடுவேன். ஆனால் அவர் முகமே அவர் மனத்தின் வேதனைகளைப் பிரதிபலித்துவிட்டது" என்கிறார் ஸிமி. கான் ஃபெஸ்டிவலில், 'இண்டியா நைட்' என்றொரு நிகழ்ச்சியைத் தொகுத்தளிக்கப் போகிறார் ஸிமி. இங்கே பிடிக்க முடியாத ஐஸ்வர்யாவை, அங்கே வளைக்கப் போகிறாரோ? கூல்... கூல் லேடி!

'கூல்'லாக



* ஷில்பா ஷெட்டி

# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம் :** 'கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும்'ங்கற மாதிரி, இந்த வாரம் எதிர்பாராத அதிர்ஷ்டம் தேடி வரப் போகுது. புதுசா வேலை தேடறவங்களுக்கு இந்த வாரம் பலன் உண்டு. வேலை விஷயமா சிலர் வெளியூர் / வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. குடும்பத்தில் இதுவரை இருந்து வந்த கருத்து வேறுபாடுகள், பிரச்னைகள் இப்ப மாயமாகும். எதிர்பார்த்த பணம் வந்து சேரும்.



**ரிஷபம் :** 'திருநெல்வேலி அல்வாடா, திருச்சி மலைக் கோட்டைடா'ன்னு இந்த வாரம் ஜாலியா நீங்க பாட்டுப் பாடி ஆடலாம். பின்னே, சந்தோஷ லட்சுமி உங்களைத் தேடி வந்திருக்காளே. எதிர்ப்புகள் குறுக்கீடுகள் விலகும். கொடுக்கல், வாங்கல் கைகொடுக்கும். ரியல் எஸ்டேட், இயந்திர வகை, இரும்பு போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல சுபமங்கள காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு.



**மிதுனம் :** 'கேளுங்க. கேளுங்க. கேட்டுக்கிட்டே இருங்க'ன்னு சூரியன் எஃப்.எம்.ல சொல்ற மாதிரி, எண்ணுங்க எண்ணுங்க, பணத்தை எண்ணிக்கிட்டே இருங்க. பல வழிகள்ல பணம் வரப் போகுதுன்னா சும்மாவா? எதிர்ப்புகள் மறையும். பதவி உயர்வு, இடமாற்றம் ஆகியவை கிடைக்கும். நீங்க எதிர்பார்த்த நல்ல தகவல் இப்ப வந்து சேரும். சினிமா, நாடகம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல சுப காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு.



**கடகம் :** ஸ்பீட் பிரேக்கரை உடைச்சு எறிஞ்சுட்டு வெற்றிகளைக் குவிச்சுட்டிருக்கிற நடிகர் விக்ரம் மாதிரி, இந்த வாரம் வெற்றிமீது வெற்றி வந்து உங்களைச் சேரும். எதிர்பார்க்காத நல்ல திருப்பம் வரப் போகுது. எந்தக் காரியத்தையும் தலைகீழா நின்னாவது முடிச்சுடுவீங்க. கொடுக்கல் வாங்கல் கைகொடுக்கும். சிலர் வீடு, மனை, வாங்க வாய்ப்பிருக்கு. குடும்பத்துல மகிழ்ச்சி நிறைந்திருக்கும்.



**சிம்மம் :** இந்த நூற்றுப்பத்து டிகிரி வெயில்ல, ஜில்லுனு காத்தடிச்சா எவ்வளவு சுகமா இருக்குமோ, அப்படியொரு சுகம் உங்களுக்குக் கிடைக்கப் போகுதே. பணவசதி, தெய்வ பலம், மேலதிகாரி பாராட்டு, தன்னம்பிக்கை, நடக்காத காரியம் கைகூடும்னு நிறைய நல்ல விஷயங்கள். இந்த வாரம் புதிய முயற்சிகள் அனுகூலமாகும். குடும்பத்துல இதுவரை இருந்து வந்த சண்டை சச்சரவு யாவும் இப்ப மாயமாகும். குடும்பத்தோடு ஊட்டி கொடைக்கானல்னு போக வாய்ப்பிருக்கே.



**கன்னி :** எந்தக் காரியத்தையும் இந்த வாரம் தலைகீழா நின்னாவது முடிச்சிடுவீங்க. மனசுல தன்னம்பிக்கையும் துணிச்சலும் நிறைந்திருக்கும். சின்னச் சின்ன பிரச்னைகள், குறுக்கீடுகள் வந்தாலும் உடனுக்குடன் நிவர்த்தி ஆயிடும். புதிய வேலை முயற்சிகள் வெற்றி பெறும். குடும்பத்துல கணவன் மனைவி உறவு சுமுகமா இருக்கும். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வந்து சேரும்.



**துலாம் :** இந்த வாரம் பாராட்டு, புகழ் கூடப் போகுது. வேலை விஷயமா வெளியூர் / வெளிநாடு போக சிலருக்கு வாய்ப்பிருக்கு.




* ரபி பெர்னார்ட்




* பிரமீளா

இயந்திரம், கெமிக்கல்ஸ், எண்ணெய், ரெடிமேட் கார்மென்ட்ஸ் போன்ற துறைகள்ல இருக்கறவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்ப ஸ்தானத்தை குரு பார்க்கறதால கல்யாணம் போன்ற விஷயங்கள் குடும்பத்துல நடக்க வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு இது உற்சாகமான வாரம்.



**விருச்சிகம் :** இந்த வாரம் எதையெடுத்தாலும் உங்களுக்கு வெற்றிதானாமே. ஜாலிதான் போங்க. முக்கியமானவங்க ஆதரவு, பண வரவு, புதியவங்க அறிமுகம் கிடைக்கப்போகுது. சுயமாகத் தொழில் பண்றவங்களுக்கு லாபம் கொட்டும். இதுவரை இழுத்தடிச்சட்டிருந்த பணம், இப்ப வந்து சேரும். குருபலம் ஸ்ட்ராங்கா இருக்கறதால பொன், வெள்ளி ஆடை ஆபரணச் சேர்க்கை நிகழும். இதனால பெண்களுக்கு உற்சாக வெள்ளம்தான் போங்க.

**தனுசு :** குரு குடும்ப ஸ்தானத்தை 'லுக்' விடறதால குடும்பத்துல மங்களமான காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. சிலர் புதிய வீடு வாங்கவோ கட்டவோ சந்தர்ப்பம் கூடி வரும். சொத்து விவகாரத்தில் உங்களுக்குச் சாதகமான திருப்பம் வரும். குடும்பத்தோட உல்லாச டூர் போக வாய்ப்பிருக்கு. இதுவரை இருந்து வந்த பண நெருக்கடி தீரும். கடன் தொல்லை குறையும். அரசியல்வாதிகளுக்கு அதிர்ஷ்டம் காத்திருக்கு.



**மகரம் :** எதிர்பார்த்திருந்த நல்ல செய்தி உங்களைத் தேடி வரப்போகுது. புதிய முயற்சி கைகூடும். தொட்ட காரியமெல்லாம் பட்டுனு துலங்கும். தெய்வபலம், தெய்வீக ஈடுபாடு, அதிகரிக்கும். அலுவலகத்தில் உயரதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். புத்தகம், பத்திரிகை, அச்சகம் ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில மகிழ்ச்சி நிறைந்திருக்கும்.

**கும்பம் :** தள்ளிப் போய்க் கொண்டிருந்த கல்யாண விஷயங்கள் இந்த வாரம் டக்குனு முடியப் போகுது. பிரிந்து போனவங்க இப்ப ஒண்ணா சேர்வாங்க. இதனால மகிழ்ச்சி நிறைந்திருக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. வெளியூர் / வெளிநாட்டுப் பயணம் நன்மை தரும். அலுவலகத்தில் உங்க மனம் மகிழ்விக்கிற மாதிரியான சம்பவங்கள் நடக்கும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கும்.



**மீனம் :** குடும்பத்துல குதூகலம் நிறைந்திருக்கும். குரு பலம் பூரணமா இருக்கறதால பொன், பொருள், ஆடை, ஆபரணம் ஆகியவற்றின் சேர்க்கை நிகழும். கல்யாணம் ஆனவங்களுக்குக் குழந்தை பாக்கியம் கிடைக்கும். குடும்பத்தோடு ஜாலி டூர் போக வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு உற்சாகமான மனநிலை ஏற்படும். புதிய முயற்சிகள் தேடி வரும். வேலை விஷயமா வெளியூர் போக வாய்ப்பிருக்கு. இந்த வெயில்ல வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க.

## அக்னிசர்மா பக்கம்

## மே 28 முதல் ஜூன் 3 வரை

# நீங்கள் கேட்டவை-தராசு

● எஸ். காயத்ரி, திருக்குறுங்குடி.

*? வள்ளுவர் சிலை கட்டமைப்பில் ஒன்றே கால் கோடி ஊழல் நடந்திருப்பதாகச் சொல்கிறார்களே... ஊழலில் பொய்யாமொழியாரையும் சேர்த்து விட்டார்களே?*

! பொய்யாமொழியாரை எங்கே சேர்த்தார்கள்? கருணாநிதியாரை அல்லவா குறி வைத்தார்கள்!

● கே.சம்பத், திருக்கழுக்குன்றம்.

*? பெண்களைப் போற்றி மரியாதை கொடுக்கும் அம்மா தமக்குப் பெண் போலீஸ் கமாண்டோ பிரிவினரைப் பாது காப்புக்கு வைத்துக் கொள்வாரா?*

! "வைத்துக் கொள்வார். ஆனால், கமாண்டோக்கள் என்பதை 'கமாண்டி'கள் என்று மாற்ற வேண்டியிருக்குமே!" என்கிறார் தராசு. அது கிடக்கு, "முதல்வர் என்பதை முதல்வள் என்று பெயர் மாற்றம் செய்ய முடியுமா?" என்று கேட்கிறார் மடிப்பாக்கம் கல்கி வாசகர் கோபால்!

● ப.ராமகிருஷ்ணன், காயக்காடு.

*? தோல்விகளெல்லாம் எனக்கு அவமானமாகத் தெரிவதால் மனசொடிந்து போகின்றதே?*

! எதற்காக, எந்த அளவு முயன்று தோற்றீர்கள் என்பதுதான் மதிப்பை நிர்ணயிப்பது. வெறும் வெற்றி – தோல்வி அல்ல.

● ஜே.டி.ஆனந்தன், மதுரை - 5

*? உண்மையான உழைப்புக்கு இன்றைய சமுதாயத்தில் மதிப்பு இருக்கிறதா...?*

! உழைப்புக்கும் இல்லை; உழைப்பாளிகளுக்கும் மதிப்பு இல்லை. அதனால்தான் தோட்டிகள் புனர்வாழ்வுக்காக மத்திய அரசு ஒதுக்கிய முந்நூறு கோடிக்கும் அதிகமான தொகையை, தமிழக அரசு இன்னும் செலவழிக்காமலே காலங்கடத்திக் கொண்டிருக்கிறது. நரகலை மனிதர்கள் அள்ளும் கொடுமை தொடர்கிறது.

● சமயபுரம் சராசரன், சென்னை - 26.

*? மே. வங்க பஞ்சாயத்துத் தேர்தலில் இ.கம்யூனிஸ்ட் கூட்டணி பெரும் வெற்றி பெற்றுள்ளதே; மமதா கட்சி படுதோல்வி கண்டுள்ளதே?*

! இடது கம்யூனிஸ்ட் கூட்டணி வெற்றி நேர்மையான முறையில் பெறப்பட்டதல்ல என்ற குற்றச்சாட்டு இருக்கிறது. ஏதோ ஒரு சில இடங்களில் மிரட்டல்கள் இருந்திருக்கலாம். மிரட்டல்கள் மட்டுமே இந்த அளவுக்கு மாபெரும் வெற்றியைப் பெற்றுத் தராது. இ.கம்யூனிஸ்டு தலைவர்களின் மகத்தான செல்வாக்குதான் செயல்படுகிறது. ஆச்சர்யம் என்னவெனில் மமதாவின் கட்சி, காங்கிரஸுக்குப் பின்னால் மூன்றாவது இடத்துக்குப் போய்விட்டதுதான்.



• பகிரங்க அவமானம்!



• நியாயமான வருத்தம்...!



• அதிசய தோல்வி...!

● கே.வி. ராமன், புதுடெல்லி.

*? பாபர் மசூதி வழக்கு நீதிமன்றத்தில் இருக்கும்போது, அதன் ஆணைப்படி அகழ்வாராய்ச்சியும் மேற்கொள்ளப்பட்ட நிலையில், லிபரான் கமிஷன் முன்பு, "ராமர் கோயில் இடிக்கப்பட்டுதான் பாபர் மசூதி கட்டப்பட்டது என்று*

மத்திய அரசு தரப்பில் சாட்சியம் சொல்லலாமா?
! நியாயம், நேர்மையை இடித்துத் தள்ளிவிட்டது. அதனிடத்தில் அதர்ம தேவதைக்குக் கோயில் கட்டியாச்சு.

● ஆர்.எஸ்.லக்ஷ்மி, கோவை - 41.
? திட்டக்குழு துணைத் தலைவர் கே.ஸி.பந்த், தம் மனைவி மருமகனுடன் (கோடை வெப்பம் தவிர்ப்பதற்காக) அதிகார பூர்வ பயணமாக லண்டன் சென்றிருப்பதாகச் செய்தி வந்துள்ளதே?
! பட்டியலிலிருந்த மற்ற பெயர்களை விட்டு விட்டீர்களே... பந்த் காட்டிய வழியைப் பின்பற்றுகிறார்கள்!


• அபாய அனுமதி...!


• மெகா குற்றச்சாட்டு!

தால் நமது உள்ளூர் உற்பத்தி பாதிக்கப்பட்டிருக்கிறது; பொற்காலம் ஒன்றும் அத்தனை சுலபமல்ல.... இது பித்தளைக் காலம் தான்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.
? "சீக்கியர்கள் கத்தி வைத்துக் கொள்வது போல் இந்துக்கள் திரிசூலம் வைத்துக் கொள்வதில் தவறில்லை" என்று காஞ்சிப் பெரியவர் கூறுகிறாரே?
! சீக்கியர்கள் கத்தி வைத்துக் கொள்வது புராதன மரபு – மதக் கோட்பாடு. அதற்கான ஏற்கத்தக்க பின்னணி உண்டு. இன்று திரிசூலம் ஏந்துவதை, புதிதாகப் புகுத்துகிறார்கள். இது தேவையற்றது மட்டும் அல்ல; ஆபத்தான பின் விளைவுகளைத் தோற்றுவிக்கக் கூடியது. ஜெயேந்திரர் யோசிப்பது நல்லது. இன்று உறையுள் உறங்கும் கத்திக்கும் உயர்த்திப் பிடிக்கப்படும் திரிசூலத்துக்கும் வித்தியாசம் உண்டு.

# திரிசூலம் வைத்துக்கொள்வது தவறில்லையாமே..!

● டி.ஏ.சி. பிரகாஷ், திருச்செங்கோடு.
? பெட்ரோல் – காஸ் விலை குறைய ஆரம்பித்திருக்கிறது. ரூபாயின் மதிப்பு ஏற ஆரம்பித்திருக்கிறது. இந்தோ – பாக் உறவு மேம்பட ஆரம்பித்திருக்கிறது. பன்னாட்டு வணிகர்கள் சீனாவிலிருந்து இந்தியா நோக்கி வருகிறார்கள். இனி நமக்குப் பொற்காலம்தானே?
! சேமிப்பு / முதலீடுக்கு வட்டி விகிதம் குறைந்துள்ளது; ஜம்மு - காஷ்மீரில் பயங்கரவாதிகள் கொலை செய்வது தொடர்கிறது; பங்கு மார்க்கெட் தூங்கி வழிகிறது; பன்னாட்டு நிறுவனங்கள் நுழைந்திருப்ப

● மலர் கண்ணன், எர்ணாகுளம்.
? நடந்து முடிந்த பட்ஜெட் கூட்டத் தொடரில் பெண்கள் இட ஒதுக்கீடு மசோதா நிறைவேறவில்லையே?
! போனால் போகட்டும் போங்க. இது விஷயத்தில் நான் விவேகானந்தர் கட்சி. 'பெண்களுக்குக் கல்வியைக் கொடுங்கள்;

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
கே.வி. ராமன்,
801, ஏஷியா ஹவுஸ் பில்டிங்,
கஸ்தூரிபா காந்தி மார்க்,
புதுடெல்லி - 1

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:
ஜே.டி.ஆனந்தன்,
2/67 பீ, சரஸ்வதி நகர்,
கைத்தறி நகர்,
மதுரை மாவட்டம் - 625 005.



"என்னங்க, நம்ம தலைவர் தன்னோட பெயரை 'உழுகசிமாடசாமி'ன்னு வைச்சுக் கிட்டிருக்கார்?"

"என்ன பண்றது? அவரு அப்பனுக்கு மூணு பொண்டாட்டியாச்சே!"

— நாமக்கல் பாலு



"அமெரிக்கா கணக்கா மாமியாரை நொறுக்கித் தள்ளிட்டியே'ன்னு என் மனைவியைப் பாராட்டினது தப்பாப் போச்சு...!"

"நான் என்ன, ஈராக்கான்னு உன் அம்மா அழுது புலம்பினாங்களாக்கும்...?"

"அப்படி சொல்லியிருந்தா தேவலையே! 'நீதான் இருக்கியே ஒண்ணுக்கும் உதவாத ஐ.நா'ன்னு என்னை இடிச்சுக் காட்டிட்டா!"

- உ. ராஜாஜி

அவர்களுடைய தகுதி தானாக மேம்பட்டு உயர்வார்கள்...! என்று சொன்னார். கல்வி எப்படி இருக்க வேண்டும் என்றும் கூறினார்: வெறும் எழுத்தறிவு அல்ல; துணிவு, தன்னம்பிக்கை, தியாக உணர்வு, சுயச்சார்பு அனைத்தையும் வளர்க்கும் கல்வி.

● ஆர்.அப்துல் சலாம், திருச்சி – 21.

*? 'சட்டசபையில் எதிர்க்கட்சிகளுக்கு மரியாதை இல்லை' என்று எஸ்.ஆர்.பி. வருத்தம் தெரிவித்துள்ளாரே?*

! சட்டசபைக்கு வெளியே மட்டும் மரியாதை தட்டுக்கிட்டுப் போகிறதா என்ன! 'முதல்வர் காவிரி நீர் கொண்டுவர என்ன முயற்சி செய்ய வேண்டும்' என்று ராமதாஸ் கூற, 'சிங்கத்துக்கு நரி அறிவுரை கூறினால் சிரிப்புத்தான் வருகிறது' என்று பன்னீர் செல்வம் நக்கல் உவமை உதிர்ப்பது மரியாதையாகுமா? பிரச்னையிலிருந்து திசை திருப்புவதுடன் எதிர்க்கட்சியினரைப் பகிரங்கமாக அவமானப்படுத்துகிறது.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி.

*? நம் நாட்டில் கல்வியறிவு புகட்டுவதில் தமிழகம் முதலிடம் பிடித்துள்ளதே?*

! இந்தியாவிலேயே அதிகம் டொனேஷன் கறக்கப்படுவதிலும் தமிழகத்துக்குத்தான் முதலிடம்!

● தாமல், கண்ணன்,

*? எரியும் ரயிலில் 38 பேர் சாவு! ரயில் விபத்துகளைத் தவிர்க்க முடியாதா?*

! ரயில்வே வரலாற்றில், தவிர்த்திருக்கக் கூடிய விபத்துகள்தான் அதிகம். அதிலொன்றுதான் ஃப்ரான்டியர் மெயில் விபத்து. அபாயச் சங்கிலிகள் இயங்கவில்லை என்று பயணிகள் சொல்லியிருக்கிறார்கள். மேலும், விபத்தைத் தவிர்த்திருக்கக் கூடிய டிக்கெட் பரிசோதகர்கள் மற்றும் கண்டக்டர்கள் அந்தப் பெட்டியிலேயே இல்லை; வேறு பெட்டியில் பயணம் செய்தார்கள் என்றும் தெரிய வருகிறது. ஊழியர்களின் பொறுப்புணர்வு; ரயில் பெட்டிகள் – தண்டவாளங்கள், சிக்னல்கள் பராமரிப்பில் அலட்சியம் புகும்போது விபத்துக்கள் விபரீத வடிவமெடுப்பதில் வியப்பில்லை.

● ஜெ. ரஜினி ராம்கி, மயிலாடுதுறை.

*? நமக்கு வயசாவதை எப்படித் தெரிந்து கொள்ளலாம்.*

! 'வயசாச்சா? எனக்கா? யார் சொன்னது?' என்று நாம் மறுக்க ஆரம்பிக்கும்போது புரிந்துவிடுமே!

## ரிமோட்

# டாக்டரய்யா.. புள்ளி தேவையா?

இறுதிச் சுற்றில் ஆஸ்திரேலியாவிடம் தோற்று உலகக் கோப்பையை இந்திய அணி இழந்ததற்கு இன்னமும் வருத்தப்பட்டுக் கொண்டிருப்பவர்கள் இந்தத் தகவலைப் படிக்க வேண்டாம். ஈஎஸ்பிஎன்னில் வெஸ்ட் இண்டீஸ் அணியை ஆஸ்திரேலிய அணி சமீபத்தில் புறம் காண வைத்த பந்தயத்தை ஒளிபரப்பியபோது, ஸ்டீவ் வாக் பற்றிய ஒரு புள்ளி விவரத்தைக் கூறினார் விமர்சகர். இதுவரை 46 டெஸ்ட் பந்தயங்களுக்கு கேப்டனாக இருந்திருக்கிறார் ஸ்டீவ் வாக். அவற்றில் 16 பந்தயங்கள்தான் கடைசி நாள் விளையாடப்பட்டதாம். அதாவது 30 பந்தயங்களில் நான்கு நாட்களுக்குள் ஆஸ்திரேலியாவுக்கு வெற்றி தேடித் தந்திருக்கிறார் மனிதர்!

சன் டீவிக்காரர்களுக்கு ஓர் ஆலோசனை. செய்திகளின்போது 'டாக்டர். ராமதாஸ்' என்று பெயரை வெளியிடுகிறார்கள். ஆங்கிலத்தில் எழுதும்போது டாக்டரைச் சுருக்கி Dr. என்று எழுதுகிறோம். எனவே சுருக்கம் என்பதைக் குறிக்க புள்ளி தேவைப்படுகிறது. தமிழில் டாக்டர் என்று முழுமையாகவே குறிப்பிட்ட பிறகு எதற்காகப் புள்ளி? அரசியல் டாக்டர்களுக்கு (பெரும் புள்ளிகள்!) இது போன்ற விதிவிலக்கு தேவை என்றால் அது அவர்கள் இஷ்டம்.



* ஸ்டீவ் வாக்



* வாஸந்தி

வின் டீ.வி.யில் தினம் ஒரு மலர் பகுதியில் எழுத்தாளர் வாஸந்தி சக எழுத்தாளர்களைப் பேட்டி காண்கிறார். பெரும்பாலான கேள்விகள் அர்த்தமுள்ளவையாக இருப்பது சிறப்பு. காஞ்சனா தாமோதரன் என்ற அமெரிக்கவாழ் எழுத்தாளர், தாம் கல்கியில் எழுதிய தொடர்கதை பற்றிக் குறிப்பிட்டார். பிரிண்டரில் பிரதி எடுத்துதான் தொடக்கத்தில் அனுப்பிக் கொண்டிருந்தாராம். அந்தச் சமயத்தில் செப்டம்பர் 11 கோர சம்பவமும், அதைத் தொடர்ந்து ஆந்த்ராக்ஸ் பயமும் அங்கு எழ, 'நாம் அனுப்பும் பிரதியின் மூலமாக ஒரு வேளை தற்செயலாக ஆந்த்ராக்ஸ் அபாயம் இந்தியாவுக்கும் பரவி விட்டால்...?' என்ற அச்சம் தோன்ற, அப்போதிலிருந்து ஈமெயிலிலேயே அத்தியாயங்களை அனுப்பத் தொடங்கியிருக்கிறார்.

ஸ்டார் வோர்ல்டில் ஒரு விளம்பரம். மழை நீர் சேகரிப்புக்கானது. மழை பெய்ய, அதில் சிறு துளிகளை தன் வாய்க்குள் பிடித்துக் கொள்கிறார் ஒருவர். தன் ஹெல்மெட்டைத் திருப்பி அதில் மழைநீர் வழியுமாறு பார்த்துக் கொள்கிறார் ஒருவர். வீட்டில் உள்ள சகல சின்னப் பாத்திரங்களையும் முற்றத்தில் பரப்பி வைத்து மழைநீரைச் சேமிக்கிறார் மூன்றாமவர். இவற்றையெல்லாம் விடச் சிறந்த வழி உண்டு என்று தொடர்கிறது விளம்பரம். அது ஒருபுறமிருக்க, இப்படி விதவிதமாக சேமிப்பவர்களின் முகத்தில் தெரியும் ஆனந்தம், மழையின் அருமையை மிக அற்புதமாக அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

- ஆதர்ஷ்

* டாக்டர் ராமதாஸ்

2

## மினி தொடர்

# சுவாசிக்கத் தெரிந்தவர்கள்

பாரதிபாலன்

ஊர்வலம் நெருங்கிவிட்டது! தேவமார் தெருவில் கொட்டுச் சத்தம். அடுத்து பிள்ளையார் கோவில் வாசலில் சற்று நிற்கும். புஸ் புஸ்ஸென்று வாண வேடிக்கை! சிறிச் சிறிப் பாய்ந்து ஆகாசத்தில் போய் வெடித்து, பூப் பூவாய் மலர்ந்து இரவைக் கிழித்தது. காத்திருந்து, காத்திருந்து அரைத் தூக்கம் முக்கால் தூக்கத்தில் விழுந்ததெல்லாம் திடுக்கிட்டு எழுந்தன. ஜன்னல் திறக்கிற சப்தமும், கதவை விளக்குகிற சப்தமும் கேட்டது. தெருவில் இரண்டொரு பேச்சுக் குரலும் கேட்டது.

நடுச்சாமக் காற்றும் தவழத் தொடங்கியதும் நன்றாக உறங்கியவர்கள் கூட மலங்க மலங்க விழித்துக் கொண்டு, தெருவில் நின்றார்கள். வந்து விட்டது. முதலில் ஒரு சிறுசுகள் கூட்டம். கூச்சல் போட்டுக் கொண்டு ஓடி வந்தது.

இந்தக் கொட்டுக்காரப் பயலுகளுக்கு எங்கிருந்துதான் இத்தனைக் கொண்டாட்டம் வருமோ! கூலியும் பெருசாக இருக்காது. ஆயிரம் பேச்சுப் பேசி இந்தா அந்தா என்று போக்குக் காட்டி, சத்து இல்லாத காசுதான் கையில் விழும். ஆனாலும் அந்தக் கை ஓயாமல் குதிக்கிறது. 'கும்...கும்...'மென்று எல்லோர் நெஞ்சிலும் அதிர்வு உண்டாக்கி விடுகிறது. ஆட்டக்காரிகளுக்கு உசுரு கொடுப்பதே இந்தக் கொட்டுக்காரர்கள்தான். பெட்ரோமாக்ஸ் விளக்கு வெளிச்சத்தை விட மாவிளக்கு வெளிச்சம்தான். இருபது முப்பது பெண்கள் அலங்காரம் பண்ணிக் கொண்டு தாம்பாளத்தையும், சரிவச் சட்டியையும் தலையில் சுமந்து கொண்டு வந்தார்கள். மாவிளக்கின் ஒளி வெண் மஞ்சளாகத் தணிந்து இருந்தது. காற்றின் இழுப்புக்கு ஏற்ப சுடர் ஆடியது. அந்தக் காட்சியைப் பார்க்கப் பார்க்கப் பரவசம். அதுவும் கொட்டுக்காரன் அடிக்கிற அடி நரம்புக்குள் புகுந்து கொள்கிறது. எறும்பாய் ஊர்ந்து ஊர்ந்து வசந்தா வரிசை வாசலுக்கு வருவதற்குள் நெஞ்சுப் படபடப்புக் கூடியது.

“தூக்கம் கலைஞ்சுதா?”

“தூக்கமா?”

“நாலு மணியா, ஒக்காந்திருக்கேன்.”

“நான் மட்டும்? இந்தா தொடப் போகிறோம். இந்தா தொடப் போகிறோம் என்று ஒரே பரபரப்புதான். பத்துக்கு தலைச் சுமை ஏறியது. இப்ப மணி என்ன? பன்னிரண்டா?... யப்பா...”

“அப்படியே தித்திப்பா இருக்கு!”

“ஒரு விளக்கை எடுத்து, உள்ளங்கையில் நகக்கித் தரட்டுமா?”

“கையில் சுட்டு விடாதா?”

“உடனே ஒன்றைத் தராவிட்டால் என் நெஞ்சுதான் சுடும்.”

“பூஜை முடிய வேண்டாம்?”

“இதோ... இந்தக் கணம் என் பூஜை முடிந்துவிட்டது.”

“நீ மட்டும் அப்படியே நில்லு... மற்றவர்கள் நகரட்டும். நீ மட்டும் என் முன்னால் மாவிளக்கோடு நில்லேன்...”

வாத்தியார் குழந்தையாகி விட்டார். மனசுக்குள் பேசினார். அவனும் அப்படித்தான். அவன் கண் படுகின்ற பாடு இருக்கிறதே! தலைச் சுமையோடு அவள் தத்தளிப்

பது தெரிகிறது. உணர்ச்சிப் பெருக்கில் ஆனந்தத் திளைப்பில் மிதப்பதை இருவரும் உணர்ந்தார்கள். ஊர்வலம் மெல்ல மெல்ல நகர்ந்தது. இனி அவளை, அந்தக் கோலத்தில் எப்படிப் பார்க்க முடியும். அவர் கண்ணை விட்டுக் கடந்து விட்டாள். மஞ்சள் பட்டும், மருதாணிக் கையும், சடை முழுக்கச் சரம் சரமாகச் சுற்றிய மல்லிகையும், கனகாம்பரமும் கண்ணை விட்டு அகலவில்லை!

'நீ கொஞ்ச நாழி இருந்துவிட்டுப் போயேன்?' மனசுதான் கூவுகிறது: ஜாதி நாட்டாமை தோள் துண்டை எடுத்து தலைக்கு மேல் சுழற்றவும், கொட்டுக்காரர்கள் நகர்ந்து விட்டார்கள். வாத்தியாருக்குக் கூடவே நடக்க வேண்டும் போல் பரபரப்பு. அவள் கடந்து விட்டாள்.

வெகு நேரம் வரை ஒரே இடத்தில் உட்கார்ந்து இருந்தது கால் ஆகை பிடித்துக் கொண்டது. எழுந்து காலை ஊன்றினார் வாத்தியார். ணங் ணங் கென்று அதிர்ந்தது. கன்னம் வரை அந்த அதிர்வு எதிரொலித்தது. பொழுது நன்றாக இறங்கிவிட்டது. சாஸ்தாவுராயன் கோவில் பூசாரி கம்பிக் கேட்டை அகலத் திறந்து விட்டார். ஆட்டு



வியாபாரி சுப்பையாதான் பூசாரி. இடுப்பு வேஷ்டிக்கு மேல் ஒரு காவித் துண்டு! நெஞ்சு, உடம்பு, கை என்று வரி வரியாய் திருநீறு. அபிஷேகத்துக்கு வந்த தட்டுகளை வாங்கி அடுக்கிக் கொண்டிருந்தான். மறு பூசை முடிந்ததும் மறுபடியும் ஆட்டு வியா பாரியாகி விடுவான். இந்தப் பன்னிரெண்டு நாளும் அவனை ஊர் சாமி... சாமி என்று தான் உப்பிடும். இதில் அவனுக்கு ஒரு ஆனந்தம். இரண்டு மூன்று சீப்பு பழம் கிடைக்கும். சின்ன தேங்கா மூடி பத்துப் பன்னிரண்டு கிடைக்கும். ஒரு சர்வச் சட்டி நிறைய தேங்காய்த் தண்ணீ! அதை அவன் சிறுசுகளுக்கும் மதிய நேரம் வந்து சேரு கின்ற பெருசுகளுக்கும், சிரட்டையில் ஊற்றிக் கொடுத்து விடுவான்.

"சார்... தேங்கா தண்ணி தரட்டுங்களா?"

"வேண்டாம் சுப்பையா!"

"ஊத்திக் கொடு சாமிண்டா! அத வடி கட்டிக் கொடு!"

"இருக்கட்டும்யா."

"குடிங்க வாத்தியாரே!"

"சொன்னாக் கேளுங்க! வேண்டாம்ங்கு றேன்லெ!"

"இருக்கட்டும். அம்புட்டுக் கெடக் குள்லெ. அம்புட்டையும் கொண்டு போயி என்ன செய்யப் போவுது...

"உள்ளே வாங்க வாத்தியாரே..."

"இருக்கட்டும்!"

பால்பாண்டி வாத்தியார் அந்தப் பிரகாரத்து வாசலிலே நின்று கொண்டார். சாஸ்தாவுராயன் கம்பீரமான வெள்ளை யானை மீது இருந்தார். பட்டுப் பரிவட் டமும், மலர மலர மாலைகளுமாகக் காட்சி தந்தார். பக்கத்திலே கருப்பசாமி. திரு திருவென்று விழி உருளும் கண்கள். கையில் வெட்டருவாள். பிடறி சிலிர்க்கும் குதிரை. குழந்தைகள் கண்டால் அலறி விடும். இந்த இருவருக்கும் நடுவில் கன்னிமார்கள். பட்டுப் பாவாடையும் பளபளக்கும் கண்ணு மாக இருந்தனர். உசிரோடு இரண்டு உருவங்கள் நிற்பது மாதிரித்தான் இருந்தது. எல்லாம் குச்சி செட்டியாரின் கைவாகு! கைவாகா? மனவாகா? எப்படி அறிவது!

"அச்சு அசலா பண்ணியிருக்கார்."

"இலேசுப்பட்ட ஜோலியா வாத்தியாரே! பதினான்கு நாள் விரதம். முழு பௌர்ணமி நாள்லெ மண் எடுத்து ஊருக்கு ஒதுக்குப் புறமா நம்ப பரமன் தோட்டத்துக்கு தெக்க குடிசை இறக்கி, தவமாக கெடந்து பண்ணினது!"

"பப்ளீக் நம்மைக் கிண்டல் செய்றதுக்கு ஒரு அளவே இல்லாமல் போய்க்கிட் டிருக்கு!"

"என்ன ஸார் விஷயம்?"

"'சந்தன வீரப்பன் காந்தி சிலைக்குக் கீழே தம்மடிச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கான் ஸார்'னு எவனோ போனில் சொல்றான்.

- உ. ராஜாஜி

---

"துள்ளத் துடிக்க நிக்குதே.."

"எவன் பண்ணுவான்? சொல்லுங்க."

"முடியாது."

"பின்ன சொல்லுதீங்க.."

"மறுபூசை முடிஞ்சதும் ஆத்துல கொண்டு போயி விட்டுடுவீங்களே..."

"அது எங்க ஐதீகம்."

"ஓஹோ!"

"எங்க எளவட்டங்க, சிமெண்ட் செங்கல்லு வெளியூர்லெ இருந்து ஆளைக் கூட்டியாந்து செஞ்சிவிடலாம். அது பாட் டுக்குக் காலம் காலமாகக் கெடக்குமுங் குறாங்கே. குச்சி செட்டியார் காலம் முடியுறமுட்டும் அவருதேனுட்டேன்."

"அவரும் இதுக்குத்தேன், பொறந் திருக்காப்புலெதானே பண்றார்."

"பின்ன சொல்றீக."

"வாஸ்தவம்தான்."

"எங்க பயலுகளுக்கு இன்னிக்கு காசு பணம் இருக்கலாம். துணியாவாரம், ஆட் டுத்தோல் யாவரம்னு காசு பாத்திருக்கலாம். நாம மனுஷக்கதை தானய்யா பாக்கணும். இருபத்திநாலு மனைச் செட்டியாருக்கும் கொசச் செட்டியாருக்கும் என்ன சம்பந்தம்? ஓங்க புள்ளமாருங்க தெருவிலெ பரமுபுள்ள இருந்தார். அவருக்கா வேண்டிதேன் சாமிய அங்கிட்டுக் கொண்டு போறது. அப்புறம் மூக்கையாத் தேவர்! இந்தப் பந்தல் செலவு மூச்சும் அவருதேன். அங்குட்டு குடும்ப மார் அவுங்க தோட்டத்து வாழைங்கதானே இதெல்லாம். துட்டுக் கொடுத்தா தொட மாட்டேனுட்டாங்களே.."

ஜாதி நாட்டாமை கண் பளபளவென்று திரண்டு விட்டது!

"இப்படிக் கொஞ்சம் வாங்க வாத் தியாரே" என்று நாட்டாமை எழுந்து கொண்டார்.

"ம்"

"சித்த வாங்களேன்."

"நானா?"

"ஒங்களெத்தான். இப்படி வாங்க" என்று



கோவில் சுற்றுச்சுவர் மறைப்புக்குக் கூப்பிட்டார், ஜாதி நாட்டாமை. பீதியோடு நகர்ந்தார்.

"மூக்கன் செட்டி மவ வசந்தி நல்ல பொண்ணு. அவ அப்பன் சரி கெடையாது. ஆத்தா ஆதரவுலெதேன் வளருது. ஒங்களுக்கும் சம்சாரம் தவறிட்டது...

"ம்.."

"உங்க மனசுலெ என்னான்னு நா கண்டேன்! ஊர்லெ பேசுறது உண்மையா இருந்தா, அது தப்பில்லைங்கிறேன்.."

வாத்தியார் தலையைக் குனிந்து கொண்டார். பேசவில்லை.

"கோவில்லெ வெச்சுப் பேசறேன். மனம் போல நடக்கணும்."

"..............."

"ஐயா, எனக்கு ஜாக்கிரதையாப் பேசத் தெரியாது. மனசுலெ பட்டதைச் சொல்லிப்பிட்டேன். நீங்க வாத்தியாரு.."

"திடீர்னு இப்படிக் கேட்டா?"

"நல்ல காரியம் திடீர்னுதேன் நடக்கும் பாங்க."

"அப்படியா?"

"பின்ன நான் சொல்றது தப்பா?"

வாத்தியாருக்கு வெக்கமாக இருந்தது பெருமையாகவும் இருந்தது. இப்படி திடீர்னு கூப்பிட்டு பிரமிக்கப் பண்ணி விடுவார்னு நினைக்கவே இல்லை!

"என் காதுக்கு கண்டதும் கடியதும் வந்து கிட்டே இருந்துச்சு! எல்லாத்தையும் பாக்கு றாப்புலெ உங்களையும் பாக்க முடியுமா? அதனாலெதான் எனக்குச் சொல்றதுக்குக் கொஞ்சம் நேரமாச்சு! அப்புறம் பார்க்கப் பார்க்க என்னென்னமோ எல்லாம் தோணுச்சு! இதுதான் சரின்னு, வேற எதையும் இனிமே பார்க்கக் கூடாது. ஒரு பக்கம் நின்னு பாத்தா ஒரு மாதிரித் தெரியும், மறுபக்கம் நின்னுப் பார்த்தா இன்னொரு மாதிரித் தெரியும்.."

"என்னது?" என்றார் வாத்தியார்.

"இந்த மாதிரிப் பிரியம் வெச்சிருக்கிற ஆத்மாக்களைக் கணக்குப் பார்த்தா சேத்துக்க முடியும், பிரிக்க முடியுங்கறேன்? நான் இருபத்து நாலு மனை, உன் மனை எத்தனைன்னு கேட்டுக்கிட்டுச் செய்யுற சம்பந்தமில்லை இது... அப்படி ஆயிப் போச்சு... நல்லதுதானே.."

ஜாதி நாட்டாமையைப் பார்த்து, வாத்தியாருக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது! இந்த மனிதரின் நுண்ணறிவை எப்படிப் புரிந்து கொள்வது? எத்தனை மரியாதை! கௌரவ புத்தி! எத்தனை நம்பிக்கை! தூசு துப்பட்டைகளை எல்லாம் கூட்டித் துடைத்தாற் போல் ஒரு மனசு.

"முக்கியம்னு தோணுச்சு! அதான் கூப்பிட்டுப் பேசுனேன்."

"உங்க வூட்டுலெ எப்படியோ?"

"இனித்தேன் பேச்சே எடுக்கணும்.."

"என்ன வாத்தியாரே, நீங்கள்லெ பேச்ச எடுக்கணும்."

"ம்"

"பொறவென்ன?"

"அந்தப் புள்ளதான் விழுந்து குதறி விருப்பா போல" என்றார் வாத்தியார்.

"யாரு, பழனியம்மாளா?"

"அது இல்லெ தெய்வானை!"

"அதுவா! அவ படிப்பு அம்புட்டுத்தேன். சிறுசுகதானே! பின்னிப் பின்னத்தான் இருக்குங்க.."

"நீங்கதான் ஒத்தாசை பண்ணணும். வாய்க்கு வந்தபடி பேச்சு கிளம்பிடுச்சு.."

"எதையும் காதுலெ அண்ட வுடாதீங்க. இல்லாட்டி இப்படி, எதுனா பேச்சு கிளம்பிக்கிட்டே இருக்கும்!"

"ம்" என்று இழுத்து, யோசனை செய்ய ஆரம்பித்தார்.

"நீங்க படிச்சவரு. நல்லது கெட்டது, அறிஞ்சவரு. அதுக வாய் வம்புக்கெல்லாம் இசைஞ்சு கொடுத்தா? அதுக்கெல்லாம் இடம் கொடுக்கப்படாது...

"அவுக ஐயாகிட்டயும்.."

"மூக்கன் செட்டி நல்லவருதேன்."

"நீங்கதேன்.."

"ஒண்ணும் கவலைப்படாதீங்க. நான் தான் அவரு. அவருதேன் நான்னு வெச்சுக் குங்களேன்.."

அரைமணி நேரப் பேச்சு, அந்த உணர்ச்சிப் பூரிப்பில் நின்றுவிட்டது!

(தொடரும்)

பிரபல ரப்கோ க்ரூப் நிறுவனம், 'ரப்கோ மேட்ரஸ்' என்ற பெயரில் உலகத் தரம் வாய்ந்த ரப்பர் மெத்தைகளை அறிமுகப்படுத்தியுள்ளது. 'வெர்டிகல் ஃபைபர் ஓரியண்டேஷன் டெக்னாலஜி' மூலம் தரமான ரப்பர் இழைகளால், எக்ஸ்ட்ரா குஷன் அமைப்போடு தயாரிக்கப்பட்டுள்ளதால், நல்ல சௌகரியமான தூக்கத்தைத் தருகின்றன.

**ரப்கோ குரூப்ஸ், கே.வி.ஆர். டவர், 4வது தளம், சவுத் பஜார், கண்ணூர் - 670 002. கேரளா.**



சென்னையின் பிரபல கண்ணாடியகமான விஜயா ஆப்டிக்கல்ஸில், கோடை காலத்துக்கு என புதிய குளிர் கண்ணாடி ரகங்கள் மற்றும் ஃபிரேம்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பாக, துக்ரால் ஆப்டிகல்ஸ் நிறுவனத்தின் 'ரூ லெட்' பிராண்ட தயாரிப்புகள் நவீனமாகவும் நேர்த்தியுடன் தயாரிக்கப்பட்டு விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ளன. இவை, மெட்டல், கன் மெட்டல், காப்பர், கோல்ட் போன்ற நிறங்களில் இலகுவான எடையுடன் பலவித மாடல்களில் இளைய தலைமுறைக்கு ஏற்ற வண்ணம் உள்ளன.






மதுரா கார்மென்டஸ் நிறுவனம், பிரபலமான 'லூயி பிலிப்' என்ற வணிக முத்திரைப் பெயரில் தரமான 'ரிவியெரா கலெக்ஷன்' என்ற புதுவகை ஆடைகளை அறிமுகப் படுத்தியுள்ளது. உயர்ரக காட்டன் துணியால் அழகாக உருவாக்கப் பட்டு சமகால நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் இவை, ரூ.1099 முதல் ரூ.1499 வரை கிடைக்கும்.





பல்வேறு ரக நவீன கலர் பூச்சுகளை வழங்குவதில் முன்னணியில் உள்ள 'ஸ்டர்லிங் டெக்கார்ஸ்', பிரான்ஸ் நாட்டின் 'செலின் இன்டர்நேஷனல்' நிறுவனத்தின் கூட்டுடன், உலகத் தரம் வாய்ந்த கண்ணாடி ஓவிய வண்ணங்களை அறிமுகப்படுத்தியுள்ளது. இந்தியாவிலேயே முதன்முறையாக, அல்ட்ரா ஊதா கதிர்கள் பாதிக்காத நிறம் மாறாத, மெட்டாலிக் ரகங்களை, பத்து வண்ணங்களில் வழங்குகிறது.

**செலீன் டெகோ ஆர்ட் ப்ராடெக்ட்ஸ், தோஷி கார்டன்ஸ், 'டி' பிளாக், ஆற்காடு ரோடு, வடபழனி, சென்னை - 26**



# இவர் பெயரில் ஒரு கிரகம்!

அக்ஷித் சிங்காலுக்கு வயது பதினேழு தான் ஆகிறது. இந்த வயசில், சொந்தமாக ஒரு கம்ப்யூட்டர் அல்லது டூ வீலர் இருப்பதே அதிகபட்சம்! இந்த இளைஞரின் பெயரில் ஒரு குட்டி கிரகமே இருக்கிறது! நம்புங்கள். விண்வெளியில் மிதக்கும் அந்த கிரகத்தின் பெயர் (12599) சிங்கால்.

ஜெய்ப்பூர், செயின்ட் ஆன்ஸ் பள்ளியில் படிக்கும் இந்தச் சுட்டிப் பையனின் கம்ப்யூட்டர் அறிவைப் போற்றும் வகையில் இந்த கௌரவம் அளிக்கப்பட்டுள்ளது.



* அப்பா சுதிர் சிங்கால், அம்மா சுனிதா, தங்கை யாமினியுடன் பிளானட் பாய்

பதின்மூன்று வயதில் ஜாவா மற்றும் 'ஸி' மொழிகள் அத்துபடி. பதினான்கு வயதில் இந்தியாவின் மைக்ரோ சாஃப்ட் சாடிலைட் ஸிஸ்டம்ஸ் இன்ஜினியர். மறு வருஷமே, உலகின் மிக இளைய சர்டிஃபைட் லோடஸ் ஃப்ரொபஷனலாகப் புகழ் பெற்றுவிட்டார் அக்ஷித்.

கம்ப்யூட்டரைக் கலக்கிக் குடித்த இவரது ஞானத்தைப் பார்த்து வியந்த அமெரிக்க ஐ.டி. திருக்கடவுள், எஜைலன்ட் டெக்னாலஜி தனது தத்துப் பிள்ளையாகவே ஆக்கிக் கொண்டுவிட்டது. விளைவு? இன்றைக்கு சொந்தமாக வடிவமைத்த முப்பது வெப் சைட்களின் மூலம், மாதம் நாற்பதாயிரம் சுளையாகச் சம்பாதிக்கிறாராம்.

"எனக்கு எட்டு வயசா இருக்கும்போது, அப்பா என்னை கம்ப்யூட்டர் சென்டருக்குக் கூட்டிட்டுப் போனார். முதலில் 3டி கம்ப்யூட்டர் கேம்ஸ்தான் ஆடினேன். அப்புறம் தான் கம்ப்யூட்டர் என்ற மகாக் கடலுக்குள் இத்தனை சுவாரசியங்களா என்று வியந்து போய், அடுக்கடுக்காகத் தேடத் துவங்கினேன். அந்தத் தேடல் இலேசில் முடியும் என்று தோணவில்லை.'' என்கிறார் புன்னகையுடன்.

பாஸ்டன் நகரில் உள்ள 'Massachusetts Institute of Technology' என்ற விஞ்ஞான மையம், புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் விண்வெளி கிரகங்களுக்கு, உலகின் மிகச் சிறந்த ஐம்பது விஞ்ஞானிகளைத் தேர்வு செய்து பெயர் சூட்டி கௌரவிக்கின்றது.

அந்த வகையில், செவ்வாய்க்கும் வியாழனுக்கும் நடுவே இருக்கும் பெயர் தெரியாத ஒரு குட்டி கிரகத்துக்கு, சிங்கால் பெயரை வைத்திருக்கிறார்கள்.

"லிம்கா புத்தகத்தில் 'யங்கஸ்ட் கம்ப்யூட்டர் டாலன்ட்' என்று பெயர் வந்தபோதே பூரித்துப் போனேன். ஒரு கிரகத்துக்கே என் பெயரைச் சூட்டியிருப்பது மிகப் பெரிய கௌரவம். இந்தப் பெருமை எல்லாமே என் பெற்றோருக்குத்தான்'' என்கிறார் அக்ஷித்.

அக்ஷித்தின் கம்ப்யூட்டர் ஆர்வமெல்லாம் மரபணு சம்பந்தப்பட்டதோ என்று நினைத்தால், அதெல்லாம் இல்லை. அக்ஷித்தின் அப்பா சமையல் கேஸ் ஏஜென்ஸி வைத்திருக்கிறார்.

- அனு

நன்றி : ஸ்பேன்

பார்த்துக் கொள்ளாமலேயே காதல் வயப்படும் இனிய விவகாரம், இந்திய சினிமாவை விடுகிற மாதிரியில்லை. இந்தப் படத்தில், காதலுக்குக் காரணம் கடிதம்!

சிபிக்கும் (ஜெய் ஆகாஷ்), அவரின் பக்கத்து வீட்டுப் பெண் மமதிக்கும் (நேகா) தினசரி ஒரு முறையாவது முட்டிக் கொண்டால்தான் தூக்கமே வரும். இந்த விஷயம், இருவரின் பெற்றோர்களுக்கும் பல் துலக்குவது போல பழகிப்போன ஒன்று. எதிர்பாராமல் மமதியின் குடும்பம் ஊட்டிக்குக் குடிபெயர அங்கேதான் திருப்பம்!



# இனிது இனிது காதல் இனிது

காதலன் கைவிட்டுவிட்டதாகத் தற்கொலை செய்து கொண்ட தீபிகா பெயரில் மமதி கடிதம் எழுத, இது தெரியாமல் சாலை விபத்தில் மாண்டுபோன தீபிகாவின் காதலன் அஜய்க்காக சென்னையிலிருந்து சிபி பதில் எழுத, கடித உறவு தொடர்கிறது.

இறுதியில் அஜய், தீபிகா இருவருக்காகவும் கடிதங்களைப் பறிமாறிக் கொண்டது நாம்தானா என சிபியும், மமதியும் மூச்சடைத்து நிற்கிறார்கள். ஆனால் அத்தோடு படம் முடிந்துவிடவில்லை. இன்னுமொரு நாற்பத்தைந்து நிமிஷம் இருக்கிறது என்று நம்மை டென்ஷன் பண்ணுகிறார் இயக்குனர்.

கடிதங்களின் சக்தி பற்றி அழுத்தமாகச் சொல்ல இரண்டே இரண்டு காட்சிகளில், நாஸரைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். ஓ.கே. ஆனால் அவர் கார்கில் பார்டருக்கு எழுதுகிற கடிதங்களில் ஒன்றையாவது உணர்ச்சி பொங்க வாசித்துக் காட்டச் சொல்லியிருக்கலாம்.

சிபியாக வரும் ஜெய் ஆகாஷ், சண்டைக் காட்சிகளில் காட்டும் வேகத்தை நடிப்பிலும் காட்ட முயற்சி செய்வது நல்லது. நண்பன் சாலை விபத்தில் அடிபட்டுக் கிடக்கும் போது, கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே வரும் அவரின் முகத்தில் கொஞ்சம் கூட அதிர்ச்சியில்லாதது நமக்கு அதிர்ச்சி அளிக்கிறது. இந்தக் காட்சியைப் படம் பிடிக்கும்போது இயக்குனர் என்ன பண்ணிக் கொண்டிருந்தாரோ?

ஃப்ளாஷ்பேக்கில் அஜய்யாக வந்து போகும் அம்சவர்த்தன் அலட்டல் இல்லாமல் இயல்பாய் நடிக்கிறார். இருந்தும் ஏன் சோபிக்காமல் போனார் என்பது சோகம். 'மௌனம் பேசியதே' படத்தின் மூலம் ஏற்கெனவே நச்சென்று பதிவாகியிருக்கும் நேகா, தனிக் கதாநாயகியாக நிறைவு தருகிறார்.

காமெடி என்ற பெயரில் வடிவேலு, கருணாஸ் கூட்டணி படுத்துகிறது.

ராமோஜி பிலிம் சிட்டியின் பிரம்மாண்டத்தைப் பதிவு செய்து வந்திருக்கும் பாலசுப்ரமணியத்தின் ஒளிப்பதிவைப் பாராட்டலாம்.

தெலுங்குப் பட உலகிலிருந்து தமிழுக்கு வந்திருக்கும் தேவிஸ்ரீபிரசாத் ஏமாற்றமளிக்காத இசை அறிமுகம்.

தலைப்பே கவிதை மாதிரியிருக்கிறதே, படமும் அப்படித் தானோ என்ற நம் நம்பிக்கையைத் திரைக்கதை தகர்த்தாலும், காட்சிகள் காப்பாற்றி வருகின்றன.

- விஷுவல்தாசன்

ஆவரெஜ்



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

Charitable Trust (Reg)

**# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)**
**Arumbakkam, Chennai - 600 106 Tel. Off: 2475 5700, 2475 1356.**
**E-mail:svhome@vsnl.net**

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
89, (புஎண் 42) காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம்-612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ : (0435)
Off : 425948
Fax : 423777
Patasala : 422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 460 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 120 மாணவர்களுக்கு 12 வேத, சாஸ்திர அத்யாபகர்கள், புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். *புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.*

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>திட்ட விபரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை தொகை (One Time) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 5000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஸமாராதனைக்கு<br>[Please choose one specific (the above said ) day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs.15,000 |
| ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakh |

Cross செய்யப்பட்ட D.D.-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.



# லைட் ஹவுஸ் காதல்!

"கைவிடப்பட்ட, சாய்ந்த ஒரு லைட் ஹவுஸ் வேண்டும். அதுவும் அந்தமானில் வேண்டும்" என்று டைரக்டர் சொல்லிவிட, அதை நிர்மாணிக்கும் பணியை ஏற்றுக் கொண்டார் ஆர்ட் டைரக்டர் சாபு சிரில்.

அந்தமானில், போர்ட் பிளேயரிலிருந்து அரை மணி நேரப் படகுப் பயணத்தில் போய்ச் சேரும் ஓர் அழகான குட்டித் தீவைத் தேர்ந்தெடுத்து, நாற்பத்து ஐந்து அடி உயரத்தில் 'புதுசாகவே' ஒரு பாழடைந்த கலங்கரை விளக்கத்தை நிர்மாணித்துக் கொடுத்துவிட்டார். பத்து தச்சு வேலைக்காரர்கள், மூன்று மோல்டர்கள், இரண்டு பெயிண்டர்கள் உட்பட முப்பது பேர், எட்டு நாட்கள் இரவு பகலாய் உழைத்து லைட் ஹவுஸை உருவாக்கிவிட்டார்கள்.

சிவாஜி ஃபிலிம்ஸ் தயாரிக்கும் 'இயற்கை' படம் வெளியாகும் படம் வெளியாகும்போது பார்த்து ரசிக்கலாம்.

"லைட் ஹவுஸ் செட்டைப் போட்டு முடித்தவுடன் அதற்குக் கிடைத்த ரியாக்ஷன்கள் சுவாரசியமானவை" என்று விவரிக்கிறார் சாபு சிரிலின் உதவியாளரான செல்வா.

"ஒரு கப்பலிலிருந்து, துறைமுக நிர்வாகத்துக்கு, பழைய லைட் ஹவுஸ் ரொம்பவும் சாய்ந்து, விழுந்து விடும்போல இருக்கிறது. உடனடியாகக் கவனியுங்கள்' என்று செய்தி வந்தது. பல டூரிஸ்ட்கள், பிரிட்டிஷ்காரர்கள் காலத்தில் கட்டப்பட்ட லைட் ஹவுஸ் இப்போது பாழடைந்து போய்க் கிடப்பதாக நினைத்து, 'இதைப் பற்றி டூரிஸ்ட் ஆபிசில் ஒன்றுமே சொல்லாமல் விட்டு விட்டார்களே!' என்று குறைப்பட்டார்கள்."

ஷூட்டிங்குக்கு வந்தவர்களே கிட்டே வந்தபின் தான் 'செட்' என்று தெரிந்து கொண்டு வியந்தார்களாம்.

"அந்தமான் பகுதியில் கடலில் சீற்றம் கொஞ்சம் அதிகமாக இருந்ததால், செட் போட சிரமப்பட வேண்டியிருந்தது. கடற்கரை என்பதால், ஆழமாய் அஸ்திவாரம் போட முடியாது. தகர ஷீட்களையே கிழிக்கும் அளவுக்குத் தண்ணீர் வேகம் இருந்தது. ஒரு சின்ன புயல் வரக் கூடும் என்று தகவல் வந்தபோது 'போச்சுடா' என்று கவலைப் பட்டோம். நல்ல காலம்! அப்படி எதும் நிகழவில்லை. பன்னிரெண்டு நாட்கள் ஷூட்டிங் நடந்து முடிந்தது. மனசில்லாமல், கட்டிய லைட் ஹவுஸை உடைத்துத் தரைமட்டமாக்கிவிட்டுப் புறப்பட்டோம். கலங்கரை விளக்கத்தின்மீது காதலனுக்காகக் காத்திருந்த அந்தப் பெண்ணின் காதலைப் போலவே, அந்த லைட் ஹவுஸ்மீது எங்களுக்கு ஏற்பட்ட காதல் இன்னும் தீரவில்லை" என்றார் செல்வா.

கதாநாயகியின் பெயர் என்ன, பூங்குழலியா?

சந்திப்பு : **மௌலி**

# இன்னுயிரே!

ஆரா

பிரதான மூச்சுக்கு
முன்னும் பின்னும்
உன்
வாசனைக் காற்று!

நீ
தாவணி தேசத்து
தலைவியானாலும்
சுடிதார் நாட்டின்
இளவரசி ஆனாலும்...
காற்றென்னும்
தொண்டனாய் மட்டும்
நான்!

விரலும் நகமும்
பிரியும் இடத்தில்
இமையும் இமையும்
ஒட்டும் நுனியில்
நீ!

பூப்பறிக்கும்போது
காம்பைக் கிள்ளிய
புள்ளிகளில்...
உனக்கும் கொஞ்சம்
இடம் வைத்தே
உட்கார்ந்திருக்கிறது
என் காதல்!

அசைக்க முடியாத
நம்பிக்கையோடு
அலைகிறேன்...
என்
நம்பிக்கை
ஜடமாய்ப் போகாமல்
இருக்க
ஜென்ம சாபல்யம்
கொண்டு
வேகமாய் வா!




# வெகுண்டு எழுந்த வெடிகுண்டு!












இனிஷியல் ஜோக் : நாமக்கல் பாலு
மெகா சீரியல் ஜோக் : ஏ.பிரியா
எழுத்தாளர் ஜோக் : டி.எஸ்.டி. ராயன்
நடிகை ஜோக் : எம்.ஆர்.சி. கிருஷ்ணரத்னம்
திருட்டு விஸிடி ஜோக் : யமுனா ரெங்கநாதன்

• வறண்டு கிடக்கும் கொளவாய் ஏரி



# புதிய கொளவாய் கனவு!

• ஏரியில் கலக்கும் செங்கைக் கழிவு நீர்

அமிர்தம் குளித்தது ஒரே ஒரு முறைதான். அதுவும் இதே போன்றதொரு கொளுத்தும் கோடையில், குளித்துத் தொலைத்திருக்கிறார். செங்கல்பட்டு சந்தையில் காய்கறிகள் வாங்கிக் கொண்டு, அந்த ஏரிக்கரை வழியே நடந்துதான், அமிர்தம் தமது கிராமமான அம்மணப்பாக்கத்திற்குப் போவது வழக்கம். சிறுமியாக இருந்தபோது அந்த ஏரியில் ஆசைதீரக் குளித்தவர் என்றாலும், மணமான பிறகு அதற்கெல்லாம் நேரமில்லாமல் விடுவிடுவென்று கிராமத்திற்கு நடந்து விடுவார். கடந்த ஆண்டு ஒரு மதிய வேளையில் கிராமத்திற்குத் திரும்பியபோது, தெரியாத்தனமாய்க் குளித்து விட்டுக் கரையேறிய பின் பெரிய விபரீதம். உடல் முழுக்க நமைச்சல்! வீடு வந்து சேர்வதற்குள் உடல் முழுவதும் தடித்துப் போய், முகம் வீங்கிவிட, அலறி அடித்து டாக்டரிடம் போன பிறகுதான் அமிர்தத்திற்கு தோல் ஒவ்வாமை நோய் என்று தெரிய வருகிறது. அமிர்தம் மாதிரி அந்த ஏரியில் குளித்து, தோல் ஒவ்வொமையால் பாதிக்கப்பட்ட நூற்றுக்கணக்கானவர்கள் செங்கல்பட்டிலும், சுற்று வட்டார கிராமங்களிலும் இருக்கிறார்கள். இது கலவரச் செய்தி 1.

கலவரச் செய்தி 2 : செங்கல்பட்டு மாசுக்களின் சேமிப்புக்கிடங்காய் மாறிப் போய் விட்ட அந்த ஏரியிலிருந்துதான், சென்னைக்குக் குடிநீர் வரப்போகிறது!

“வீராணத்திலிருந்து வரப்போவது தண்ணீர் அல்ல, விவசாயிகளின் கண்ணீர்” என்று எதிர்க்கட்சிகள் கடுமையாய் விமர்சிக்க, “சென்னைக்குக் குடிநீர் கொண்டு வருவதைக் கொச்சைப்படுத்தினால் பொறுத்துக் கொள்ள முடியாது” என முதல்வர் கர்ஜிக்க, நாளுக்குநாள் புதிய வீராணம் திட்டத்துக்கு எல்லாத் தரப்பி லிருந்தும் எதிர்ப்பு வலுத்துக் கொண்டிருக்கிறது.

சென்னை நகரின் குடிநீர்த் தேவை ஆண்டுக்குப் பன்னிரண்டு டி.எம்.ஸி. என்ற நிலையில், வீராணத்திலிருந்து வரப்போகிற ஒரு டி.எம்.ஸி. தண்ணீர், யானைப் பசிக்கு சோளப் பொரி போன்றது என்ற உண்மையை அரசே புரிந்து கொண்டு விட்டதாலோ என்னவோ, இப்போது புதிய வீராணத்துடன், செங்கல்பட்டு கொளவாய் ஏரியையும் திட்டத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறது. ஆனால், ''கொளவாய் ஏரியிலிருந்து கால் டி.எம்.ஸி. தண்ணீரைக் கூட எடுக்க முடியாது. காரணம் அந்த ஏரியில் தண்ணீரைவிட, சேறுதான் அதிகம்.

''புதிய வீராணத்திற்குச் செலவிடப் போகிற எழுநூற்று ஐம்பது கோடி எப்படி கிணற்றில் போட்ட கல்லாய் மாறப் போகிறதோ, அதேபோல்தான் கொளவாய் ஏரிக்குச் செலவு செய்யப் போகிற



இருபத்தைந்து கோடியும்'' என்று தடாலடியாகச் சொல்கிறார் புதிய வீராணம் திட்டத்தைத் தொடக்கத்திலேயே எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் பொது நல வழக்குத் தொடுத்த, முன்னாள் பொதுப்பணித்துறை தலைமைப் பொறியாளர் சி.எஸ்.குப்புராஜ்.

• விவசாயி மருதப்பன்

"கொளவாய் ஏரி தமிழகத்தில் பதினோராவது இடத்தை வகிக்கிறது. இதன் கொள்ளளவு அரை டி.எம்.சிக்கும் குறைவானது. இதை தண்ணீர் ஏரி என்று சொல்வதைவிட, சேற்று ஏரி என்பதுதான் சரி" என்கிறார் செங்கல்பட்டு தொகுதி சட்டமன்ற உறுப்பினர் ஆறுமுகம். "ஏரியின் ஆழம் பத்தடி என்றாலும் தண்ணீர் ஐந்தடிக்கும் குறைவாகத்தான் உள்ளது. சேறுதான் அதிகம். இந்தத் தண்ணீரில் செங்கல்பட்டு மற்றும் சுற்று வட்டாரக் குடியிருப்புப் பகுதிகளின் கழிவுநீர் நேரடியாகக் கலக்கிறது. குடிக்கவோ, துவைக்கவோ முடியாத நிலை ஏற்பட்டு இருபத்தைந்து ஆண்டுகளாகின்றன. சுற்றுப் புறங்களில் உள்ள ஐம்பத்தைந்து கிராமங்களில் இந்த ஏரி நீரைக் கொண்டு இருபதாயிரம் ஏக்கரில் விவசாயம் செய்யப்பட்டது. இன்று இது இரண்டாயிரம் ஏக்கராகக் குறைந்துவிட்டது. அதற்குக் காரணம் விவசாயத்திற்குக் கூட தகுதியற்ற நீராகப் போய் விட்டது தான். இந்த ஏரியில் மீன் பிடித்து ஜீவனம் நடத்துவதன் மூலம் ஆயிரம் உள்ளூர் மீனவர்கள் பயன்பெறுகிறார்கள் என்பதைத் தவிர, இந்த ஏரியால் பயன் இல்லாமல் இருக்கிறது'' என்று சொல்லும் இவர் "செப்டெம்பர் முதல் ஜனவரி வரையிலான ஐந்து மாதங்களுக்கு, கோடிக் கணக்கில் இந்த ஏரியில் உற்பத்தியாகும் வெள்ளை அந்துப் பூச்சிகள், கூட்டம் கூட்டமாய்க் கிளம்பி, நகருக்கு வந்து எங்களின் சகஜ வாழ்க்கையையே பாதித்து விடுகிறது" என்கிறார். தைரியமாக மின் விளக்கைப் போட முடியாது. செங்கல்பட்டைக் கடக்கும் பேருந்து மற்றும் ரயில்களின் கதவுகளை அடைத்துக் கொள்வார்கள். இதை ஒழிக்காமல் இதிலிருந்து குடிநீர் எடுப்பது சாத்தியமல்ல... இதற்கு ஒரே வழி ஏரிக்குள் பாய்ந்து கொண்டிருக்கும் கழிவுநீரைத் திருப்பி விடுவது. அது மட்டும் போதாது. ஏரியை முதலில் முற்றிலுமாகத் தூர் வார வேண்டும். அதன் பிறகு அடுத்த ஆண்டிலிருந்து சென்னைக்குத் தண்ணீர் எடுக்கலாம்'' என்கிறார்.

தற்போது கொளவாய் ஏரி நீரைப் பயன்படுத்தி, இளந்தோப்பு கிராமத்தில் – விவசாயம் செய்து வரும் சிறு விவசாயி மருதப்பன், ஏரித் தண்ணீரால் விளைச்சல் பாதிக்கப்பட்டதில், தமது ஐந்து ஏக்கரில் நான்கு ஏக்கரை தரிசாகவே போட்டு வைத்திருப்பதாகச் சொல்கிறார்.



• சி.எஸ். குப்புராஜ்



• ஆறுமுகம் எம்.எல்.ஏ.

• அமிர்தம்



கொளவாய் ஏரியைத் தூய்மைப் படுத்தாமல் அதிலுள்ள நீரை மட்டும் தூய்மைப்படுத்த நினைப்பது கேலிக் கூத்தாகிவிடும் என்ற நிலையில், வீராணத்துக்கும் கொளவாய் ஏரிக்கும் இடையில் உள்ள பெருமாள் ஏரி, வெலிங்டன் ஏரி ஆகிய இரண்டு மிகப் பெரிய ஏரிகளை இந்தத் திட்டத்தோடு இணைக்க முடியுமா? என்றால், "ஆராய்ந்து பார்க்க வேண்டும்"என்கிறார் குப்புராஜ்.

"பெருமாள் ஏரி 0.644 டி.எம்.ஸி.யும், வெலிங்டன் நீர்த் தேக்கம் 2 டி.எம்.சியும் கொள்ளளவு கொண்டவை. ஆனால் இரண்டுக்குமே பாசனப்பகுதிகள் அதிகம். ஆனால் சென்னையிலிருந்து நூறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள காவேரிப்பாக்கம் ஏரி, தமிழகத்தில் மூன்றாவது பெரிய ஏரி. 1.48 டி.எம்.ஸி கொள்ளளவு கொண்ட இதன் மூலம் வெறும் ஆறாயிரம் ஏக்கர்தான் விவசாயம் நடக்கிறது. இதில் இருக்கும் எஞ்சிய நீரை, துணிந்து பயன்படுத்தத் திட்டமிடலாம்" என்கிறார்.

கொரட்டூர், அம்பத்தூர் ஏரிகளின் தண்ணீரையும் பயன்படுத்தலாம் என்ற முடிவுக்கு அரசு வந்து விட்ட பிறகு, தென் சென்னை புறநகரில் பாசனப் பகுதிகள் எல்லாம் வீட்டு மனைகள் ஆகிவிட, சேலையூர் ஏரி, சிட்லபாக்கம் ஏரி, பீர்க்கன் கரணை ஏரி, பெருங்களத்தூர் ஏரி, செம்பாக்கம் ஏரி, ராஜ கீழ்ப்பாக்கம் ஏரி, கவுரிவாக்கம் ஏரி, இரும்புலியூர் ஏரி உள்ளிட்ட இருபத்தேழு ஏரிகளின் நீர் வீணாவதைப் பயன்படுத்த முடியுமா என்றால், "இவை எல்லாம் மிகச் சிறிய ஏரிகள். இந்த ஏரிகள் தூர்ந்து போய் விடாமல் காப்பாற்றினாலே, அந்தந்தப் பகுதிகளின் நிலத்தடி நீரைக் காப்பாற்ற முடியும்" என்கிறார்.

"சென்னையின் மக்கள் தொகையில் பெரும் பகுதியினர் பொது உபயோகத்துக்கு ஆழ் குழாய்க் கிணறு மூலம் நிலத்தடி நீரை உறிஞ்சி எடுப்பதால், கடல் நீர் ஊடுருவல் அதிகரித்துவிட்டது. இதனால் நல்ல தன்மையோடு இருந்த நிலத்தடி நீர், புறநகர்ப் பகுதியில் கூட உவர்ப்பாக மாறிக் கொண்டே வருகிறது. இதைத் தடுத்து நிறுத்த மழைநீர் சேகரிப்பு மட்டும் போதாது, சென்னை மக்களுக்கான ஒட்டுமொத்தத் தண்ணீரின் தேவையை நிறைவு செய்தால், நிலத்தடி நீரை உறிஞ்சுவது குறைந்து விடும்" என்றும் சொல்கிறார்.

புதிய வீராணத்திற்கு மாற்றாக பள்ளிப் பாளையம் குடிநீர்த் திட்டத்தை முன் மொழிகிறார் குப்புராஜ். "அதற்கு இதை விடக் குறைந்த செலவுதான் ஆகும். அந்த திட்டத்தை அரசு அலட்சியம் செய்து விட்டது" என்கிறார்.

'ஈரோடு அருகேயுள்ள பள்ளிப்பாளையத்தில் காவிரியானது மேடான பகுதியில், உயர் நீர் அழுத்தத்தோடு பாய்ந்து செல்கிறது. இங்கிருந்து ஐந்நூற்றுப் பதினேழு கிலோ மீட்டர் திறந்த வெளிக் கால்வாய் வெட்டி, சென்னையின், குடிநீர் ஏரிகளோடு இணைக்க முடியும். இந்த வழியில், மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கி இயல்பாக வெள்ளம் பாய்ந்து வரும். (கிராவிட்டி ஃப்ளோ), புவியியல் அமைப்பு இருப்பதால் தண்ணீரை பம்ப் செய்ய வேண்டிய அவசியமில்லை. தவிர காவிரியிலிருந்து நேரடியாக பத்து டி.எம்.ஸி. தண்ணீரை எடுத்துக் கொள்வதால், காவிரி டெல்டா பாசனப் பகுதிக்கு எந்தப் பாதிப்பும் இருக்காது' என்பதுதான் குப்புராஜ் பரிந்துரைக்கும் பள்ளிப்பாளையம் திட்டம்.

"ஆனால், இதுபோன்ற சாத்தியக் கூறுகள் உள்ள திட்டங்களைப் பற்றி முதல்வரிடம் எடுத்துச் சொல்ல அதிகாரிகள் தயங்குகிறார்கள். உலக வங்கி, தனியார் ஆய்வு அமைப்புகளின் தவறான பரிந்துரைகள் காரணமாக, முதல்வர் புதிய வீராணம் என்ற மாயையில் சிக்கிக் கொண்டிருக்கிறார். இப்போது கொளவாய் ஏரியும் கூட ஒரு குட்டி மாயை" என்கிறார் செங்கல்பட்டு தொகுதியின் சட்டமன்ற உறுப்பினர் ஆறுமுகம்.

— **ஜெய்**

படங்கள்: **ராஜன்**

# சித்தர்கள் போற்றும் திரு அண்ணாமலையில் மாதா மாதம் பௌர்ணமி நாளில் அன்னதானம் செய்ய அழைக்கிறோம் !

பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளையில் 6 ஆண்டுகளாகத் தொடர்ந்து அன்னதான சேவை !

• இமயமலைக்கு ஈடான தெய்வத்திருமலையான **தீபத்திரு அண்ணாமலை** பஞ்சபூத சிவ க்ஷேத்ரங்களில் ஒன்றாக விளங்கும் அருள்மலை. ஒளி ஒன்றே கண்கண்ட கடவுளின் வடிவம் என்பதை உணர்த்தும் ஆதித் திருத்தலமாக விளங்குவது திருஅண்ணாமலையே. சிவரூபமாக விளங்கும் திருஅண்ணாமலையின் 14 கி.மீ.சுற்றளவுடைய **கிரிவலப்பாதையை** வலம் வந்தால் ஈரேழு14 லோகங்களையும் சுற்றிய பலன் கிடைக்கும். சித்தர்கள் நிறைந்திருக்கும் சிறப்பு வாய்ந்த திருஅண்ணாமலையில் கிரிவலம் வரும் இறைஅடியார்களுக்கும், பக்தர்களுக்கும், அங்குள்ள ஆதரவற்ற முதியோர்கள், உடல் ஊனமுற்றோர்கள், கண் பார்வையற்றோர்கள் ஆகிய அனைவருக்கும் பௌர்ணமி நாளில் அன்னதானம் சிறப்பான முறையில் செய்யப்படுகிறது. இந்த சீர் மிகு அன்னதான இறைபணியில் பங்குகொண்டு தாங்களும் தங்கள் சந்ததியினரும், **ஸ்ரீ உண்ணாமலை சமேத அண்ணாமலையாரின்** தெய்வீக அருளைப் பெற உங்களை அன்புடன் அழைக்கிறோம்.

• பிறந்தநாள் • திருமண நாள் • வாழ்க்கையில் உயர்வு • தொழிலில் முன்னேற்றம் பெற • நிரந்தர வேலை பெற • கல்யாண பாக்கியம் பெற • நல்ல வரன் அமைய • புத்திர-பிள்ளை பாக்கியம் பெற • கணவன் - மனைவி இடையே ஒற்றுமை நிலவ • கஷ்டங்களும், கடன்களும் எதிர்ப்பு இடையூறுகளும் நீங்க • புதிய முயற்சிகளில் முன்னேற்றமும் வெற்றியும் உண்டாக • புதிதாக தொழில் தொடங்க • புதிதாக வீடு, மனை பெற • வாகன யோகம் பெற • நல்ல சிந்தனை பெற • சிந்தனை வளம் பெருக • உடல் ஆரோக்கியம் பெற • நீண்ட ஆயுள் பெற • தெய்வ சக்தியுடன் திகழ • குடும்ப ஒற்றுமை பெற • உலக ஒற்றுமை பெற • சமுதாய ஒற்றுமை பெற • தேச ஒற்றுமை பெற • எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்...

தங்களின் வேண்டுதலுக்கேற்ப பௌர்ணமி தினத்தில் அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமலையம்மன் படத்தையும் தங்களுக்கு நாங்கள் அனுப்பி வைக்கிறோம்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஐந்து வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

✱ ரூ.5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று திரு அண்ணாமலையில் அன்னதானம் செய்து ஐந்து ஆண்டுகளுக்கு ஆன்மீகம் மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் மங்கலம் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு ரூ. 5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள **ஸ்ரீமத் பகவத்கீதை** புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

• நன்கொடையை Aanmeeka Annadhana Charitable Trust, Chennai - 4 என்ற பெயரில் Cheque / D. D/ M. O. மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பிவைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம் தரும் இறைபணி சேவைகளாக "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" ஆற்றிவர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.



ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


# ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net




ஸ்ரீ உண்ணாமலையம்மன்

"உடல் நலம், மன வளம், பணபலம் அதுவே பௌர்ணமி கிரிவலம்"

# 8

தாமரை மணாளன்

# சில்லுவக் கருப்பட்டி

செண்பகத்துக்குச் சந்தோஷம். மனது முழுவதும் வியாபித்துக் கிடக்கிற பூரிப்பு. அத்தை மகன் கண்ணனுக்கு கடை வைத்துக் கொடுக்க, பலவேசமுத்து சம்மதித்ததில் அவளுக்குள் ஒரு காரியம் சாதித்துவிட்ட கெத்து. கண்ணனுக்காகக் காத்திருக்க முடியாது என்று சொல்லிவிட்டாலும் மனத்துள் ஓரமாய் ஒளிந்திருக்கிற அவன் மீதான காதல் இப்போது வெளி வந்தது.

சிறு வயதில் 'ஒன் புருஷன்தாண்டி' என்று சொந்தங்கள் சேர்த்து வைத்துப் பேசிய பேச்சுகள், இப்போது அவளை வெட்கமடையச் செய்தன.

பனங்காட்டில் நொங்கு வண்டி ஓட்டிக் கொண்டு, "ஒரு பைதா நீ; ஒரு பைதா நான்" என்று செல்லமாய்ச் சிணுங்கியபடி கண்ணன் வண்டியோட்டியது நினைவுக்கு வந்தது.

இப்போது இப்படி நினைத்துப் பார்த்தாள். வாழ்க்கைக்கு இரண்டு சக்கரம் வேண்டும். ஒரு சக்கரம் கணவன், இன்னொரு சக்கரம் மனைவி. இருவரும் சேர்ந்து இழுத்தால்தான் வண்டி ஓடும்.

அப்பொழுதே அர்த்தத்தோடு சொன்னானா?

கண்ணன் முதலில் நிற்க, அவனது டிராயரின் பின் பக்கத்தைப் பிடித்துக் கொண்டு செண்பகம். அவளுக்குப் பின்னால் இன்னும் சில சிறுமிகள். 'டர் டர்' என்று கண்ணன் கார் ஓட்டிப் போக, பின்னாடியே அவளும் ஓடுவாள்.

"வண்டி எங்க போவுது?"

"செண்பவம் வீட்டுக்கு."

"ஏல பொம்பளை புள்ள வீட்டுக்கா வண்டியை ஓட்டிட்டுப் போவ? உன் வீட்டுக்குன்னு சொல்லு!"

"ம்ஹூம்... போ...பாட்டி... என் வண்டி செம்பவம் வீட்டுக்குத்தான் போவும்."

"பொண்டாட்டி வீட்டை விட்டுக் கொடுக்கானா பாரு."

"அப்பன்னா செண்பவம் எனக்குப் பொண்டாட்டியா?"

"உனக்கில்லாம யாருக்கு கண்ணு? மாமன் மவளை தராட்டா தூக்கிட்டு வாரதுக்கும் உனக்கு உரிமையிருக்கு."

பாட்டி சொன்னதும் தெருப்பிள்ளைகள் செண்பகத்தையும், கண்ணனையும் சுற்றிச் சுற்றி வந்து, "ஏ... கண்ணடிச்சாம் கல்யாணம், கை புடிச்சாம் கல்யாணம்' என்று பாட்டுப் பாடுவார்கள்.

செண்பகம் அந்தப் புள்ளைகளை "போங்க" என்று தள்ளிவிட்டு வீட்டுக்குள் ஓடியதை நினைத்துச் சிரித்தான்.

"என்ன செண்பவம் தன்னால சிரிக்க?"

அடுப்பெரிக்க பனை ஓலைகளை வெட்டிக் கொண்டிருந்த செண்பகம், குரல் வந்த திசைநோக்கி நிமிர்ந்து பார்த்தாள். ஒரு நிமிடம் வெலவெலத்துப் போனாள். எதிரில் தண்டபாணி நின்று கொண்டிருந்தான் பல்லை இளித்துக் கொண்டு. அவன் கையில் ஒரு பாலிதீன் பை. கண்களில் காமப் பார்வைத் தெறிக்க, அவன் உடலைக் கோணி நின்றதைப் பார்க்க அவளுக்கு அருவருப்பாக இருந்தது. இப்போது ஏன் வந்தான்?

கண்களில் அனலைக் கக்கி, 'என்ன?' என்று முகத்

தால் கேட்டான்.

"உங்கம்மா... இல்லையா?"

"வெளைக்குப் போயிருக்காவ?"

"சரி சரி. நான் உன்னைய பாக்கத்தான் வந்தேன்."

"என்னையவா?"

"ஆமா" என்றவன் பாலிதின் பையி லிருந்த பேப்பர் கவர் ஒன்றை எடுத்துப் பிரித்தான். ஆகாய நீலக் கலரில் வெண் பூக்கள் பரவிய சேலை. வழுவழு என்று மின்னியது.

"இந்தா செம்பவம், உனக்கு அழகா இருக்குமேன்னு இந்தச் சேலையை வாங்கி யாந்தேன்."

அவளுக்கு உடல் முழுதும் உஷ்ணம் பரவிக் கொதித்தது. கைக்கெட்டும் தூரத்தில் கிடக்கிற விளக்குமாறால் நாலு சாத்து சாத்த லாம் போலிருந்தது. 'இவன் யார் எனக்குச் சேலை எடுத்துதர?'

"எனக்குச் சேலை இல்லைன்னு உங்க கிட்ட யார் சொன்னா?"

"யாரும் சொல்லித்தான் நான் எடுத் துட்டு வரணுமா செண்பவம்?"

"சரிதான், என்னைக்காவது உங்கம்மா வுக்கு சேலை வாங்கிக் கொடுத்திருக் கீங்களா?"

"அம்மாவுக்கா? அவளுக்கு ஏகப்பட்ட சேலை பீரோவுல அடுக்கியிருக்கு. நான் ஏன் எடுத்துக் கொடுக்கணும்?"

"ஆயிரத்தெட்டு சேலை இருந்தாலும் பிள்ளை கையால வாங்கிக் கொடுக்கற சேலையத்தான் பெத்தவ பெருமையா நினைப்பா. அதனால இந்தச் சேலையை அவங்ககிட்ட கொடுத்தா ரொம்ப சந்தோ ஷப்படுவாங்க."



"என்ன செண்பவம் இப்படிப் பேசுத?"

"சொல்லுத விதமா சொல்லிட்டேன். இதுக்குமேலயும் அனாவசியமா நீங்க இங்கன நிக்காண்டாம். மரியாதி கெட்டுப் போவும்."

"என்ன, பேச்சு ஒரு மாதிரி போவுது செண்பவம்?"

"முதல்ல இங்கயிருந்து நவுருங்க."

"நீ என்னய அவமானப்படுத்துத செண்பவம்."

"இது இங்க வாரதுக்கு முன்னாலே தெரிஞ்சிருக்கணும். எந்த வாசல் திறந் திருக்கு உள்ள நுழையலாம்னு அலையாதிங்க. நீங்க பணக்காரராயிருக்கலாம். நாங்க மானம் மருவாதியோட வாழுத குடும்பம்."

"எங்களை மானம் மருவாதி கெட்ட குடும்பம்னு சொல்லுதியா?"

"நான் அப்படிச் சொல்லலை. அனாவசியமா இங்க பேச்சு வேண்டாம். உங்கப்பா வரட்டும், அவர்ட்ட பேசிக்கிடுதேன்."

அப்பா என்றதும் திக்கென்றது அவனுக்கு. அப்பாவா? அவர் ஏதாவது கணக்குப் போட்டு வைத்திருப்பார். நான் இப்படி வந்தது தெரிந்தால் காரியத்தைக் கெடுத்து விட்டதாகத் திட்டித் தீர்ப்பாரே. சனியன் பிடிச்சவர். எதையும் சூட்டோடு சூட்டாக செய்யாதவர். வந்தவுடனேயே செண்பகத்தைப் பேசி வளைத்துப் போட்டிருந்தால் இப்படி நான் அவமானப்பட வேண்டாமே!

"வேண்டாம் செண்பவம். இது நமக்கு மட்டும் தெரியட்டும். அப்பாவுக்குத் தெரிய வேண்டாம். ஆனா ஒண்ணு, நான் உன்னைய உசுருக்குசிரா மனசுல வச்சிருக்கேன். இதுமட்டும் நெசம்" என்றான்.

"அதுக்குத் தகுதியிருக்கு. உங்க தகுதி வேற. எங்க தகுதி வேற. முதல்ல இடத்தைக் காலி பண்ணுங்க."

கோபம் தலைக்கேற அவளையே முறைத்துப் பார்த்துவிட்டு வெளியேறினான்.

கொஞ்ச தூரத்தில் எதிரில் சொகுசு அக்கா வந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் சேலையை மறைக்க முயற்சித்தான் தண்டபாணி. கையில் வைத்துக் கொண்டு எங்கே மறைக்க? வந்ததும் வராததுமாக அதைத்தான் பார்த்தாள் அவள்.

"எங்க போய்ட்டு வர?"

"செம்பவத்தைப் பார்த்துட்டு வாரன்."

"அவளை ஏம் பார்க்கப்போன? அவா ஒரு சிலுப்பட்டையாச்சே."

"எப்படியாவது அவளை ஐஸ்வச்சு, மடக்கிலாம்னு பாத்தேன். சனியப் புடிச்சவ மசிய மாட்டேங்கா."

"அடப்பாவி என்ன பண்ணுன?"

"ஒண்ணும் பண்ணலை. வீட்டுக்குள்ள வான்னு கூட கூப்புடலை. இதுவே வேற எடமா இருந்தா..."

"போதும் போதும்... ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டுங்கறது சரியாத்தான் இருக்கு. அதான் அவளை ஒரு வழிக்குக் கொண்டு வர திட்டம் போட்டிருக்கே, அதுக்குள்ள காரியத்தைக் கெடுத்துட்டியே..."

"திட்டமா?"

(தொடரும்)

## கூடு பாய்ந்த நகைச்சுவை!

விஞ்ஞானக் கதையை சுவாரஸ்யமான நடையில் எழுத, சுஜாதாவுக்குப் பின் வந்த இளைய எழுத்தாளர் தான்தான் என்பதை 'தனநந்தர் புதையலில்' நிரூபித்திருக்கிறார் வஸந்த் செந்தில்.

சென்னை-23, துரை. இலட்சுமிபதி.

வரலாற்றுக் கதாபாத்திரங்களை இக்கால மனிதர்களுடன் கூடுபாய வைத்து அசத்தியதோடு, நகைச்சுவையையும் ஊடே பாய்த்திருந்த விதம் அருமை!

சென்னை - 61, என். சுஜாதா.

அடுத்து வருவது என்னவென்று ஊகிக்க முடிந்தாலும், உற்சாக நடையினால், தொடரை ஜாலியாக ரசிக்க வைத்த வசந்த் செந்திலுக்குப் பாராட்டு!

சென்னை -82, ஜே. சுபத்ரா.

### படிகள் மூன்று

உயர்ந்த வாழ்வுக்கு மூன்று படிகள் உள்ளன. சுய நலமின்றிக் கடமையைச் செய்தல், தளராத நேர்மை, அளவற்ற மன்னிக்கும் தன்மை.

- ஜேம்ஸ் ஆலன்

தகவல் : பா. குணா

### நிபந்தனைகள் நான்கு!

காப்பிக்கு இலக்கணம் என்ன தெரியுமா? பிரான்ஸின் அரசியல்வாதியான டாலிராண்ட் இவ்வாறு குறிப்பிடுகிறார் : ஒரு கப் நல்ல காப்பி சாத்தான் போல் கறுப்பாகவும், நரகம் போல் சூடாகவும், தேவதை போல் தூய்மையாகவும், காதல் போல் சுவையாகவும் இருக்க வேண்டும்.

- நெ. இராமன்



# கறுப்பு கதாநாயகர்கள்!

### கறுப்பே அழகு

கறுப்பு என்பது ஒதுக்கித்தள்ள வேண்டிய நிறமல்ல. உடலின் நிறம் கறுப்பாக இருந்தால், அவர்களின் முன்னோர்கள் உழைப்பாளிகள் என்று அர்த்தம். அதற்காக அவர்கள் பெருமைப்பட வேண்டும். கறுப்புத் தோலை வெள்ளை நிறமாக்க எடுக்கும் முயற்சிகள் வீண். வெள்ளைத் தோலே அழகு என்ற எண்ணம், நாம் ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டுக் கிடந்ததால் வந்தது. இந்தியப் பெருங் காப்பிய நாயகர்கள் இருவரின் நிறமுமே கறுப்புதான். வெள்ளை சலவைக் கற்களை விட கறுப்பு சலவைக் கற்கள் மதிப்பு மிகுந்தவை.

- சுகி. சிவம் சொற்பொழிவிலிருந்து

கே. ரங்கநாதன்

### 'தொர் கொர்' காரியாலயம்

திருவனந்தபுரம் அருகிலுள்ள வாமனபுரத்தில் இரிகேஷன் புராஜக்ட் ஆபீஸ் உள்ளது. இந்த ஆபீசில் பதினான்கு இஞ்சினியர்கள் உட்பட நூற்று முப்பத்தேழு பேர் வேலை பார்த்து வருகிறார்கள். மொத்தமாக மாதம் ஒன்பது லட்சம் ரூபாய் சம்பளம் வாங்குகிறார்கள். அத்தனை பேருக்கும் கடந்த இருபது வருடங்களாகவே ஒரு வேலையும் கிடையாது. இந்தக் காரியாலயம் 1983ல் செயல்படத் தொடங்கியது. கடந்த இருபது வருடங்களாக இந்த நீர்ப்பாசன திட்டத்திற்காக சாத்தியக்கூறு அறிக்கை தயாரிப்பது மட்டுமே இவர்கள் வேலை. தவிர, இங்குள்ள ஊழியர்கள் தங்க இருபத்தைந்து குடியிருப்புகள் கட்டி முடித்திருக்கிறார்கள். மற்றபடி கொட்டாவி தான்." இப்படி வேலை செய்யா வேலை செய்து வருகிறீர்களே, இது நியாயமா?" என ஓர் ஊழியரிடம் கேட்டபோது, "நாங்களா வேலை பார்க்க மாட்டோம் என்கிறோம்? அரசு வேலை தரட்டுமே" என சுலபமாக முடித்துக் கொண்டார்.

- எஸ்.எஸ். மணி





## ஆர். கண்ணன்

'உலகத்தில் தபால்காரர் மட்டும் இல்லையென்றால் வாழ்க்கையேடல் அடித்துவிடும்' என்று ஒரு டேனிஷ் பழமொழி உண்டு. பிரமாதமான 'ரெஸ்யூமே' தயார் செய்து அனுப்பிவிட்டு, 'ஆப்டிட்யூட் டெஸ்ட்'டிலும் தேறிவிட்டால், அடுத்த கட்டம் இண்டர்வ்யூதான். தபால்காரர் இண்டர்வ்யூவுக்கான கடிதத்தைக் கொண்டு வந்து தரும்போது கிடைக்கும் மகிழ்ச்சிக்கு ஈடாக எதையுமே சொல்ல முடியாது, இல்லையா?

இண்டர்வ்யூ என்பது மிக முக்கியமான கட்டம் என்பதால் அதற்கு முன்கூட்டியே தயார் செய்வது நல்லது. முன்னேற்பாடு, இண்டர்வ்யூவின்போது நடந்து கொள்ள வேண்டிய முறை, இண்டர்வ்யூவுக்குப் பிறகு என்ன செய்ய வேண்டும் என்று மூன்று படிகள் இருக்கின்றன.

இண்டர்வ்யூவுக்கு முன்னால், நீங்கள் சிறிது 'ஆராய்ச்சி'யில் ஈடுபட வேண்டியிருக்கும். அதை முடித்து விட்டால் அனாவசியக் கவலை உறுத்தாது. உங்களை வேலைக்கு அழைத்திருக்கும் நிறுவனத்தைப் பற்றிய செய்திகளை நீங்கள் திரட்ட வேண்டியிருக்கும்.

- எத்தனை ஆண்டுகளாக பிஸினஸ் செய்கிறார்கள்.
- எந்த மாதிரியான பிஸினஸ்? உற்பத்தி செய்யும் பொருட்கள் என்னென்ன?
- அந்த நிறுவனத்திற்குப் போட்டியாக இருப்பவர்

# நாலு நிமிடத் தீர்ப்பு!

படம்: சுசிட்டல் சண்முகம்

• இண்டர்வ்யூ சக்ஸஸாம்!

ஏறு நூறு
14

கள் யார், யார்?

* நிறுவனத்தின் முக்கியப் பொறுப்பில் இருக்கும் அதிகாரிகள் பெயர்.
* நீங்கள் சேர வேண்டிய பணி எத்தகையது?
* உங்கள் மேலதிகாரி யார்? கீழே அல்லது உடன் உழைக்கப் போகிறவர்கள் யார்? என்ற விவரங்கள்.

இவற்றைச் சேகரிக்கத்தான் 'ஆராய்ச்சி' தேவைப்படுகிறது. சரி, எப்படிச் சேகரிப்பது?

இன்டர்நெட்டில் நிறுவனத்தில் பெயர் இருந்தால், 'க்ளிக்' செய்து தகவலைத் திரட்டலாம். கம்பெனி பற்றிய துண்டுப் பிரசுரங்கள், வருடாந்தர அறிக்கைகள் மூலம் அறியலாம். அங்கு பணி புரிகிற ஊழியர்கள் வாயிலாக விவரங்கள் பெறலாம்.

**தோற்றம்:**

உங்களைப் பற்றிய நல்ல அழுத்தமான அபிப்பிராயம் உருவாக, உங்களுக்கு ஒரே ஒரு வாய்ப்புத்தான் இருக்கிறது என்பதை உணருங்கள். 'முதல் சந்திப்பில் நான்கு நிமிடங்களுக்குள்ளாகவே ஒருவரைப் பற்றிய அபிப்ராயம் உருவாகி விடுகிறது' என்று ஓர் ஆய்வின் முடிவு சொல்லுகிறது. இந்த நாலு நிமிடத் தீர்ப்புதான், பிறகு தொடரும் நிமிடங்களில் நடக்கப் போவதைத் தீர்மானிக்கும். (இதை ஆங்கிலத்தில் 'ஹேலோ எஃபக்ட்' என்பார்கள்.) எனவே நேர்காணலின் முதல் நான்கு நிமிடங்களில் தாக்கத்தை உண்டு பண்ண முயல வேண்டும்.

உங்களைப் பேட்டிக்கு உள்ளே அழைத்ததும், ஒரு புன்னகையோடு நுழையுங்கள். அழுத்தமாகத் தன்னம்பிக்கையுடன் கை குலுக்குங்கள். உங்களுக்கு நாற்காலி சுட்டிக் காட்டப்படும் வரை சற்றே காத்திருங்கள். விறைப்பாக அல்லாமல், ஆனால் அதே சமயத்தில் தளர்ந்து விடாமல் நில்லுங்கள். கால் மேல் கால் இட்டு அமராதீர்கள். வசதியாக அமர்ந்து கொண்டு, உங்களை அறிமுகம் செய்து கொள்ளுங்கள்.

**நேர்காணலின்போது:**

கேள்விகளைக் கவனமாகக் கேளுங்கள். தன்னம்பிக்கையோடு பதில் சொல்லுங்கள். பதிலைப் பட்டென்று சொல்லு முன்னால், அந்தக் கேள்வியின் நோக்கம் என்னவாக இருக்கும் என்று சில நொடிகள் நினைத்துப் பாருங்கள். அலட்சியமான பதில்களைச் சொல்லாதீர்கள். பதில் சரியாகத் தெரியவில்லை என்றால், அதைச் சொல்லிவிடுங்கள். மழுப்பலான பதில்கள் வேண்டாம்!

இப்போதெல்லாம் 'பாடி லேங்குவேஜ்' வெகுவாக அடிபடுகிறது. கேள்வி கேட்பவரின் கண்களைத் தைரியமாக நேரடியாகப் பார்ப்பது உங்கள் தன்னம்பிக்கையை உணர்த்தும். நிமிர்ந்து உட்கார்ந்து பதில் கூறுங்கள். உங்கள் கருத்தை வெளிப்படுத்தும் போது, கைகளைத் தேவையான அளவு உபயோகியுங்கள். (டி.வியில் காம்பியர்கள் செய்வது போலெல்லாம் குஸ்தி போடுவது மாதிரி வேண்டாம்!)

நீங்களும் உங்கள் கேள்விகளைத் தயாராக வைத்திருங்கள்.

'நீங்கள் ஏதாவது கேட்க விரும்புகிறீர்களா?' என்று கேட்டால் கேட்கத் தயாராக இருத்தல் நல்லது. நீங்கள் வேலைக்குத் தேர்வு செய்யப்பட்டால், உங்கள் சூப்பர்வைசர் யார், உங்கள் பணி இடம் எதுவாக இருக்கும், உங்கள் வேலைத் தரத்தை ரெகுலராகக் கணித்து வருவார்களா, அடுத்த பதவி உயர்வு நிலை என்னவாக இருக்கும்... இது போன்ற கேள்விகளாக இருக்கலாம்.

**இன்டர்வ்யூ முடிந்ததும்:**

'அப்பாடா, முடிந்ததுடாப்பா பேட்டி!' என்று தப்பித்தோம் பிழைத்தோம் என வெளியே கிளம்பி விடாதீர்கள். பேட்டி முடிந்ததும், உங்களைப் பேட்டி கண்டவர் யார், அவர் பதவி என்ன, நிறுவன விலாசம்

**வண்ண ஓவியங்களைக் கொண்டு சுவர்களை அலங்கரிப்பது மத்தியதர வர்க்கத்தைப் பொருத்தவரை கனவாகவே இருக்கிறது. காரணம் கையைக் கடிக்கும் விலை.**

**இன்னொரு பக்கம், ஓவிய கேலரிகளின் பாராமுகம். புகழ்பெற்ற ஓவியர்களின் ஓவியங்களை மட்டுமே விற்பனை செய்து, ஏகமாய் கமிஷன் பெற்றுக் கொழிக்கிறார்கள். புதிய இளம் ஓவியர்களின் படைப்புகளைத் திரும்பிக் கூட பார்ப்பதில்லை.**

**இந்த இரண்டையும் ஒரு சேரத் தீர்த்து வைக்க முன் வந்திருக்கிறார் புவனேஸ்வரி. ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியில் நுண்கலைப் பட்டம் பெற்றவர். தஞ்சை ஓவியங்களை**

# இளமைக்கு மட்டுமே அனுமதி!



வரைவதில் நிபுணர். இவர், நண்பர்களுடன் சேர்ந்து, ஓவிய கேலரியை உருவாக்கியுள்ளார். இங்கே 'பெருசு'களுக்கு இடமில்லை. ஆம். முப்பது வயதுக்குட்பட்ட பிரபலம் இல்லாத நூற்றைம்பது இளம் ஓவியர்களின் படைப்புகளை, ஒன்று திரட்டி சென்னை தி.நகரில் உள்ள 'ஸ்டார் சிடி' என்ற ஓட்டலின் ஒரு பகுதியில் ஆர்ட் கேலரி ஆரம்பித்திருக்கிறார். ஓவியங்களின் விலை வெறும் நூறு ரூபாயில் ஆரம்பிக்கிறது.

புவனேஸ்வரியின் அப்பா பிரபல சினிமா தயாரிப்பாளர் ஏவி.எம்.குமரன்.

— கௌதம் ராம்

படம் : சரவணன்

எல்லாம் சரியாகத் தெரிந்து வைத்துக் கொள்ளுங்கள். 'அடுத்து என்ன?' என்று விடைபெறுமுன் கேட்கலாம். தவறில்லை. இரண்டாவது நேர்காணல் உண்டா? அப்படி இருந்தால், அதை யார் நடத்துவார்? எப்போது நடத்துவார்? இன்னும் சில நாட்கள் கழித்து விசாரித்தால் தவறில்லையே? இன்ன சமயத்தில்தான் வேலைக்கு அமர்த்துவார்கள் என்று ஏதேனும் அட்டவணை இருக்கிறதா?

நன்றி சொல்லுங்கள். பேட்டி முடிந்த கையோடு அல்லது இருபத்து நான்கு மணி நேரத்துக்குள், ஒரு 'தாங்க் யூ' நோட் அனுப்பி விடுங்கள்; சுருக்கமாகவும், மரியாதையுடனும் இருக்கட்டும். பேட்டிக்கு நேரம் ஒதுக்கியதற்கும், பேட்டியில் அக்கறை காண்பித்ததற்கும் நன்றி சொல்லுங்கள்.

நீங்கள் அந்த நிறுவனத்தில் பணி புரிய பேட்டி ஒரு வாய்ப்பு மட்டுமல்ல; அதற்கு நீங்கள் தகுதியானவர்தானா, அங்கு மகிழ்ச்சியுடன் வேலை பார்ப்பீர்களா என்பதும் அடங்கும்.

கன்கிராட்ஸ், வேலைக்குச் சேரக் கடிதம் வந்து விட்டதா? நிறுவனமும் நீங்களும் இது ஏற்ற வேலை என்று முடிவு செய்த பிறகு, 'பேரம் பேச' வேண்டிய தருணம் வந்து விட்டது என்று அர்த்தம்.

இதை நிகோஷியேஷன் என்று சொல்லுகிறார்கள். இரண்டு பக்கமும் விட்டுக் கொடுக்க வேண்டும். இதை வின் — வின் சிச்சுவேஷன் என்பார்கள். அதாவது நிறுவனமும் உங்களால் பயன்பெற வேண்டும். நீங்களும் நிறுவனத்தால் பயன்பெற வேண்டும்.

* என்ன மாதிரி நிபந்தனைகள்; உங்கள் தேவைகள்; உங்களுக்குக் கிடைக்கும் சம்பளம். நீண்ட காலம் அங்கேயே பணியாற்ற வாய்ப்பு இருக்கிறதா. இவற்றையெல்லாம் நீங்கள் பெரிதும் மதிக்கும் ஒருவரிடம் மனம் விட்டு விவாதிக்கலாம்.
* முடிந்தால் பேட்டிக்கு முன்னதாகவே சம்பளம் வகையறா பற்றி அறிந்து கொள்ள முயலுங்கள்.
* உங்கள் கல்வித் தகுதி, திறமைக்கு ஏற்ற சம்பளமாக இருக்கிறதா என்று கவனியுங்கள்.
* 'பேரம் பேசும்'போது உணர்ச்சி வசப்பட்டுவிடலாகாது. உங்கள் முழுத் திறமை, பேச்சு வன்மை, சாமர்த்தியம், நகைச்சுவை அத்தனையும் அதில் வெளிப்பட வேண்டும்.
* ஓர் ஒப்பந்தம் படிந்து விட்டால், அதன் ஒரு பிரதியைக் கையோடு வாங்கிக் கொள்ளுங்கள்.
* உங்களுக்குத தீர்மானம் செய்ய அதிக அவகாசம் தேவைப்பட்டால், கேட்டுப் பெறுங்கள். ஒரு தேதியைக் குறிப்பிட்டுச் சொல்லுங்கள்.

வேலை வாய்ப்பு என்பது, தொடரும் பந்தம். எனவே ஒரு நிறுவனத்தில் வேலை செய்ய, 'ஜாப் நிகோஷியேஷன்' ஒரு துவக்கம் என்பதை நினைவில் வையுங்கள்.

(தொடரும்)

படம் : யோகா

# கீர்த்தி விலாசம்

நந்தியாவட்டைச் செடியில் வெண் முத்துக்கள் மொட்டு கட்டியிருக்கின்றன. மலர்ந்த பூக்களைப் பறிக்கையில் சீதாலக்ஷ்மம்மா நாணிச் சிரித்துக் கொள்கிறாள். மொட்டுக்கள் யாவும் கண்மூடி உறங்கும் குழந்தைகள். நாளை இளங்கதிர்கள் பசுஞ் செடியைத் தீண்டும் வேளை, அவை விழித்துக் கொண்டு சிரிக்கும். ஸ்ரீ ராமனின் திருமேனியை அலங்கரிக்க 'நான் - நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு முந்தி முந்தித் தலை நீட்டும்.

ஒவ்வொரு மலரைப் பறிக்கையிலும் 'ராமா', 'கிருஷ்ணா' என்று உதட்டளவில் அழைத்துக் கொண்டேதான் பறிப்பாள் சீதாலக்ஷ்மம்மா. கண்ணில் படாமல், இலைகளின் மறைவில் தவிப்புடன் காத்திருக்கும் பூக்கள், இவள் கிளைகளை விலக்கிப் பார்க்கும் போது கூடுதல் சந்தோஷத்துடன் சிரிக்கும். 'நாங்களும் ராம ஸேவைக்குத் தயார்' என்று அவளிடம் மலர்மொழி பேசும்.

சீதாலக்ஷ்மம்மாவுக்கும் இன்றைக்குக் கூடுதல் மகிழ்ச்சி... அப்பா அவளுக்குக் கல்யாணம் நிச்சயித்திருக்கிறார். அவளுக்குள் உறங்கும் மொட்டுக்களும் மலர்ந்து சிரிக்கப் போகின்றன...

சட்டென்று நந்தியாவட்டைச் செடியை அணைத்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது அவளுக்கு.

இந்த நந்தவனமும் வெண் மொட்டுக்களும், வாசலில் போடும் பொட்டுக் கோலமும் அதன் செங்காவிக் கரையும், ஸ்ரீ ராமனை அலங்கரிக்கும் நந்தியாவட்டை, துளஸி மாலைகளும் பாரிஜாத சரங்களும்... இவற்றையெல்லாம் எப்படிப்



பிரிவதாம்! எல்லாவற்றுக்கும் மேலாக அப்பாவின் தம்பூரா, அவர் லயிப்பில் கண் மூடி இசைக்கும் திவ்ய சங்கீதம்... வீட்டின் நித்ய இயக்கங்களும் தோட்டத்தின் இயற்கை நியமங்களும்கூட அவரிடமிருந்து பெருகும் பக்திப் பிரவாகத்தினால் பயிர் செய்யப்படுவதாகவே தோன்றும். இந்த பக்திப் பெருக்கில்

சீதா ரவி

வளர்ந்த தளிர்நாற்றுதானே அவளும்! சட்டென்று பறித்து வேறு வயலில் நடப் போகிறார்கள்...!

மலர்களை மாலையாக்குவதற்குள் அவள் மனம் கனத்துத் தொய்ந்தது. மணையைக் கொண்டு வந்து போட்டான்.



காரை பெயர்ந்த சுவரில் சாய்த்து வைத்திருந்த தம்பூராவை எடுத்து வந்து அதன் முன் வைத்தாள். எப்போதும்போல் ஒரு மீட்டு மீட்டினாள். அந்த ரீங்காரம், பூஜைக்கு எல்லாம் தயார் என்று அப்பாவுக்கு அறிவிக்கும் சமிக்ஞை. தந்தியை மீட்டிய விரல்கள் உடனே விலகிவிடாமல் தயங்கி நின்றன. நீடித்த ரீங்காரத்தில் ஆதார ஸ்வரங்களினிடையே இணை ஸ்வரங்கள் சிறு துளிகளாகக் கோத்து நின்று ஆனந்தப் பட்டன.

'என்னத்தை இத்தனை ஆனந்தமாய்க் கொண்டாடுகிறீர்கள்? என் திருமணத்தையா? அல்லது பிரிவையா..?' - துக்கம் மேலிட்டது சீதாலக்ஷ்மம்மாவுக்கு. உயிர்த் துளிகள் கரைந்து இந்த ஒலியிழைகளோடு ஒன்றிவிடக் கூடாதோ! விரல்கள் மெள்ள தம்புராவின் தந்திகளைவிட்டு நீங்கி, பட்டுப் போன்ற அதன் மரப் பகுதியை வருடின. நிமிர்ந்த பார்வைக்கு, பூஜாமண்டபத்தில் ஸ்ரீராமன் தெரிந்தான். உலகுக்கே அழகு தரும் ஒளி பொருந்திய தேகம். அந்த அழகின் பங்காளிகளாக இடது பக்கத்தில் சீதா தேவியும் வலப்புறம் இளவலும் நிற்க, ஆஞ்ச நேயன் வணங்கி அமர்ந்திருக்கும் தோற்றம்.

சிலா ரூபத்துக்கே இத்தனை அழகு எனில், இந்த ஸ்ரீராமன் 'பாலகனகமய சேலனா'கப் பிரத்யட்சமான போது, இன்னும் எத்தனை கோடி மடங்கு அழகனாகத் தோன்றியிருப்பான். சீதலக்ஷ்மம்மாவின் உள்ளத்தில் தினந்தோறும் எழுந்த வினா இன்றும் தம்பூராவின் மீட்டலாக எழுந்தது. கூடவே அனுஸ்வரமாக ஒட்டி வரும் அந்த கிளைக் கேள்வி...

இந்த அப்பாவுக்குத்தான் எத்தனை பேராசை! பொன்னொளி பொருந்திய தேகத்துடன் இஷ்ட தெய்வமாம் ஸ்ரீ ராமன், அவர் எதிரிலேயே தோன்றி காட்சியளித்திருக்கிறான். இதற்கு மேலும் ஒரு பேறு உண்டா!.... யாரைக் காணவேண்டுமென்று அல்லும் பகலும் அனவரதமும் ஏங்கித் தவித்தாரோ, அவரைக் கண் குளிரக் குளிரக் கண்டாயிற்று... க்ஷண நேரம் தானெனினும் எத்தனை பேருக்கு லபிக்கும் இந்த தரிசனம்?

கோயில் - குளம், நதிக்கரை, தீர்த்த யாத்திரை என்று எதுவும் போகவில்லை அப்பா. ஒரு முழம் பூ சார்த்தி, உழக்கு அன்னத்தை நைவேத்யம் செய்துவிட்டு உண்டு - உறங்கி, ஓயாமல் ராம நாமத்தை ஜபித்திருக்கும் குச்சு வீடு. இந்த வீட்டு வாசலுக்கே அல்லவா தேடி வந்துவிட்டான் வத்ஸலராமன்! அவனைக் கண்ட மாத்திரத்தில் அவரது சகல வினாக்களும் விடைபெற்று அவர் அமைதியுற்றிருக்க வேண்டாமோ. மாறாக, 'ஏன்டா! உனக்கு இரக்கமே இல்லையா!' (ஏல நீ தய ராது..) என்றல்லவா பாடினார் அவர்!

- சீதாலக்ஷ்மம்மாவின் மென் மனத்தில் இக்கேள்வி தினம் தினம் எழுந்ததேயொழிய அதை அப்பாவிடம் வாய்விட்டுக் கேட்கும் துணிவு அவளுக்குப் பிறக்கவில்லை.

ஆனால், இனி தள்ளிப் போடலாகாது. இன்றைக்குக் கேட்டாக வேண்டும். இதற்கு விடை தெரியாமல் இந்த வீட்டை விட்டு அகல்வது, இந்த ரகுகுல திலகனைப் பிரிந்து செல்வதைக் காட்டிலும் கடினமானது. தன்னால் ஆகாதது. ஆனால் அப்பாவிடம் எப்படிக் கேட்பதென்றுதான் தெரியவில்லை...



"சீதம்மா!"

- அப்பாவின் குரல் கேட்டு எழுந்த வேகத்தில் கொஞ்சம் நிலை தடுமாறினாள் சீதாலக்ஷ்மம்மா.

"அப்பா!"

"என்ன குழந்தை...? எல்லாத்தையும் பிரிஞ்சு போகணுமேன்னு யோசனையா..?" பரிவோடு அவள் முகத்தைப் பார்த்தார்.

"ம்.." ஆமோதிப்பு முழுமையாய் இல்லை.

சற்று நேரம் அவள் முகம் பார்க்க, சீதம்மாவின் பார்வை தாழ்ந்தது.

"ஸ்ரீ ராமா!" - தியாகய்யர் நமஸ்கரித்துவிட்டு தம்பூராவை எடுத்து மடியில் இருத்திக் கொண்டு மீட்டலானார்.

"அப்பா!.." என்றுமே இல்லாத அதிசயமாய் சீதாலக்ஷ்மம்மா இடைமறித்தாள்.

தம்பூராவைத் தொட்ட பின் பாடி முடியும்வரை நின்றறியாத விரல்கள், இன்று தயங்கி நின்றன.

"சொல்லு சீதம்மா..." கனிந்த அவர் கண்கள் அவளை அன்பால் நனைத்தன.

" நீங்கள் ஸ்ரீராமனை நிஜமாகவே பார்த்தீர்களா அப்பா..?"

தியாகய்யர் தம்பூராவைக் கீழே வைத்துவிட்டார்.

"ஏனம்மா இத்தனை நாள் சென்று இப்படியொரு கேள்வி!... பார்த்தேன். சத்தியமாய்ப் பார்த்தேன். இந்த மீட்டலின் சுருதி சுத்தம் எவ்வளவு சத்தியமோ, அவ்வளவு சத்தியம், போதுமா..."

அப்பா இவ்வளவு அதிரப் பேசிக் கேட்டதில்லை சீதம்மா. அவள் கேள்வி அவரை வருத்தியிருக்கிறது. ஆனால் அது சந்தேகத்தில் விளைந்ததல்ல; வெறும் பீடிகைதான். தன்னையே தயார்ப்படுத்திக் கொள்ள அவள் தேர்ந்தெடுத்த முதல் சிறு படி. அடுத்த கேள்வியையும் கேட்டாள் :

"எப்படி இருந்தார் உங்கள் ராமர்?"

தியாகய்யர் இம்முறை அதிராது பேசினார்.

"அந்த அழகை வர்ணிக்க நானென்ன வால்மீகியா காளிதாஸனா மகளே..! என் கண்களை நிறைத்தது அவன் அழகு என்பது தான் ஞாபகமிருக்கிறது... எனக்குள்ளே மூடிக்கிடந்த ஊற்றுக் கண்களையெல்லாம் திறந்துவிட்டது. உயிர்ப்புனல் பெருகிப் பாயச் செய்தது..."




சொல்லச் சொல்ல அவர் மெலிந்த தேகத்தைப் பரவசம் ஆட்கொள்கிறது.

"அப்படியானால்..." மெதுவாகக் கேட்கிறாள் சீதம்மா.

"ம்... கேட்டுவிடு..."

"அந்தக் காட்சியின் சௌந்தர்யமும் மகா அனுபவமும் உங்களுக்கு ஜன்ம சாபல்யம் அளித்திருக்க வேண்டுமே அப்பா..."

"சரியாகச் சொன்னாய் சீதம்மா."

"அப்படியானால் இன்னமும் ஏன் அப்பா ஏங்கித் தவிக்கிறீர்கள்? கற்பனையிலும் கனவிலும் நனவிலும் அவனை மீண்டும் மீண்டும் தரிசிக்க வேண்டும் என்ற பேராசையில், மீள முடியாது வீழ்ந்து கிடக்கிறீர்களே! பூமி கொள்ளாத மக்கள் வெள்ளம் நிறைந்த இவ்வுலகிலே, தன்னை வெளிப்படுத்த அவன் உங்களை - உங்களை மட்டுமே தேர்ந்தெடுத்தான். அதிலே நிறைவும் பெருமிதமும் கொள்வதற்குப் பதிலாக ஏங்கித் தவிக்கிறீர்களே. புனையும் பாடலும், இசைக்கும் ராகமும், உங்கள் ஏக்கத்தையும் ஆதங்கத்தையுமே அல்லவா வாகனமாக்கிப் புறப்படுகின்றன. அவ்வப்போது பிறக்கும் ஆனந்த கீதங்களுக்குக் கூட இந்த ஏக்கம்தானே அஸ்திவாரமாயிருக்கிறது! யாரைக் காண வேண்டுமென்று தவமிருந்தீர்களோ, அவன் வலிய வந்து தரிசனம் தந்த பின்னர், எதற்காக ஏங்குவதாம்?... அந்த விழைவும் தாகமும் அஞ்ஞானமே அல்லவா...?"

தியாகய்யர் சீதம்மாவை உற்றுப் பார்த்தார். பதின்மூன்று வயதுச் சிறுமி பேசுகிற பேச்சா இது! இல்லையில்லை... பிராட்டிதான் அவளுக்குள் புகுந்து பேச வைக்கிறாள். வேடிக்கை பார்க்கிறான்.

பூஜா மண்டபத்தில் புன்னகை பூத்து நின்ற திவ்ய தம்பதியைப் பார்த்தார் தியாகய்யர். என்ன மந்தஹாஸம்! மகளை நோக்கினார்.

"சீதம்மா! உன் அப்பா ஒரு ஞானியாகும் தகுதி பெற்றவர் என்று எடைபோட்ட உனது அஞ்ஞானத்தைச் சொல்வதா? அவ்வாறு எண்ணும்படி உன்னை ஆளாக்கிய எனது அஞ்ஞானத்தைச் சொல்வதா! எல்லாம் என் ஸ்ரீராமனின் சித்தம்!"

எழுந்து சென்று, விக்ரஹத்தின் மீது கிடந்த துழாய் மாலையைச் சரி செய்தார். தாமரை மொட்டொன்றை மலர்த்தி அவன் திருவடியில் வைத்தார்.

"இந்த உலகத்திலேயே பரிபூரணன் இந்த ஸ்ரீராமன் ஒருவன்தான் மகளே! இவன் முன்னிலையில் சகலரும் அஞ்ஞானிகள். அவன் என்மீது கருணை கொண்டு காட்சியளித்தது சத்தியம். இந்தத் தம்பூராவின் நான்கு தந்திகள் போல் நாலு பேரும் என் முன் தோன்றிய காட்சியை நான் மறந்து விட



வில்லை. அது விளைவித்த நெஞ்சு நிறைவில் இன்றும் தவிக்கிறேன். அந்தத் தவிப்பின் அடங்காத அலைகள் என் ஹ்ருதயத்தின் கதவுகளை மீண்டும் மீண்டும் மோதித் திறந்து விடுகின்றன. அடங்காத இந்த ஏக்கத்துக்கு ஒரு சாச்வதமான வாகனம் வேண்டும் என்பதும் அவன் சித்தம் போலும். அதனால்தான் என் ஹ்ருதய வாசலைப் பெயர்க்கும் தாப வெள்ளத்தில், சொல்லும் பொருளும் ஸ்வரமும் லயமும், என்னைக் கேளாமலே உருக் கொண்டு வெளிப்படுகின்றன. இத்தனை கீர்த்தனைகளை என் முயற்சியால் நான் புனைய முடியுமா அம்மா! சிருஷ்டியின் ஸ்திதி லயம் அவற்றுக்கு எப்படி அமைந்தது? சூர்யோதய ஸௌலப்யத்துடன் பிராஸம் எப்படிப் படிந்தது? சிந்தித்துச் சொல் தேடியா நான் 'ஏல நீ தய ராது!' என்று பாடினேன்? ஸ்ரீராமனின் ஆக்ஞையால் அது பிறந்தது - என் ஏக்கத்தின் வடிகால். இந்த ஏக்கம் தன்னைத் தானே புதுப்பித்துப் புதுப்பித்துப் பாடல்களாக வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது மகளே!"

குரல் கம்மிப் போய், ஈர விழிகளுடன் தளர்ந்தமர்ந்திருந்த அப்பாவைப் பார்த்தாள் சீதாலக்ஷ்மம்மா. ஒரு குழந்தையைப் போல் அவரை வாரியணைத்துக் கொள்ளத் தோன்றியது.

"பூஜைக்கு எல்லாம் தயார் அப்பா..." என்றாள் தாழ்ந்த குரலில்.

"இன்னும் ஒரு கேள்வி நீ கேட்கவில்லையே சீதம்மா..." என்றார் தியாகராஜர். அவள் பதிலுக்குக் காத்திராமல் அவரே தொடர்ந்தார். "ஈச்வரார்ப்பணமாக எல்லாவற்றையும் நினைத்தால், பாட்டுக்குப் பாட்டு 'தியாகராஜ' என்று இந்த அப்பா ஏன் முத்திரை போட்டுக் கொள்ள வேண்டும் - இந்தக் கேள்வியை நீ கேட்கவே இல்லையே..."

"அப்பா....!" முகம் வெளிறிப் போனாள் சீதா லக்ஷ்மம்மா. முளைவிடுகையிலேயே அவள் கிள்ளியெறிந்த ஓர் எண்ணம் இவர் வாக்காக வெளிப்பட்டிருக்கிறது! இவரா அஞ்ஞானி! உணர்ச்சியின் கிலேசங்கள் அடங்கி, உறுதியான குரலில் தொடர்ந்தார் தியாகய்யர்.

"தெய்வ கிருபையினாலே வெளிப்படுகிற சங்கீதத்தில் தப்பித் தவறி ஏதாவது பிழையிருந்தால், அது இந்த மனிதன் தியாகராஜன் இழைத்தது என்று உலகம் அறிய வேண்டும் அல்லவா... அதற்காகப் பெயரைப் புகுத்துகிறேன்... - இதைவிட முக்கியமான ஒரு காரணமும் இருக்கிறது..."

"...."

"ஒவ்வொரு பாட்டும் இந்த ராமனுக்குக் கீர்த்தி விலாசம். அதிலே அவனோடு மிக நெருக்கமாக நானும் குடியிருக்க ஆசைப்படுகிறேன் சீதம்மா... அதனால்தான் நேரடியாகவோ ஈசுவரன் நாமமாகவோ அவற்றில் என் பெயர் இடம் பெற அனுமதித்து விடுகிறேன். இப்போது சொல்லு; இத்தனை பேராசை படைத்த என்னைக் காட்டிலும் பெரிய அஞ்ஞானி உலகிலே வேறு யாராவது இருக்க முடியுமா? அல்லது இந்த அஞ்ஞானத்தைக் காட்டிலும் பெரிய சந்தோஷம் தான் இருக்க முடியுமா?..."

சீதாலக்ஷ்மம்மாவின் முகம் கவிழ்ந்து சின்ன விசும்பல்கள் வெளிப்பட்டன.

"பால கனகமய சேலசுஜன பரிபால..." தியாகய்யர் தம்பூராவை மீட்டிப் பாடலானார்.

சீதம்மா, கண்களைத் துடைத்துக் கொண்டு அவரோடு சேர்ந்து கொண்டாள்:

"ஏல நீ, தயராது..." இரு குரல்களும், ஏக்கத்தோடு இழைந்து இரைஞ்சின. ●

# அடி வாங்குது ஆடியோ உலகம்!

"கேளுங்க, கேளுங்க, கேட்டுக்கிட்டே இருங்க" என்று சூரியன் பண்பலை ஒரு காதிலும், "இது ரேடியோ மிர்ச்சி, வெரி ஹாட் மச்சி" என்று மற்றொரு காதிலும் அசரீரி போல் ஒலிக்கும் வெண்ணெய்க் குரல்கள் தமிழர்களை ரேடியோவுடன் மீண்டும் ஐக்கியமாக்கி விட்டன. தெருக்களில், வீடுகளில் பண்பலையின் தேனிசைப் பாடல்கள் தான். நடமாடும் லாண்டரிக்காரர், டைலர், டீக்கடைக்காரர்கள் ஆகியோர் தனியார் பண்பலையுடன் மிகவும் ஒட்டிக் கொண்டு விட்டார்கள். இவர்களது


• கல்யாண்


• பாலசுப்ரமணியன்

அதிரடியில் ஆல் இந்தியா ரேடியோவின் பண்பலை திக்கு முக்காடுகிறது. ஒரு நாளைக்கு சுமார் 250 முதல் 300 சினிமாப் பாடல்களை இந்த பண்பலைகள் ஒலி பரப்புகின்றன. சினிமாப் பாடல்கள் மட்டுமல்ல; வேறு பல கதம்ப நிகழ்ச்சிகளும் உண்டு என்று அறிவிப்பு இருந்தாலும், இந்தப் பண்பலை 90 சதவிகிதம் ஒலிபரப்புவது சினிமாப் பாடல்கள் தான். அதிலும் நேயர் விருப்பம் ஃபோன் மூலம் நடக்கிறது. இந்தப் பண்பலைத் தாக்குதலில் தடுமாறித் தவித்துப் போய் நிற்பது சினிமாப் பாடல், காஸட் மற்றும் சி.டி. வியாபாரம் தான் என்று சொல்கிறார்கள். சட்டபூர்வ

மான, மற்றும் திருட்டுத்தன மான வி.ஸி.டிக்களால் திரையுலகம் எப்படிப் பாதிக்கப் பட்டிருக்கிறதோ, அதுபோல சினிமாப் பாடல் ஆடியோ வியாபார உலகம் பண்பலைகளின் வரவால் நல்ல அடி வாங்கியிருக்கிறது என்கிறார்கள்.

"அந்த கருத்து உண்மைதான்" என்கிறார் ஸ்டர்லிங் சாலையில் திவ்யா மியூஸிகல்ஸ் நடத்தும் செந்தில். "கடந்த பத்து நாட்களில் எங்கள் வியாபாரம் ஐம்பது சதவீதம் படுத்துவிட்டது" என்கிறார் அவர். "ஆனால் இது தற்காலிகம்தான். மீண்டும் எங்களிடம் தான் மக்கள் வருவார்கள். எஃப்.எம். தொடர்ந்து பத்து நாட்கள் கேட்டால் போரடிக்கும். இது தவிர மியூஸிக் என்பது நமது டேஸ்டுக்குக் கேட்பது. ஆனால் பண்பலையில் அவர்கள் போடுவதைத் தானே கேட்க வேண்டும்" என்கிறார் செந்தில். சாமி, காக்க... காக்க, லேசா... லேசா... தூள் போன்ற படங்களின் காஸட், சி.டிக்கள் அட்டகாசமாகப் போய்க் கொண்டிருந்ததாம். இப்போது அந்த வியாபாரத்துக்கு ஸ்பீட் பிரேக்கராகப் பண்பலை.

**கி**ட்டத்தட்ட முப்பது வருடங்களாக ஆடியோ மார்க்கெட்டில் இருக்கிறார் தி.நகர் லட்சுமி மியூசிகல்ஸ் பாலசுப்பிரமணியம். "இன்றைக்கு மியூஸிக், அது டிவோஷனலாக இருந்தாலும் சரி, வெஸ்டர்ன் அல்லது, சினிமா, பாப் பாடல்களாக இருந்தாலும் சரி, இளைஞர்களின் மனத்தை ஊடுருவி, மூளையில் புரோக்ராம் ஆகிவிட்டது. நமது இளைஞர்கள்தான் இந்த ஆடியோ மார்க்கெட்டின் பெரிய வாடிக்கையாளர்கள். இவர்கள் தங்கள் விருப்பத்திற்குத்தான் மியூஸிக் கேட்க விரும்புகிறார்களே தவிர, பண்பலையில் போடுவதைக் கேட்டுக் கொண்டிருக்க மாட்டார்கள். எனவே பண்பலையின் வரவால் ஆடியோ மார்க்கெட் பாதிப்பு அடைந்திருக்கிறதா என்பதைக் கணிக்க இன்னமும் கொஞ்ச காலம் தேவை. மேலும் பண்பலையில் ரசிகர்கள் லோயர் மிடில் கிளாஸ் மக்கள் தான். மிடில், அப்பர் மிடில் கிளாஸ் மக்கள் தொடர்ந்து சி.டி. காஸட் வாங்கியே தங்கள் இசைத் தாகத்தைத் தீர்த்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்" என்கிறார் பாலசுப்பிரமணியன். இவர் கடையில் ரேடியோ, தொலைக்காட்சிப் பெட்டிகள் போன்றவைகளும் விற்கிறார்கள். "கடந்த சில நாட்களாக ரேடியோ விற்பனை கொஞ்சம் அதிகமாகியிருக்கிறது" என்கிறார் அவர். பண்பலையில் பக்திப் பாடல்களின் பங்கு சற்றுக் குறைவுதான் என்பதால், அதன் விற்பனை சரிய வாய்ப்பில்லை என்கிறார்.

**த**யாரிப்பாளர்களிடம் காஸட், சி.டி. போடும் உரிமை பெற்று பல வெற்றிப்படங்களின் பாடல்களைப் பட்டி தொட்டியெங்கும் ஒலிக்கச் செய்து இன்று மார்க்கெட் லீடராக இருப்பவர் ஃபைவ் ஸ்டார் ஆடியோ கல்யாண். "எங்கள் வியாபாரம் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பது உண்மைதான். எங்கள் விநியோகஸ்தர்கள் கொடுக்கும் ஆர்டர்கள் கிட்டத்தட்ட

## மறையாத இசை

**ஏ**.ஆர். ரகுமானின் உயிர்த் தோழர், மறைந்த மகேஷ் இசையமைத்த ஆறு பாடல்களை தமது 'வானம் வசப்படும்' படத்திற்காக தத்தெடுத்திருக்கிறாராம் ஒளிப்பதிவாளர் பி.சி.ஸ்ரீராம்.

'குருதிப்புனல்' படத்தை பி.சி. இயக்கிய போது பாடல்களே இல்லாத அந்தப் படத்துக்கு பின்னணி இசையமைத்துக் கொடுத்தவர் மகேஷ். 'வானம் வசப்படும்' படத்தைத் தொடங்கும் எண்ணத்தோடு மகேஷிடம் டியூன்களைக் கேட்டிருக்கிறார். எதிர்பாராமல் புற்று நோயால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டபோது, அங்கேயே படத்தின் அனைத்து பாடல்களையும் இசையமைத்து கேஸட்டில் பதிவு செய்து கொடுத்திருக்கிறார் மகேஷ். அதனைக் கொண்டு அவரின் உதவியாளர் சுந்தர்



இப்போது ஆறு பாடல்களைப் பதிவு செய்திருக்கிறாராம். மகேஷின் டியூன்களுக்கு வரிகளை எழுதி இருப்பவர் : வைரமுத்து.

- ஸ்ரீ

அறுபது சதம் குறைந்து போயிருக்கிறது. பண்பலை என்பது ஒரு புது மோகம். அமெரிக்காவில் பண்பலை பாப்புலராகிய போது சி.டிக்களின் விற்பனை ஆறு மாத காலம் அடிவாங்கியதாம். இங்கு எங்கள் கணிப்பின்படி இழந்த மார்க்கெட்டை மீண்டும் பிடிக்க ஒரு வருடம் ஆகலாம்" என்கிறார் கல்யாண்.

தயாரிப்பாளர்களிடம் இசை உரிமையை வாங்கி, தனியார் பண்பலைக்கும், ஆல் இந்தியா ரேடியோவுக்கும், விற்பவர்கள் காஸட் - சி.டி. தயாரிப்பாளர்கள் தான். மாதத்திற்கொரு முறை, ஒலிபரப்பிய பாடல்களைக் கணக்கெடுத்து, ராயல்டி கொடுக்கிறார்கள் (இந்தத் தொகை அரசு நிர்ணயித்தது). காப்பிரைட் சட்டப்படி இந்த வியாபாரம் நடக்கிறது. "பாடல்கள் ஒலி பரப்பும் உரிமையை, பண்பலைகளுக்கு கொடுக்க வேண்டிய கட்டாயம் உள்ளது" என்கிறார் கல்யாண்.

"கடந்த ஒரு வருடமாகவே ஆடியோ மார்க்கெட் ஆரோக்கியமாக இல்லை. திருட்டு எம்.பி.3 சி.டிக்கள் (சுமார் 150 பாடல்களை உள்ளடக்கியது) மார்க்கெட்டை ஆக்ரமித்து எங்கள் விற்பனையை பாதித்தன. இப்போது பண்பலை வந்திருக்கிறது. இந்தத் தாக்குதலிலிருந்து மீண்டு வருவது என்பது பெரிய சவால்" என்கிறார் 'ஹிட் மியூஸிக்' அலி. வெளியூர் விநியோகஸ்தர்கள் வாங்குவது பெருமளவில் குறைந்து போயிருப்பதாக வருத்தப்படுகிறார் அலி. "திருட்டு வி.சி.டி. போல, திருட்டு ஆடியோ சி.டி. காஸட்டுகள் ஏற்கெனவே எங்கள் வியாபாரத்தை பாதித்து விட்டன. இந்தப் பண்பலை அடி மடியில் கை வைத்து விட்டது" என்கிறார் அலி.

மக்கள் எப்படியும் "மீண்டு" காஸட், சி.டி.பக்கம் வருவார்கள் என்ற நம்பிக்கையுடன் காத்திருக்கிறது ஆடியோ உலகம். தமிழகத்தில் கிட்டத்தட்ட முப்பது திரைப் பாடல் காஸட், சி.டி.தயாரிப்பாளர்கள் இருக்கிறார்கள். வருடத்திற்கு முப்பது கோடி புரளும் வியாபாரம் இது. தனியார் பண்பலைகளின் பாதிப்பில் பல தயாரிப்பாளர்கள் 'ஃபீல்டு அவுட்' ஆகிவிடக் கூடும் என்ற பயமும் இருக்கிறது.

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : மீடியா ராமு

# ஏகன் அநேகன்

டாக்டர் சுதா சேஷய்யன்

சிவன், விஷ்ணு, பிரம்மா, முருகன், விநாயகர், ஐயப்பன், காத்தவராயன், கருப்பண்ணசுவாமி, கிருஷ்ணன், இராமன், நடராஜன், தட்சிணாமூர்த்தி, பார்வதி, லட்சுமி, சரஸ்வதி, கௌமாரி, மஹேஸ்வரி, அன்னபூரணி, லலிதாம்பிகை, ராஜராஜேஸ்வரி, மாரியம்மன், படவேட்டம்மன், காளியம்மன், சக்தியம்மன், சண்டியம்மன்... அப்பப்பா! எத்தனை கடவுள்கள்!

நூற்றுக்கணக்கான தெய்வங்கள். விதவிதமான வடிவங்கள்.

இத்தனை கடவுள்களை வைத்துக் கொண்டு என்ன செய்கிறோம்? ஏன் இத்தனை கடவுள்கள்? ஒரு கடவுள் என்றால் வழிபட முடியும்; நூறு தெய்வங்கள் என்றால் யாரை வணங்குவது, வழிபடுவது?

எல்லாவற்றிலும் கடவுளைக் கண்ட இந்து மதம் எல்லாவிதமான கடவுளையும் காட்டுகிறது. 'ஒருவனே தேவன்' என்றுரைக்கும் இந்து மதம் ஓராயிரம் தெய்வங்களையும் உரைக்கிறது. 'நான் இந்த சாமியின் பக்தன்', 'எங்கள் குலதெய்வம்', 'எனக்கு இஷ்ட தேவதை' என்று அவரவர்கள் அவரவர்கள் இஷ்டப்பட்ட மாதிரி கடவுளைக் கும்பிடுவார்கள்.

பல தெய்வங்கள் இருந்தால்கூடப் பரவாயில்லை. அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு உருவத்திலும் வடிவத்திலும் வேறு இருக்கிறார்கள். ஒருத்தர் நிற்கிறார்; ஒருத்தர் சிரிக்கிறார்; ஒருத்தர் கறுப்பு; ஒருத்தர் இளமையானவர்; ஒருத்தர் பிரம்மச்சாரி; ஒருத்தர் இரட்டைப் பெண்டாட்டிக்காரர். நல்ல கூத்து. கூத்து... ஆமாம். இதில் கூத்தாடும் கடவுளும்கூட உண்டு.

கடவுள் சர்வ வல்லமை படைத்தவர் என்று சொல்லிவிட்டு, சின்னச் சின்ன வடிவங்களுக்குள் அவரை அடைத்து விடுவதும், உருவங்களில் வைத்து வழிபடுவதும் சரிதானா?

பாரதத்தின் மீது படையெடுத்த மிகப் பெரிய மன்னனொருவன், இமயமலைச் சாரலில் தவத்தில் அமர்ந்திருந்த ஞானி ஒருவரைச் சந்தித்தான். அவரிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தபோது அவரின் ஞானமும் அறிவும் அவனை அசத்தின. தன் நாட்டிற்கு அவரை அழைத்துப் போய்விட வேண்டும் என்கிற முடிவோடு அவரைக் கூப்பிட்டான். 'நிறைய பணம் தருகிறேன்; வசதிகள் செய்து தருகிறேன்' என்று கூறினான். 'வசதிகளாவது ஒன்றாவது; எனக்கு எல்லா சுகமும் இன்பமும் இங்கேயே, இந்த அமைதியிலும் தியானத்திலும் கிடைக்கிறது' என்று பதிலுரைத்தார் ஞானி. 'என்னுடன் வராவிட்டால் உங்களைக் கொன்று விடுவேன்' என்று மிரட்டினான்.

அவனின் அதட்டலைக் கேட்டுச் சிரித்தார். புன்னகைத்துக் கொண்டே சொன்னார்– 'என்னை எப்படி உன்னால் கொல்ல முடியும்? இருட்டைப் போக்கும் ஒளியை, மெல்ல வீசும் காற்றை, மனம் நிறையும் திருப்தியை, உள்ளத்தில் உள்ள உயிரோட்டத்தை உன்னால் கொல்ல முடியுமானால், என்னையும் கொல்ல முடியும். ஆனால் முடியுமா?' என்று அவர் கேட்ட கேள்வியின் முழுப்பொருளும் புரியாமல் விழித்தான் அவன்.

அந்த ஞானியின் சொற்கள் குறித்தது எதை? 'ஒளியிலும், காற்றிலும், பஞ்ச பூதங்களிலும் நிறைந்துள்ள அதே தெய்வத்தன்மைதான் என்னுள்ளும் இருக்கிறது. எல்லா உயிரினுள்ளும் இருக்கிறது. உடல் அழிந்தால் என்ன? எங்கும் நிறைந்த பரம்பொருளைப் போக்கிவிட முடியுமா?' – இதுதான் அவரின் கேள்வி. கேள்வியே பதிலையும் சொல்கிறது – "எங்கும் நீக்கமற நிறைந்ததுவே பரம்பொருள்."

அப்படியானால், அந்தப் பரம்பொருளைப் பேழைக்குள் அடைப்பது மாதிரி, உருவ வழிபாடு ஏன்?

கடவுள் எங்கும் பரந்து நிறைந்தவர் என்பது தெரியும்தான்; ஆனால், உருவமற்ற, அருவமான, அங்கிங்கெனாதபடி நீக்கமற நிறைந்த கடவுள் என்று எத்தனை வார்த்தைகளால் சொன்னாலும், அதைச் சரியாகப் புரிந்து கொள்வதும் உணர்ந்து கொள்வதும் கடினமானது.

மின்சாரத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாதவருக்கு 'அதுவொரு சக்தி; பாஸிடிவ் நெகடிவ் ஓட்டத்தில் உண்டான ஆற்றல்', என்றெல்லாம் வர்ணித்தால் புரியாது; ஆனால், மின்சாரத்தால் இயங்கும் விளக்கைப் போட்டுக் காட்டினால் ஓரளவுக்குப் புரியும். எளிதில் புரிந்து கொள்ள முடியாத தத்துவம் கடவுள் தன்மை; அதை சராசரி மக்களும் சுலபமாகப் புரிந்து கொள்ளும் படியாக எளிமையாகச் சொல்வதே 'உருவ வழிபாடு' என்னும் உவமானம்.

மரத்திலிருந்த ஆப்பிள் தரையில் விழுந்தது; தரையைநோக்கி அப்பழம் வந்தது புவியின் ஈர்ப்புச்சக்தியால் என்று விளக்கம் கொடுத்தார் நியூட்டன். பூமியின் பரப்பு முழுவதும் உள்ள ஈர்ப்புச் சக்தியை, ஒரு ஆப்பிள் பழத்துக்குள் அடக்கிவிட முடியுமா? முடியாதுதான். ஆனால், புவிப் பரப்பு முழுமையும் வியாபித்திருக்கும் ஈர்ப்புச் சக்தியை, ஒரு ஆப்பிள் மூலமாக அறிய வைக்க முடியுமில்லையா – அப்படித்தான்,



அண்டமெல்லாம் வியாபித்திருக்கும் இறைமையை, நமக்குத் தெரிந்த, புரிந்த வடிவங்கள் மூலம் விளங்க வைக்க முடியும்.

எந்தப் பொருளும், அது உயிருள்ளதோ, உயிரற்றதோ, அது முதலில் உருவாக்கப்பட வேண்டும், பின்னர் காப்பாற்றப்பட வேண்டும், பின்னர் அழிக்கப்பட வேண்டும் – இந்த வரன்முறையைக் காட்டவே மும்மூர்த்திகள். ஸ்ருஷ்டிகர்த்தாவான பிரம்மா, நான்கு தலைகளைக் கொண்டவர். நான்கு வேதங்கள் என்று இவற்றைச் சொன்னாலும், தொடக்கத்தை அறிவிக்கும் அவர், நான்கு திசைகளையும் நோக்குகிறார் என்று கூடக் கொள்ளலாமே! காப்பாற்றும் கடவுள் கருநீல நிறம் கொண்டவர். வெண்மையைப் பகுத்தால் பல நிறங்கள் கிடைக்கும் என்றாலும் கூட, இயற்கை ஒளிச் சிதறலில் பரவலாகக் காணக் கிடைப்பது நீலம்தானே! அதனால்தான், வானும் கடலும் நீலமாகக் காட்சி தருகின்றன. நிறமில்லாத விண்ணும், நிறமற்ற கடல் நீரும், வியாபகத்தன்மை பெறும்போது நீலமாகவே தென்படுகின்றன. எனவே எங்கும் வியாபகமாய் காப்பாற்ற வேண்டிய விஷ்ணுவும் நீலமாய் நிற்கிறார். அழிவின் அதிபதியாம் ருத்ரசிவனோ, இலேசான செம்மையுடன் சுடுகாட்டில் ஆடுகிறார். எதுவுமே அழிவுக்கு முன் ஒரு ஆட்டம் ஆடி நிற்கும். வாகனம் கூட நிற்பதற்குமுன் சற்று வேகமாக அதிர்ந்து நிற்கும். அழிவு பல சமயங்களில் வெப்பத்தையும் தரும். அதுதான் அழிவுக்காரர், வெப்பத்தையும் அதிர்வுகளையும் காட்ட செம்மையாய்க் காட்சி தருகிறார்.

உருவ வழிபாடு, பக்தியின் ஒரு முறை; பக்தி நிலையின் ஒரு படிக்கட்டு. இந்த படிக்கட்டில் ஏறி இறைமையை உணரவும் அடையவும் செய்யலாம்.

இன்னொன்றையும் யோசிக்கலாம். மனித மனம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான குணமும் விருப்பமும் கொண்டது. பல்வேறு வடிவங்களில் கடவுளின் உருவத்தைச் சொன்னால், யார் யாருக்கு என்ன வடிவமும் உருவமும் பிடிக்குமோ, அந்த வடிவத்தை அவர் 'இஷ்ட தெய்வம்' என வழிபடலாம். குழந்தையைப் பிடிக்குமென்றால் கிருஷ்ணனும் குருவாயூரப்பனும்; இளைஞரைப் பிடிக்குமென்றால் முருகனும் இராமனும், கணவரும் மனைவியுமாக என்றால் பரமசிவனும் பார்வதியும்; குடும்பமாக என்றால் சோமாஸ்கந்தமூர்த்தி; குருவாக இருப்பார் தட்சிணாமூர்த்தி; இப்படியாக இன்னும் இன்னும்...

மனிதனுக்குச் சில உண்மைகளைக் கற்றுக் கொடுக்கும் வகையிலும் உருவங்கள் உண்டு. சமுதாயத்தில் ஆணும் பெண்ணும் சமம் என்பதைக் காட்ட, மாது ஒரு பாதியனான அர்த்தநாரீஸ்வரர். பக்தி வழியை வைத்துக் கொண்டு மனிதர்கள் சண்டை போடக் கூடாது என்பதற்காக ஹரியார்த மூர்த்தியாக உள்ள சங்கரநாராயணர்.

வெறும் உருவத் திருமேனிகள் மட்டுமல்ல, கலைக்கும் கலாசாரத்திற்கும் இருப்பிடங்களாகவும் இந்த இறைத் திருமேனிகள் இருப்பதையும் காணலாம். கண்ணன் புல்லாங்குழல் இசைக்கும் வேணுகோபாலன். அனுமன் வீணை வித்தகன். ஏழிசையாய் இசைப் பயனாய் விளங்குவது மாத்திரமல்லாமல் தாண்டவமூர்த்தியானார் நடராஜர்; தானும் ஆடுவதற்கு ஆசை கொண்ட கிருஷ்ணர், காளிங்கன் மீது ஆடத் தொடங்கினார்.

சிவனுக்கே 'சபாபதி' என்னும் திருநாமம் உண்டு. கரணங்களுக்கும் நிருத்யங்களுக்கும் அவரே அதிபதி. தினமும் மாலையில் கயிலையில் வந்து குழுமும் கடவுளர்களுக்கும், அன்று முழுமையும் அல்லாடிய உயிர்களுக்கும், ஓய்வும் உற்சாகமும் பொழுது

''உங்க வீட்டுக்காரர் உடம்பெல்லாம் கட்டுப் போட்டு இருக்காரே ஏன்? கீழே விழுந்துட்டாரா?''

''ஊஹூம்... ஆந்திரா பக்கம் ரயிலில் வரும்போது, கூட இருந்தவனிடம் 'பிஸ்கட்' சாப்பிடுங்க'ன்னு சொல்லித் தொலைச்சுட்டார்!''

– எம். வேங்கடேஸ்வரன்



போக்கும் தருவதற்காக அவர் நடனமாடுகிறாராம்.

சரி, ஒரு சின்ன சந்தேகம். ஏன் நடனமாடுகிறார்? பாட்டுக் கச்சேரி நடத்தியிருக்கலாமே! (நடத்தியும் இருப்பார் – எல்லாக் கலைகளுக்கும் இறைவன்தானே தலைவர்) ஆனாலும், குறிப்பாக, நடனம் என்று நிறுவ வேண்டியதன் அவசியம் என்ன?

கலைகள் பலவகை, ஓவியம், சிற்பம், எழுத்து – இத்தகைய கலைகளில், செய்த கலைஞன் இல்லாமலே கலையை ரசிக்கலாம்; உணரலாம். இரண்டாவது வகை கலைகளுக்கு எடுத்துக்காட்டு இசை – கலைஞனைக் காணாமலே இசையை மட்டும் காதில் வாங்கி ரசிக்கலாம். அப்படியானால், முதல் வகையில், கலையும் கலைஞனும் முழுமையாகப் பிரிக்கப்படலாம் (totally separable), இரண்டாவது வகையில், கலையும் கலைஞனும் ஓரளவுக்குப் பிரிக்கப்படலாம் (partially separable).

ஆயின், நடனத்தைச் சற்றே சிந்திப்போம். அபிநயத்தை ஆடுபவரிடமிருந்து பிரித்துவிட முடியாது. நடனத்தை, நிருத்யத்தை, அசைவுகளை, அபிநயத்தை, மெய்ப்பாட்டை, மெல்லுணர்வைப் பார்க்கவோ, ரசிக்கவோ, உணரவோ செய்ய வேண்டுமென்றால், கலைஞனின் உருவத்தோடு பொருத்தித்தான் செய்ய வேண்டும். அப்படியானால், இதில், கலையும் கலைஞனும் பிரிக்கப்பட முடியாதவை (inseparable). அண்டத்திலிருந்து ஆண்டவனைப் பிரிக்க முடியாது; ஆண்டவனிலிருந்து அண்டத்தைப் பிரிக்க முடியாது – இதனைச் சொல்ல இதனினும் நன்முறை வேறுண்டோ?

அக்பருக்கு ஒரு சந்தேகம் வந்தது. தர்மத்தை நிலைநிறுத்தவும், பக்தர்களைக் காப்பாற்றவும் கடவுள் ஏன் நேரடியாக அவதாரம் எடுக்க வேண்டும்? அவருக்கென்ன உதவியாளர்களுக்குப் பஞ்சமா? அவர்களை அனுப்பக் கூடாதா?

யமுனை நதியில், படகுச் சிற்றுலா புறப்பட்டார் மன்னர். எல்லோரும் வந்தபின், மார்போடு அணைத்த துணி மூட்டையுடன் வந்தார் பீர்பால். 'அரசே, உங்கள் அன்பு மகன், நான் கிளம்பும்போது தானும் வருவதாக அடம் பிடித்தான்; ரொம்பவும் அழுதான்; அவனுக்கு ஜல தோஷம் வேறு; அதனால் நன்கு கம்பளி சுற்றி தூக்கி வந்தேன்; வழியில் தூங்கி விட்டான்' என்று சொல்லிக் கொண்டே குழந்தையைத் தோளில் போட்டுத் தட்டினார் பீர்பால்.

நட்டநடு நதியில்... படகு இலேசாக ஆடியது. ஓரத்தில் உட்கார்ந்து எட்டிப் பார்த்த பீர்பாலின் தோளிலிருந்து நழுவிய குழந்தை யமுனைக்குள் விழுந்தான். ஆ...ஐயோ...! பணியாளர்கள் தண்ணீருக்குள் பாய... ஆத்திரமாக, ஆவேசமாக யமுனைக்குள் குதித்தார் மன்னர். சிறிது நேரத்துக்குப் பின், குழந்தையைச் சுற்றியிருந்த கம்பளி மட்டுமே கையில் அகப்பட, கண்ணீரோடு படகொன்றைப் பற்றிக் கொண்டு மிதந்த மன்னரை நோக்கி நகைத்தார் பீர்பால். "கவலைப்படாதீர்கள் அரசே, உங்கள் மகன் அரண்மனையில் பத்திரமாக இருக்கிறான்; தண்ணீரில் விழுந்தது பொம்மை" என்றார்.

பெருமூச்சுடன் படகேறி வந்த அக்பரிடம் பீர்பால் கேட்டார்: "ஏன் அரசே, உங்கள் பரிவாரங்கள் எல்லோரும் இளவரசனைக் காப்பாற்ற குதித்தார்களே, நீங்களும் ஏன் பாய்ந்தீர்கள்?" நிமிர்ந்து பார்த்த மன்னரிடம் மேலும் சொன்னார்: 'உங்கள் குழந்தை என்றவுடன் உணர்வு துடித்தது; ஆட்களோடு நீங்களே பாய்ந்தீர்கள்; அப்படித்தான் கடவுளும். சொந்தக் குழந்தைகளுக்காக அவரே அவதாரம் எடுக்கிறார்.

(தொடரும்)



''என்னது... உங்க அம்மா வீட்டுக்குப் போறியா...? நீ வர்ற வரைக்கும் என் அம்மாவோட நிலைமை என்ன ஆறது?''

''கவலைப்படாதீங்க; வேலைக்காரிகிட்டே சொல்லி இருக்கேன்... தினமும் சண்டை போட்டுக்குவா.''

– அதிராம்பட்டினம் யூசுப்



# ஜல்லு மல்லு

— கதிர்




இந்த 'சாங்க' கேட்டுப் பாரேன்.
நீ மட்டும் கேக்கறதுக்குப் போர்தான் வாக்மேன். ஊருக்கே கேட்டா அது மைக்செட்!




ஏய்... இது அப்படியே ஒரு பாப் ஆல்பத்திலிருந்து சுட்டது.
என்னதான் ரேமண்ட்ஸ் துணியெடுத்தாலும் அத நம்ம ஸ்டைலுக்கு தச்சுப் போடறதுதானே பியூட்டி?


அதுக்குன்னு ரெடிமேட் சட்டையை வாங்கி ஓரம் அடிச்சுட்டு பியூட்டின்னா எப்படி?
நீ வேணுன்னா இங்கிலீஷ் சாங்ஸ் கேட்டுப்பாரு. அப்புறம் தமிழ் சாங்ஸ்ஸை விட்டுடுவ.




ஏன் அவ்வளவு நல்லாயிருக்குமா?
இல்ல.. ரெண்டும் ஒண்ணுதானே...


ஆ.... தேவா வா...வா...



சென்னை, சவேரா ஹோட்டலில் தலைமை செஃபாகப் பணியாற்றும் எம். கிரிதரனுக்குத் தெரிந்தது எல்லாம் ருசியான சமையல், சமையல், சமையல் மட்டும்தான்!

விதவிதமாகச் சமைத்து, அலங்கரித்து, பரிமாறுவதில் சுமார் இருபது வருட அனுபவம். சென்னை தரமணி கேட்டரிங் இன்ஸ்டிடியூட்தான் இவருக்கும் ஆதி குரு. தாஜ் இன்டர்கான்டினென்டல், மும்பை அம்பாஸிடர் க்ரூப்ஸ், குவாலிடி இன் போன்ற ஹோட்டல்களிலும் இவரது நளபாகம் கொடி கட்டிப் பறந்துள்ளது.

'வாழைக்காய் சிப்ஸ்' போன்ற ஆர்டினரி சமையல் குறிப்பிலிருந்து, 'பிஞ்சுசோளம் வித் பூண்டு சாஸ்' போன்ற ஹைகிரேடு ரெஸிப்பி வரை, நிறைய தந்திருக்கிறார்.

பிடிச்சதை சமைச்சு, சந்தோஷமா சாப்பிடுங்க!

# வாழைக்காய் மசாலா வறுவல்

**தேவையான பொருள்கள் :**

நன்றாக முற்றிய வாழைக்காய் - 2

மிளகாய்த்தூள் - 2 டீஸ்பூன்

மல்லித் தூள் - 1 டீஸ்பூன்

மஞ்சள் தூள் - ¼ டீஸ் ஸ்பூன்

உப்பு - ருசிக்கு

தேங்காய் எண்ணெய் - பொரித் தெடுக்கத் தேவையான அளவு

**எப்படித் தயாரிப்பது?**

வாழைக்காயின் தோல் நீக்கிக் கொண்டு, மிக மெல்லிய, வட்ட வடிவத் துண்டுகளாக சீவிக் கொள்ளவும்.

தேங்காய் எண்ணெய் தவிர, மற்ற நான்கு தூள்களையும் வாழைக்காய்த் துண்டுகளோடு சேர்த்து, இலேசாகத் தண்ணீர் தெளித்துப் பிசிறிக் கொள்ளவும்.



• எம். கிரிதரன்

வாணலியில் எண்ணெய் விட்டு, சூடேற்றிய பின், மசாலா கலந்த வாழைக் காய் வட்டங்களைப் போட்டு, சிவக்க வறுத் தெடுக்கவும். மொறு மொறுவென்ற மசாலா சிப்ஸ் ரெடி.

**குறிப்பு:**

பிஞ்சு வாழைக்காய் உதவாது. நன்றாக முற்றிய காய்களாகப் பார்த்து வாங்கவும். அதேபோல், கலக்கும் மசாலாத் தூள்களும், ஃப்ரெஷ்ஷாக இருப்பது அவசியம். வாழைக்காயைப் பொரிக்கும்போது, மிதமான தீயில், மெதுவாகக் கிளறவும். இல்லை என்றால், உடைந்து தூளாகிவிடும். உஷார்!

# சேப்பங்கிழங்கு வறுவல்

**தேவையான பொருள்கள்:**

சேப்பங் கிழங்கு - 200 கிராம்
உப்பு - ருசிக்கு
மிளகாய்த்தூள் - ½ டீஸ் ஸ்பூன்
மிளகுத் தூள் - ½ டீஸ் ஸ்பூன்
எண்ணெய் - ¼ லிட்டர்

**எப்படித் தயாரிப்பது?**

அகலமான பாத்திரத்தில் தண்ணீர் விட்டு, கொதிக்க விடவும். சேப்பங் கிழங்கை அரை வேக்காடாக வேக வைத்துக் கொள்ளவும்.

நன்றாக ஆறியதும், மேல் தோலை நீக்கிவிட்டு, சிறு சிறு துண்டுகளாக, அதன் வட்டவடிவிலேயே நறுக்கிக் கொள்ளவும்.

வாணலியில் எண்ணெய் வைத்து, காய்ந்ததும், அரிந்து வைத்துள்ள சேப்பங்கிழங்கை, எண்ணெயிலிட்டு பொரித்தெடுக்கவும். இறுதியில், மிளகு, மிளகாய்த் தூள், உப்பு மூன்றையும் தூவி, கிளறி வைத்துக் கொள்ளவும். எல்லா வகையான சாதத்துக்கும் மிகவும் தோஸ்த்தாகிவிடக் கூடிய பக்க, ஸாரி, பக்கா ஸ்நாக் இது.

*குறிப்பு:*

சேப்பங்கிழங்கு, புதிய கிழங்காகப் பார்த்துப் பார்த்துப் பொறுக்கியெடுக்கவும். (காய்கறி கடைக்காரர் எரிப்பது போல பார்த்தாலும் பரவாயில்லை. டேஸ்ட் இருக்கணுமில்லையா?) தோலுரிக்கும் போது, கைகள் அரித்தால், உப்பு சேர்த்த வெந்நீரில் கையலம்பிக் கொள்ளுங்கள். நமைச்சல் இருக்காது. 'ஏப்ப சேப்பையா இல்லாம, சூப்பர் சேப்பையா இருக்கே' என்று பாராட்டு கிடைக்கணும்னா கொஞ்சம் மெனக்கெடுங்களேன்.

# உருளை பிரட்டல்

*தேவையான பொருள்கள் :*

*சிறு உருளைக் கிழங்கு - ¼ கிலோ*
*மிளகாய்த் தூள் - 2 டீஸ்பூன்*
*மிளகுத் தூள் - 2 டீஸ்பூன்*
*மஞ்சள் தூள் - தேவைக்கு*
*உப்பு - ருசிக்கு*
*கடுகு - சிறிது*
*கறிவேப்பிலை - 1 கொத்து*
*காய்ந்த மிளகாய் - 3*
*எண்ணெய் - தாளிக்க*

*எப்படித் தயாரிப்பது?*

உருளைக் கிழங்கை, அலம்பி, குக்கரில் வைத்து, மூன்று விஸில் வரும் வரை விடவும். சரியான பதத்தில் வெந்ததும், தோலுரித்துக் கொண்டு, சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.



• சேப்பங்கிழங்கு வறுவல்....

வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, காய்ந்த மிளகாய், கறிவேப்பிலை போட்டு தாளிக்கவும்.

• உருளை பிரட்டல்

அடுப்புத் தணலை மிதமாக்கி விட்டு, நறுக்கிய உருளையைப் போட்டு, பிரட்டவும். அதன் மேல் மிளகாய்த் தூள், மிளகுத் தூள், உப்புப் போட்டு நன்றாகப் பிரட்டவும்.

இதையே காலி ஃப்ளவர் சேர்த்தும் செய்யலாம். காலி ஃப்ளவர் துண்டுகளை, நேரடியாக எண்ணெயில் புரட்டாமல், உப்பு சேர்த்து அரைவேக்காடாக வேக வைத்து, பயன்படுத்தவும்.

பச்சை மிளகாய், வெங்காயம் இரண்டையும் விழுதாக அரைத்து, இறுதியில் சேர்த்து ஒரு கிளறு கிளறினால், இன்னும் 'கமகம' சேரும்!

## பீர்க்கங்காய் மசியல்

தேவையான பொருள்கள்

பீர்க்கங்காய் - 2

பச்சை மிளகாய் - 4

பூண்டு - 2

இஞ்சி - ஒரு சிறிய துண்டு
புளி - எலுமிச்சம்பழம் அளவு
வெங்காயம் - 2
தக்காளி - 2
எண்ணெய் - 50 கிராம்
கடுகு - 1 டீஸ்பூன்
காய்ந்த மிளகாய் - 2
கறிவேப்பிலை - சிறிது

*எப்படித் தயாரிப்பது?*

பீர்க்கங்காயின் மேல் தோலை, சுத்தமாக சீவிக் கொள்ளவும். பெரிய துண்டங்களாக நறுக்கிக் கொள்ளவும்.

பச்சை மிளகாய், பூண்டு, இஞ்சி, வெங்காயம், தக்காளி அனைத்தையும் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.

அகலமான பாத்திரத்தில், பீர்க்கங்காய்த் துண்டுகளுடன் மிளகாய், இஞ்சி, பூண்டு வகையறாவையும் சேர்த்து, மிதமான தீயில் அளவான நீரில் வேக விடவும்.

வெந்ததும், ஆறவிட்டு, மிக்ஸியிலிட்டு, புளி கரைத்த நீர் சேர்த்து அரைக்கவும். அடி கனமான வாணலியில், தாளிக்கப் போதுமான அளவு எண்ணெய் விட்டு, கடுகு, காய்ந்த மிளகாய், கறிவேப்பிலை போட்டுத் தாளிக்கவும். அரைத்த பீர்க்கங்காய் விழுது சேர்த்து, உப்புப் போட்டு இறக்கவும்.

குறிப்பு :

நிறம் விரும்பிகள் இலேசாக மஞ்சள் தூள் சேர்க்கலாம். சூடான சாதத்தில் பிசைந்து சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும். காயை வேக வைக்கும்போது, நீர் அதிகமாகி விடாமல் பார்த்துக் கொள்ளவும்.

## எண்ணெய் உருளை எள்ளுக் கறி

*தேவையான பொருள்கள்:*

உருளைக் கிழங்கு - ¼ கிலோ

• பீர்க்கங்காய் மசியல்

வெங்காயம் - 4
தக்காளி - 4
பச்சை மிளகாய் - 2
வெள்ளை எள்ளு - 2 டீஸ்பூன்
நிலக்கடலை - சிறிது
புளி - சிறிது
தேங்காய் - அரை மூடி
காய்ந்த மிளகாய் - 4
எண்ணெய் - நூறு மில்லி
கடுகு - 1 டீஸ்பூன்
வெந்தயம் - ½ டீஸ்பூன்
கறிவேப்பிலை - 1 கொத்து
பூண்டு - 2

எப்படித் தயாரிப்பது?

உருளைக் கிழங்கை தோல் நீக்கி, சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.

வெங்காயத்தில் பாதியை, சிறு துண்டுகளாக நறுக்கி, அதனுடன், வெள்ளை எள்ளு, காய்ந்த மிளகாய், புளி, நிலக்கடலை, பூண்டு, மஞ்சள் தூள், தேங்காய்த் துருவல், வெந்தயம் இவை எல்லா

வற்றையும் சேர்த்து மைய அரைத்துக் கொள்ளவும். எள்ளு மசாலா தயார் செய்து கொண்டாயிற்று. இனி வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, பச்சை மிளகாய், கறிவேப்பிலை, தாளித்து, மிச்சமுள்ள வெங்காயத்தை நறுக்கிப் போட்டு நன்றாக வதக்கவும்.

வெங்காயம் பொன்னிறமாக வதங்கியதும், அதில் தக்காளித் துண்டங்களைப் போட்டு வதக்கவும். மஞ்சள் தூள், மிளகாய்த் தூள் சேர்த்து நன்றாக வதக்கவும்.

வதக்கிய மசாலா ரெடியாச்சா? அதனுடன் எள்ளு மசாலா சேர்த்து, சிறிது தண்ணீர் விட்டு, நன்றாகக் கொதிக்க விடவும்.

கடைசியாக உருளைக்கிழங்குத் துண்டங்களை, அரைப் பதத்துக்கு வேக வைத்து, வடித்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெயைக் காய வைத்து, உருளைக் கிழங்கை இட்டு, மிதமான தீயில் பொரித்தெடுக்கவும்.

சிவக்க வறுத்த உருளையை, எண்ணெய் மிதக்கும் குழம்பில் சேர்த்து விடவும். சுவையான எள்ளுக் கறி, பரிமாறத் தயார்.

குறிப்பு :

எள்ளு சேர்க்கும் முன்பு, கல், மண் நீக்கி, வெறும் வாணலியில் வறுத்துக் கொள்ளவும். தக்காளியுடன் இரண்டு நாட்டுத் தக்காளி சேர்த்தால் சுவை இன்னும் எடுபடும். சாதம், ரொட்டி, 'நான்' வகைக்கு சூப்பர் காம்பினேஷன் என்பதால், கேட்டு வாங்கிச் சாப்பிடுவார்கள்.

# பொட்டுக் கடலை வடை

*தேவையான பொருள்கள்:*

பொட்டுக் கடலை - 200 கிராம்



## • பொட்டுக் கடலை வடை

அரிசி மாவு - 100 கிராம்

தேங்காய்த் துருவல் - 1 கோப்பை

பச்சை மிளகாய் - 2

இஞ்சி - சிறு துண்டு

வெங்காயம் - 2

கொத்தமல்லித் தழை - சிறிது

கறிவேப்பிலை - 2 கொத்து

உப்பு - ருசிக்கு

எண்ணெய் - கால் கிலோ

### எப்படித் தயாரிப்பது?

கடலையை ஊற வைத்து, நன்றாக வடிகட்டிக் கொள்ளவும்.

இலேசான ஈரப்பதத்தோடு, மிக்ஸியிலிட்டு, கெட்டியாக அரைத்துக் கொள்ளவும். அரிசி மாவு கலக்கவும். நறுக்கிய வெங்காயம், இஞ்சி, பச்சை மிளகாய், கொத்தமல்லித் தழை, கறிவேப்பிலை, தேங்காய்த் துருவல், உப்பு, சிறிது மஞ்சள் தூள், சேர்த்து நன்றாகப் பிசையவும்.

வடை மாவு பதத்தில் மாவு இருப்பது அவசியம். அகலமான வாணலியில் எண்

ணெய் விட்டு, சூடேற்றி, வடைகளாகத் தட்டி பொரித்தெடுக்கவும். சுவையான பொட்டுக் கடலை வடை தயார்.

*குறிப்பு:*

மிதமான தீயில் பொரித்தெடுத்தால் தான், உட்புறமும் நன்கு வெந்திருக்கும். கவனம் தேவை.

## பலாக்காய் பட்டி

***தேவையான பொருள்கள்:***

பலாக்காய் பிஞ்சு - ½ கிலோ
தேங்காய்த் துருவல் - ¼ மூடி
சீரகம் - ¼ டீஸ்பூன்
பச்சை மிளகாய் - 2
கறிவேப்பிலை - 1 கொத்து
கடுகு - 1 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு - 2 டீஸ்பூன்
மஞ்சள் தூள் - ¼ டீஸ்பூன்
உப்பு - தேவையான அளவு
தேங்காய் எண்ணெய் - 2 டீஸ்பூன்
வெங்காயம் - 2

***எப்படித் தயாரிப்பது?***

பலாக்காயின் முள்ளிருக்கும் மேல் தோலை நீக்கி, சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். அகலமான பாத்திரத்தில் தண்ணீர் விட்டு, பலாத் துண்டங்களை வேக விடவும்.

தேங்காய்த் துருவல், சீரகம், பச்சை மிளகாயை, தண்ணீர் விடாமல், ஒன்றிரண்டாக அரைக்கவும். வெங்காயத்தைப் பொடியாக நறுக்கவும். அடி கனமான வாணலியில் எண்ணெய் விட்டு, காய விடவும். கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, போட்டு தாளிக்கவும். வெங்காயம், அரைத்த தேங்காய்க் கலவை, சேர்த்து நன்றாக வதக்கவும்.

உப்பு, மஞ்சள் தூள் சேர்க்கவும்.




• பலாக்காய் பட்டி

இறுதியாக, வேக வைத்த பலாக் காயைச் சேர்த்து நன்றாகக் கிளறிவிடவும்.

உப்பு சேர்ந்து சுவை பரவியதும், இறக்கிவிடவும்.

*குறிப்பு :*

மிகவும் சுவையான கேரள உணவு இது! சுடு சாதத்தில் பிசைந்து சாப்பிட, ருசி அள்ளிக் கொண்டு போகும். சமைத்து முடித்த பின், நறுக்கிய கொத்தமல்லித் தழை, பொரித்தெடுத்த கறிவேப்பிலை கொண்டு அலங்கரிக்கவும்.

## காரக் கத்திரிக்காய்

*தேவையான பொருள்கள் :*

பெரிய கத்திரிக்காய் - 2
வெங்காயம் - 2
தக்காளி - 2
புளி - எலுமிச்சை அளவு
பச்சை மிளகாய் - 4
பூண்டு - 4
கடுகு - 1 டீஸ்பூன்

காய்ந்த மிளகாய் - 4
கறிவேப்பிலை - 1 கொத்து
நல்லெண்ணெய் - 50 கிராம்
மஞ்சள் தூள் - ½ டீஸ்பூன்
மிளகாய்த் தூள் - 1 டீஸ்பூன்
உப்பு - தேவையான அளவு

*எப்படித் தயாரிப்பது?*

கத்திரிக்காயை இட்லிப் பாத்திரத்தில் வைத்து நீர் ஆவியில் வேக விடவும். தோல் நீக்கி, மத்தாலோ, கையாலோ கடைந்து பிசைந்து கொள்ளவும்.

புளியை ஊற வைத்து சாறெடுக்கவும். வெங்காயம், தக்காளி, பூண்டு இவற்றை, பொடியாக நறுக்கிக் கொண்டு, பச்சை மிளகாயைக் கீறிக் கொள்ளவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு தாளிக்கவும். காய்ந்த மிளகாய், கறி வேப்பிலை சேர்த்து, வெங்காயம், தக்காளி, பூண்டு கலந்து வதக்கவும்.

அரைப்பதமாக வதங்கும் வரை காத்திருந்து, மஞ்சள் தூள், மிளகாய்த் தூள், உப்பு சேர்த்து நறுக்கிய தக்காளி போட்டு நன்றாக வதக்கவும்.

வதக்கிய மசாலாவில், கரைத்த புளியை ஊற்றி, பிசைந்த கத்திரிக்காயைச் சேர்த்து நன்றாகக் கிளறவும்.

சிறு தணலில் கொதிக்க விட்டால், விழுதானது அப்படியே சுண்டி, தொக்கு பதத்துக்கு வந்து விடும். உப்பு பார்த்து, இறக்கிவிடவும்.

சுவை, மணம், நிறம் மிக்க காரக் கத்திரிக்காய் ரெடி. இது இருந்துவிட்டால் ரஸமாவது, மோராவது. காரக் கத்திரிக் காயையே ஒரு பிடி பிடிக்கலாமே.

*குறிப்பு :*

முற்றாத குண்டு கத்திரிக்காய் மிகவும் ருசியாக இருக்கும். முட்கள் நிறைந்த

• காரக் கத்திரிக்காய்

வேலூர் கத்திரிக்காயிலும் செய்யலாம். கத்திரிக்காய்க்கு, எண்ணெயைத் தடவி தணலில் சுட்டு, பிசைந்து கொள்ளும் முறையும் சுவையாகத் தான் இருக்கும். பூண்டு பிடிக்காதவர்கள் பெருங்காயம் சேர்க்கலாம்.

# பால்கட்டி மிளகு

**தேவையான பொருள்கள்:**

பால்கட்டி (பனீர்) - 200 கிராம்
எண்ணெய் - ½ கிலோ
கரம் மசாலா - 25 கிராம்
(பட்டை, லவங்கம், சோம்பு, ஏலக்காய்)
வெங்காயம் - 4
தக்காளி - 4
இஞ்சி, பூண்டு விழுது - 1 டீஸ்பூன்
மிளகாய்த் தூள் - 1 டீஸ்பூன்
மிளகுத் தூள் - 2 டீஸ்பூன்
உப்பு - தேவையான அளவு

*எப்படித் தயாரிப்பது?*

பால்கட்டியை, சிறு துண்டுகளாக நறுக்கி, எண்ணெயில் பொரித்தெடுத்துக் கொண்டு, குளிர்ந்த நீரில் போட்டு வைக்கவும்.

வெங்காயம், தக்காளியை நறுக்கிக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு, கரம் மசாலாவைத் தாளித்து, வெங்காயம் சேர்த்து நன்றாக வதக்கவும்.

* பால்கட்டி மிளகு

வெங்காயம் பொன்னிறமாக வந்தவுடன், இஞ்சி, பூண்டு, விழுது போட்டு வதக்கவும். நறுக்கிய தக்காளி சேர்த்து, நன்றாக வதக்கவும். தொக்குப் பதம் வந்ததும், மிளகாய்த்தூள், உப்பு, மிளகுத் தூள் சேர்த்து நன்றாகக் கிளறவும்.

இறுதியாக, பொரித்த பால்கட்டியைச் சேர்த்துப் புரட்டி, கொத்தமல்லித் தழை, கறிவேப்பிலை சேர்த்து இறக்கவும். ருசியான பால்கட்டி மிளகு தயார்.

*குறிப்பு :*

இன்னும் நிறம் தேவைப்படுபவர்கள், மஞ்சள்தூள் சேர்த்துக் கொள்ளவும்.



• வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டு!

சோம்பு வாசம் பிடிக்காதவர்கள், தவிர்த்து விடலாம்.

# பூண்டு மிளகுக் குழம்பு

**தேவையான பொருள்கள்:**

பூண்டு - 50 கிராம்
எண்ணெய் - 50 கிராம்
கடுகு - 1 டீஸ்பூன்
வெந்தயம் - ½ டீஸ்பூன்
காய்ந்த மிளகாய் - 3
கறிவேப்பிலை - 1
சிறிய வெங்காயம் - 100 கிராம்
தக்காளி - 3
மிளகாய்த் தூள் - 1 டீஸ்பூன்
மல்லித் தூள் - 1 டீஸ்பூன்
மஞ்சள் தூள் - 1/4 டீஸ்பூன்
இடித்த மிளகு - 2 டீஸ்பூன்
புளி - பெரிய நெல்லிக்காய் அளவு
உப்பு - ருசிக்கு

*எப்படித் தயாரிப்பது?*

புளியை சுடு நீரில் ஊற வைக்கவும். பூண்டு, சிறிய வெங்காயத்தின் மேல் தோல் நீக்கிக் கொள்ளவும்.

இந்த நேரத்துக்குள் புளி ஊறியிருக்கும். நன்றாகக் கரைத்து, வடிகட்டவும். மிளகாய்த் தூள், மல்லித் தூள், மஞ்சள் தூள், உப்பு சேர்த்து கலக்கிக் கொள்ளவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, வெந்தயம், காய்ந்த மிளகாய், கறிவேப்பிலை தாளிக்கவும்.

அடுத்து வெங்காயம், பூண்டு போட்டு வதக்கவும். வதங்கியதும், தக்காளி சேர்க்கவும். இரண்டும் கலந்து வந்ததும், புளிக் கலவையை ஊற்றி நன்றாகக் கொதிக்க விடவும்.

குழம்பு, திக்கான பதத்துக்கு வந்தவுடன், மிளகுத் தூள் சேர்த்து, ருசி பார்த்து இறக்கி விடவும். கறிவேப்பிலை சேர்க்கவும்.

குறிப்பு:

இதில் இரண்டு ஸ்பூன் தேங்காய் அரைத்து ஊற்றினால், சுவை இன்னும் அதிக மதிப்பெண்கள் பெறும்.

## காளான் சில்லி ஃப்ரை

*தேவையான பொருள்கள்:*

காளான் (மஷ்ரூம்) - 200 கிராம்
எண்ணெய் - 50 கிராம்
கரம் மசாலா - 10 கிராம்
(பட்டை, ஏலம், லவங்கம்)
சோம்பு - ½ டீஸ்பூன்
வெங்காயம் - 3
தக்காளி - 3
இஞ்சி, பூண்டு விழுது - 1 டீஸ்பூன்
மிளகாய்த் தூள் - 2 டீஸ்பூன்
மல்லித்தூள் - 2 டீஸ்பூன்
மஞ்சள் தூள் - ¼ டீஸ்பூன்



* பூண்டு மிளகுக் குழம்பு

உப்பு - ருசிக்கு
கறிவேப்பிலை - 1 கொத்து
நறுக்கிய கொத்தமல்லித் தழை - 2 டீஸ்பூன்

***எப்படித் தயாரிப்பது?***

புத்தம் புதிய காளானை, நன்றாகக் கொதிக்கும் நீரில் போட்டு, போட்டவுடனேயே வடித்து, நறுக்கி வைத்துக் கொள்ளவும்.

'பால் கட்டி மிளகு'க்கு (காண்க. இதே இலவச இணைப்பில், முந்தைய பக்கங்களில்) செய்வது போல் மசாலா செய்து வைக்கவும். நறுக்கி வைத்துள்ள காளானை, மசாலாவில் சேர்த்து, நன்றாகப் புரட்டவும்.

கடைசியில், கறிவேப்பிலை, கொத்தமல்லித் தழை தூவி இறக்கவும். வித்தியாசமான சுவை கொண்ட காளான் ஃப்ரை, மணக்க மணக்க உங்கள் விருந்தை அலங்கரிக்கும்.

குறிப்பு :

அரை டீஸ்பூன் சோம்பை, பொன்னிறமாக வறுத்து இடித்து, காளான் வறுவல் மேல் தூவினால், வாசனையில் பக்கத்து வீட்டையே தூக்கிவிடும்.



## பால்கட்டி உருண்டைகள்

**தேவையான பொருள்கள்:**

ரொட்டித் துண்டுகள் - 4
தயிர் - 6 தேக்கரண்டி
பால் கட்டி (பனீர்) - 200 கிராம்
பேக்கிங் பவுடர் - சிறிது
பச்சை மிளகாய் - 2
கொத்தமல்லித்தழை - சிறு கட்டு
உப்பு - ருசிக்கு
குறு மிளகுத்தூள் - 1 டீஸ்பூன்
மைதா மாவு - 3 தேக்கரண்டி
முந்திரி - பத்து



எண்ணெய் - தேவையான அளவு

*எப்படித் தயாரிப்பது?*

புத்தம் புதிய ரொட்டித் துண்டுகளை எடுத்து, ஓரங்களை கத்திரியால் நறுக்கிக் கொள்ளவும்.

தயிரை நன்றாகக் கடைந்து, ரொட்டித் துண்டுகளின் இரண்டு பக்கமும் தடவவும். தயிர் தோய்ந்த ரொட்டித் துண்டுகளை, ஒரு நிமிஷம் தனியாக எடுத்து வைத்து விடவும்.

பால்கட்டிகளை, நன்றாகப் பிசைந்து கொள்ளவும். இதில் பேக்கிங் பவுடர், நறுக்கிய பச்சை மிளகாய் சேர்க்கவும். பொடியாக நறுக்கிய கொத்தமல்லித் தழை சேர்க்கவும்.

இத்துடன் தயிரில் ஊறிய ரொட்டித் துண்டுகளைச் சேர்த்து, நன்றாகப் பிசைந்து, உப்பு, மிளகுத் தூளையும் கலந்து பிசையவும்.

இறுதியாக, மைதா மாவைச் சேர்த்துப்

பிசையவும். பால்கட்டி மாவு தயார். இதை, சிறிய சிறிய உருண்டைகளாகச் செய்து கொண்டு, அதனுள் முந்திரியை வைத்து உருட்டவும்.

வாணலியில் எண்ணெய் காய வைத்து, சூடான பிறகு மிதமான தீயில் இந்த உருண்டைகளை இட்டுப் பொரிக்கவும். பொன்னிறத்தில் மிதந்து வந்ததும், சூடாகப் பறிமாறவும்.

சுவையான பனீர் பால்ஸ் தயார்! இதனுடன் தக்காளி சாஸ், புதினா சட்னி கூட்டணி சேர்ந்தால், சப்புக் கொட்ட வைக்கும்.

## பிஞ்சுசோளம் வித் பூண்டு சாஸ்

***தேவையான பொருள்கள்:***

பிஞ்சு சோளம் - 200 கிராம்

லவங்கம் - 2 - 3

இஞ்சி, பூண்டு விழுது - 1 தேக்கரண்டி

அரைத்த காய்ந்த மிளகாய் - ½ தேக்கரண்டி

எண்ணெய் - தேவையான அளவு

சாட் மசாலா - சிறிது

பேட்டர் (மாவு கலப்பதற்கு)

மைதா மாவு - ¾ கப்

கடலை மாவு - ¾ கப்

சோடா மாவு - தேவையான அளவு

உப்பு - ருசிக்கு

கொத்தமல்லித் தழை - சிறிது

***பூண்டு சாஸ் தயாரிக்க:***

பெரிய தக்காளி - ஆறு

தக்காளி சாஸ் - 3 தேக்கரண்டி

நறுக்கிய பூண்டு - 1 தேக்கரண்டி

காய்ந்த மிளகாய் (அரைத்தது) - 1 டீஸ்பூன்

வினிகர் - 1 தேக்கரண்டி



எண்ணெய் - சிறிது
உப்பு - ருசிக்கு
கொத்தமல்லி - சிறிது

*எப்படித் தயாரிப்பது?*

இரண்டு கோப்பை தண்ணீர் கொதிக்க விடவும். இதனுடன் இடித்த லவங்கம், உப்பு சேர்க்கவும். பிஞ்சு சோளத்தை சேர்த்து இரண்டு நிமிடம் வேக வைக்கவும். பிஞ்சு சோளம் என்பதால் சட்டென்று வெந்துவிடும். தண்ணீரை வடிகட்டி, சோளத்தை, சுத்தமான துணியில் துடைத்துக் கொள்ளவும். துடைத்து வைத்துள்ள சோளப் பிஞ்சுடன், இஞ்சி பூண்டு விழுது, அரைத்த காய்ந்த மிளகாய் சேர்க்கவும்.

மைதா, கடலை மாவு, சோடா மாவு, உப்பு, நறுக்கிய கொத்தமல்லித் தழையைச் சேர்த்து, தண்ணீர் விட்டு, கலக்கவும்.

பஜ்ஜி மாவு போல பொரித்தெடுக்கும் பக்குவத்தில் இருக்க வேண்டும்.

கடாய் பாத்திரத்தில் எண்ணெய் விட்டு, காய விடவும். எண்ணெய் புகைந்ததும், பிஞ்சு சோளத்தை மாவுக் கலவையில் தோய்த்து எடுத்து, எண்ணெயிலிட்டு, பொரிக்கவும்.

## பூண்டு சாஸ் செய்வது எப்படி?

அடி கனமான பாத்திரத்தில் சிறிது தண்ணீர் கொதிக்க வைத்து, அதனுள் தக்காளியைப் போட்டு, ஒரு நிமிஷம் வேக வைக்கவும். பின்பு தண்ணீரை வடிகட்டிவிட்டு தக்காளியை உரித்து, சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.



• பூண்டு சாஸ்

ஒரு சிறிய கடாய் பாத்திரத்தில் எண்ணெய் விட்டு, நறுக்கிய பூண்டு



• பசலைக் கீரை பப்பாயா

போடவும். இதனுடன் காய்ந்த மிளகாய் அரைத்துச் சேர்க்கவும். சிறிது நேரம்

கழித்து, வினிகர், தக்காளி சாஸ் சேர்த்து இறக்கி விடவும்.

ஒரு சிறிய தட்டில், வறுத்து எடுத்த பிஞ்சு சோளத்துடன் பூண்டு சாஸ் வைத்துப் பறிமாறவும். சூடான சோளத்தின் மீது சாட் மசாலா தூவினால் இன்னும் சுவையாக இருக்கும்.

## பசலைக் கீரை பப்பாயா

*தேவையான பொருள்கள்:*

பசலைக்கீரை - ஒரு கட்டு
நறுக்கிய பசலைக் கீரைத் தண்டு - அரைக் கிண்ணம்

பப்பாளிக் காய் துண்டுகள் - அரைக் கிண்ணம்

தேங்காய்த் துருவல் - அரை மூடி

நன்றாக வறுத்த காய்ந்த மிளகாய் - 5

புளி - எலுமிச்சை அளவு

வெல்லம் - சிறிது

வெங்காயம் - 1 (நீளமாக நறுக்கியது)

உப்பு - தேவையான அளவு

### எப்படித் தயாரிப்பது?

இளம் பசலைக் கீரையைக் கண்டவுடன், ஃப்ரெஷ்ஷாக பப்பாளிக் காய் கிடைக்கிறதா என்று நோட்டம் விடுங்கள். கிடைத்து விட்டால், சுவையான கறி ஒன்றைத் தயார் செய்து அசத்தி விடலாம்.



* தஹி பிண்டி

பசலைக் கீரையைத் தனியாகவும், தண்டைத் தனியாகவும், நறுக்கிக் கொள்ளவும். பப்பாளியின் மேல் தோலை

சீவும்போது பால் வரும். அதை நன்றாக நீரில் கழுவிவிட்டு, சிறு துண்டங் களாக் கவும். ஒரு வாணலியில் சிறிது நீர் விட்டு கொதிக்கவிடவும். பசலைக் கீரைத் தண்டு, பப்பாளியை முதலில் வேகவிட்டு, அரை வேக்காடானதும், பசலைக் கீரை, வெல்லம், உப்பு சேர்த்து வேக விடவும்.

தேங்காய்த் துருவல், புளி, காய்ந்த மிளகாயை நன்றாகக் கலந்து மசிய அரைத்துக் கொள்ளவும். இந்த மசாலா விழுதை, பசலைக் கீரையில் சேர்க் கவும்.

கொதித்து வந்ததும், இறக்கி வைக்கவும். நறுக்கிய வெங்காயத்தை, பொன்னிறமாக வறுத்து, அலங்கரிக்கவும்.

*குறிப்பு :*

வெல்லத்துக்குப் பதிலாக, இரண்டு பல் பூண்டு சேர்த்தால், அது வேறு விதமான ருசியைக் கொடுக்கும்.

# தஹி பிண்டி

***தேவையான பொருள்கள்:***

வெண்டைக்காய் - நூறு கிராம்
புளி - எலுமிச்சை அளவு
தயிர் - அரை லிட்டர்
உப்பு - ருசிக்கு
பச்சை மிளகாய் - 3
கடுகு - 1 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு - 1 டீஸ்பூன்
காய்ந்த மிளகாய் - 2
கறிவேப்பிலை - சிறிது
தேங்காய் எண்ணெய் - 2 டீஸ்பூன்
நறுக்கிய கொத்தமல்லி - சிறிது

***எப்படித் தயாரிப்பது?***

வெண்டைக்காயை பச்சைப் பசே லென்று மிகமிக இளசாகப் பார்த்து வாங் கவும். நன்றாகக் கழுவி, சிறு துண்டுகளாக

நறுக்கிக் கொள்ளவும்.

ஒரு கடாயில் தேங்காய் எண்ணெய் விட்டு, சூடான பிறகு, கடுகு, உளுத்தம்பருப்பு, காய்ந்த மிளகாய், கறிவேப்பிலை போடவும்.

சிறிய துண்டுகளாக நறுக்கி வைத்துள்ள வெண்டைக்காய் சேர்த்து, ஒரு புரட்டு புரட்டி, கரைத்த புளி, சிறிதளவு தண்ணீர் விட்டு வேக விடவும்.

ஆறிய பிறகு தயிர், நறுக்கிய பச்சை மிளகாய் சேர்த்து கொத்தமல்லித் தழை தூவி பரிமாறவும்.

சுவையான பிண்டி தஹி தயார். எல்லாவிதமான கலவை சாதத்துக்கும் ரொட்டி, சப்பாத்திக்கும் ஏற்றது.



• ஆலு டாப்ஸ்

குறிப்பு :

தயிர் மிகவும் புளித்திருந்தால், புளி



ையைக் குறைக்கவும். புளி சேர்க்க விரும்பாதவர்கள், தக்காளிச் சாறு சேர்க்கலாம். சுவை டபுளாகி விடும்.

# ஆலு டாப்ஸ்

தேவையான பொருள்கள்:

உருளைக் கிழங்கு - 2
எண்ணெய் - ஒரு தேக்கரண்டி
கடுகு - சிறிது
உளுத்தம் பருப்பு - அரை தேக்கரண்டி
கடலைப் பருப்பு - அரை தேக்கரண்டி
காய்ந்த மிளகாய் - 2
கறிவேப்பிலை - ஒரு கொத்து
மிளகாய்த்தூள் - ஒரு தேக்கரண்டி
உப்பு - தேவையான அளவு
தேங்காய்த் துருவல் - அரை மூடி

*எப்படித் தயாரிப்பது?*

உருளைக் கிழங்கை தோல் நீக்கி வேக வைத்துக் கொள்ளவும். வேக வைத்த கிழங்கை உதிர்த்து பிசைந்து உலர வைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, காய்ந்த மிளகாய், கறிவேப்பிலை போட்டு தாளிக்கவும். பிறகு இவற்றில் துருவிய தேங்காயைச்சேர்த்து நன்றாக வதக்கவும். வதக்கிய தேங்காயில் உப்பு, மிளகாய்த்தூள் சேர்க்கவும். உலர வைத்துள்ள உருளைக் கிழங்கை, வதக்கிய தேங்காயுடன் சேர்த்து உதிரியாக கிளரவும். உப்பு பார்த்து பொரித்த கறிவேப்பிலை, கொத்தமல்லி தழை சேர்த்து இறக்கி விடவும். ருசியான ஆலு டாப்ஸ் தயார். சாத வகைக்கும், ரொட்டி வகைக்கும் ஏற்ற சைட் டிஷ்!



• ஹாட் ஆனியன் பிந்தா

## ஹாட் ஆனியன் பிந்தா

*தேவையான பொருள்கள்:*

வெங்காயம் - 5

வெந்தயம் - 5 கிராம்
காய்ந்த மிளகாய் - 4
புளி - சிறிய உருண்டை
உப்பு - தேவையான அளவு
எண்ணெய் - தேவையான அளவு

*எப்படித் தயாரிப்பது?*

வெங்காயத்தை நன்றாக சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். ஒரு கடாயில் எண்ணெய் விட்டு, சூடான பிறகு வெந்தயத்தையும், சிவப்பு மிளகாயையும் போட்டு பொன் நிறமாக வதக்கிய பின்னர் ஆற வைத்து அரைத்துக் கொள்ளவும்.

புளியைக் கரைத்து, மண் போக வடிகட்டவும். எண்ணெயைச் சூடாக்கி, வெங்காயத்தை வதக்கவும். கரைத்த புளி ஊற்றி கொதிக்க விடவும். மிளகாய், வெந்தயக் கலவையைச் சேர்த்துக் கிளறி, சுண்ட வைக்கவும்.

சூடான சாதத்துடன் சேர்த்துச் சாப்பிட்டால் நன்றாக இருக்கும். இட்லி, தோசைக்கும் ஏற்றது. வெங்காயத்துடன் வெண்டைக்காய், கத்தரிக்காய் முருங்கைக்காய் சேர்த்தும் ஆனியன் பிந்தா செய்யலாம்.

## கண்ட கட்டா கீமா

*தேவையான பொருள்கள்:*

சேனைக் கிழங்கு - ½ கிலோ
சூரிய காந்தி எண்ணெய் - ½ கிலோ
தேங்காய்த் துருவல் - 1 கப்
கடுகு - ½ தேக்கரண்டி
சீரகம் - ¼ தேக்கரண்டி
முந்திரிப் பருப்பு - 50 கிராம்
பூண்டு (நசுக்கியது) - 5
மஞ்சள் தூள் - ½ தேக்கரண்டி

மிளகாய்த்தூள் - 2 தேக்கரண்டி
கறிவேப்பிலை - சிறிது
உப்பு - தேவையான அளவு

*எப்படித் தயாரிப்பது?*

சேனைக் கிழங்கைத் தோல் சீவி தண்ணீரில் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். சுத்தம் செய்த கிழங்கை, தண்ணீரில் ஊசி போன்று துருவிக் கொள்ள வேண்டும். துருவிய சேனைக் கிழங்கை, தண்ணீர் இல்லாமல் சுத்தமாகப் பிழிந்து எடுத்துக் கொள்ளவும்.



* கண்ட கட்டா கீமா

அடி கனமான வாணலியை வைத்து எண்ணெய் ஊற்றவும். எண்ணெய் சூடானதும் சேனைக் கிழங்கை உதிர் உதிராகப் போட்டு பொன் நிறமாக வறுத்து எடுக்கவும்.

வாணலியில் சிறிதளவு எண்ணெய் விட்டு சூடானதும் கடுகு சீரகம் சேர்க்கவும். பொரிந்தவுடன் முந்திரிப் பருப்பு, கறிவேப்பிலை, பூண்டு சேர்த்து, பொன்னிறமாக வறுக்கவும். பிறகு தேங் காய்த் துருவல், மஞ்சள் தூள், மிளகாய்த்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka.
Supplement to the Kalki issue Dated 1.6.2003



தூள், உப்பு சேர்த்து இளஞ்சூட்டில் வறுக்கவும்.

சேனைக் கிழங்குத் துருவலை ஐந்து நிமிடம் இக்கலவையுடன் சேர்த்துக் கிளறி பரிமாறவும்.

குறிப்பு:

சேனைக் கிழங்கைச் சீவும் போது தண்ணீருடன் சிறிதளவு மஞ்சள் தூள் சேர்த்தால் கலர் மாறாமல் அப்படியே இருக்கும்.

தொகுப்பு : அனுராதா சேகர்
படங்கள் : ஸ்ரீஹரி

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka